# தன்வந்தரி வைத்தியம்

## பாகம் - II






தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 333

# தன்வந்தரி வைத்தியம்

## ( இரண்டாம் பாகம் )

பதிப்பாசிரியர் :

**டாக்டர். S. வெங்கட்டராஜன்,** L. I.M.,

வைத்திய ஆராய்ச்சியாளர்,

சித்தவைத்திய வரலாற்று ஆராய்ச்சிக்கழகம்,

தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

**தஞ்சாவூர்.**

2006 ] [ விலை : ரூ. 75 - 00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : தன்வந்தரி வைத்தியம் (இரண்டாம் பாகம்) |
| பதிப்பாசிரியர் | டாக்டர் எஸ். வெங்கட்டராஜன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 333 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2006 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 208 |
| படிகள் | : 500 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : மருத்துவம் |
| விலை | : ரூ. 75 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

உலகம் முழுவதும் நோயற்ற ஒரு சமூகச்சூழல் திகழவேண்டும் என்பதற்காக நம் முன்னோர்கள் எண்ணற்ற மருத்துவ நூல்களை காலங்காலமாக நமக்கு வழங்கிச் சென்றிருக்கிறார்கள். அர்ப்பணிப்பு உணர்வோடு அவை யாக்கப்பெற்றமையால்தான் நூற்றாண்டுகள் பல கடந்தும் அவை நிலைத்திருக்கின்றன. அத்தகைய நூல்கள்வரிசையில் ஆயுர்வேத மருத்துவ அடிப்படையில் எழுந்த ஒரு நூலே தன்வந்தரி வைத்தியம் எனும் ஏட்டுச்சுவடியாகும்.

அரிய களஞ்சியமாக விளங்கும் இச்சுவடியினை உடைமையாகப் பெற்ற குடந்தை டாக்டர் எஸ்.மகாலிங்கஅய்யர் என்ற மாமனிதர் தனக்கோ அல்லது தன்வாரிசுகளுக்கோ இது உடைமையாக இருத்தல் கூடாது, மனிதகுலத்திற்கே உடைமையாக வேண்டும் என்ற தியாக உணர்வோடு சரசுவதி மகால் நூலகத்திற்கு வழங்கினார்.

திருவள்ளுவர்

> *"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
> *வாய்நாடி வாய்ப்பச் செயல்"* . என்றார்.

இந்த கருத்துவழி, நோய்களின் வகைகள், குறிகுணங்கள் ஆகியவற்றை மிகத்தெளிவாகவும், நுணுக்கமாகவும் விவரிக்கும் இந்நூல் நம் பாரம்பரிய மருத்துவத் திறனுக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. ஏட்டுச்சுவடியில் இருந்த இம்மருத்துவக் கருவூலத்தை செப்பமுற பதிப்பித்துத் தந்த பெருமை டாக்டர் எஸ். வெங்கட்ராஜன் அவர்களுக்குரியதாகும்.

முப்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்பு முதல் அச்சுப்பதிப்பை கண்ட தன்வந்தரி வைத்தியம் [இரண்டாம் பாகம்] எனும் இந்நூல் தற்போது மூன்றாம் பதிப்பாக மீண்டும் மலர்ந்துள்ளது.

இதனைச் சிறப்பாக அச்சிடுவதற்கு உறுதுணையாகத் திகழ்ந்த நிருவாக அலுவலர் திரு.சாமி. சிவஞானம், வெளியீட்டு மேலாளர் முனைவர் குடவாயில் பாலசுப்ரமணியன் ஆகியோருக்கும், பதிப்புத்துறை பணியாளர்களுக்கும் என் பாராட்டுக்கள்.

இந்நூலினை அச்சிட நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

**மா. வீர சண்முக மணி,** இ.ஆ.ப.,

*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,*

*சரசுவதி மகால் நூலகம்.*

*தஞ்சாவூர்,*

*24 - 4 -2006*

# முகவுரை

தஞ்சை சரஸ்வதி மகாலுக்கு அன்பளிப்பாக வந்த சுவடியான தன்வந்தரி வைத்தியம் என்ற சுவடியில் ஏற்கனவே 200 பக்கங்கள் தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலைய கால் ஆண்டு சஞ்சிகை மூலம் வெளியாகியுள்ளன. தற்போது 201 முதல் 360 பக்கங்கள் வரை இரண்டாம் பாகமாக்த் தொடர்ந்து வெளி வருகின்றன. முதல் பாகம் முழுவதிலும், இந்த இரண்டாம் பாகத்தில் பாதிவரையிலும், நோய்களின் குறிகுணங்களும், வகைகளும் மட்டிலுமே சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. சித்தவைத்தியத்தில் இம்மாதிரி நோயின் குறிகளைக் காட்டும் நூல்கள் மிகச்சொற்பமே. ஆகவே இதனைத் தேர்ந்தெடுக்க நேர்ந்தது. மற்றும் இந்தத் தொகுதியில் சுரரோக சிகிச்சை முறைகள் முதலானவைகளும் அடங்கியுள்ளன. ஆகவே இந்தப் புத்தகமும் வைத்தியப் பெரியோர்களுக்கும், ஏனையோர்க்கும் நன்கு பிரயோஜனப்படும் என்று நம்புகிறேன்.

இதனைத் தொடர்ந்து பதிப்பிக்க வாய்ப்பளித்த சரஸ்வதி மகால் நூல் நிலையக் கௌரவக் காரியதரிசி ஸ்ரீ O.A. நாராயணஸ்வாமி, B.A.,B.L., அவர்களுக்கு எனது நன்றி உரித்தாகும். இதனைப் பிழையின்றி அச்சிட்டுதவிய "ஸ்ரீ வாணீ விலாஸ்" அச்சகத்திற்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

*தஞ்சாவூர்,*
*20-7-66.*

Dr. எஸ். வெங்கட்டராஜன், L.I.M.

# தன்வந்தரி வைத்தியம்

## (இரண்டாம் பாகம்)

### சந்நிபாத கோழைப்பாண்டுவின் குறிகள்

*துன்னிய வுதரம் நொந்து சோறுசோ றாய்க்கழிந்து*
*மன்னிய தாகந் தண்ணீர் வாங்கியே வாந்தி செய்து*
*பின்னுங்கால் கெண்டை யேறிப் பிதற்றியே பிரேதம்*
*போலாய்*
*சந்நிபா தங்கள் கோழை பாண்டுவின் றகமை தானே. (115)*

(இ-ள்.) வயிற்றில் வலியேற்பட்டு சாப்பிட்ட ஆகாரம் அப்படியே சோறு சோறாகவே கழியும். அதிகமான தாகம் மேலிடும். தண்ணீர் குடித்தால் வாந்தியாகும். கால்களில் கெண்டையேறும். தன் நினைவில்லாமல் பிதற்றுவான். திடீரென கட்டையைப்போல் கிடப்பான். இவை சந்நிபாத கோழைப் பாண்டுவின் குறிகளாகும்.

### குடற்படுவலின் குறிகள்

*மலமது கழிந்து பின்னை வாந்தியே மிகவு முண்டாய்*
*சலமது கழிந்து தண்ணீர்த் தாகமு மோக முண்டா*
*யலைநுரை போற்கழிந்து வயிறழன் றெரித்து நொந்து*
*குலவிய விரத்தம் வீழுங் குடலினிற் படுவனாமே. (116)*

(இ-ள்.) மலம் விடாமல் கழியும். அதிகமான வாந்தியெடுக்கும். தண்ணீர்போலவும் கழிச்சலேற்படும். நாவறட்சி, மயக்கம் இவைகளுமுண்டாகும். வயிற்றில் வலி, எரிச்சல், நுரையுடன் மலம் வெளியாதல், இரத்தம் வீழ்தல் முதலான குறிகளும் காணில் அது குடற்படுவனாகும்.

## குடல்வாதக் குறிகள்

பேர்பெறு முதரந் தொட்டுப் பீஜமட் டாயிறங்கிச்
சோர்பட விதனஞ் செய்து விதைகளைச் சுழல வாங்குங்
கார்பெறு குழலாய்! இந்தக் குணந்தனைக் கண்டபோது
நீர்குடல் வாதமென்றே நிகழ்த்துவீர் புவியின்மீதே. (117)

(இ-ள்.) குடல் வயிற்றிலிருந்து பீஜப்பைக்குள் இறங்கும். பின்னர் தாங்கமுடியாத வலியுண்டாகி விதையையும் சுருட்டி இழுக்கும். இவை குடல்வாதக் குறிகளாகும்.

## மூலவாயுக் குறிகள்

வற்றும் மலந்தீயு மந்திக்கு மேல்வெளுக்குஞ்
சற்று மிரைச்சல் தணியாது - முற்றமது
மூலமது வாயு முதுகில் விலாப்புறத்திற்
சாலவே நோவு தருந் தான். (118)

(இ-ள்.) உடல் வற்றிப்போம். மலச்சிக்கலுண்டாகும், வயிறு மந்தமாகும். உடல் வெளுக்கும். வயிற்றில் இரைச்சலுண்டாகும். ஆசனம், முதுகு, விலாப்புறங்கள் முதலான இடங்களிலும் கடுப்பு வலியை உண்டாக்கும்.

## அண்டச்சூலைக் குறிகள்

வீங்கித் தடித்து விதன முற்றுப் பீசமொரு
பாங்கி லிரு புறத்திற் பற்றியே - தீங்குதரக்
கண்டித்துத் தாங் கலந்து......பொருந்துமேனி
வண்டத்துச் சூலையெனலாம். (119)

(இ-ள்.) விதைகள் வீங்கித் தடித்துத் தாங்கமுடியாத வலியையுண்டாக்கும். ஒரு பக்கத்து விதை அல்லது இருவிதைகளுமோ வீங்கும். மிக்க துன்பத்தையும் கொடுக்கும். இது அண்டச்சூலையின் லக்ஷணங்களாகும்.

### அண்டவாதக் குறிகள்

*கொண்டங்கு குடலிற்றங்கிக் குறைந்தொரு விதையிற்*
*றோன்றி*
*மண்டியே வலித்து வீங்கி மறுவிரை தனிலுந் தோன்றும்*
*பண்டிலிலொத்து வாங்கும் பகர்ந்திடு மண்ட வாத*
*மண்டரு முனிவர் தாமு மறியவே யுரைக்க லுற்றார். (120)*

*(இ-ள்.) வாயு முதலில் குடலில் தங்கிப் பின்னர் சிறிது குறைந்து ஒரு விதையில் இறங்கும். வலி, வீக்கம் இவைகள் அதிகரிக்கும். மறு விதையிலும் அம்மாதிரியே வலி வீக்கமுண்டாகும். மேல் மூச்சும் வாங்கும். இவை அண்டவாதக் குறிகளாகும்.*

### சுழல்வாயுக் குறிகள்

*குடலிடை கூப்பிட்டேறுங் குமுறிடும் விரையைச் சுற்றி*
*மிடைப்பட விதனஞ் செய்து மேனியு மெலிந்து நோவா*
*மிடுகுறி குணங்கள் கண்டால் சுழல்வாயு வென்னலாகும்*
*குடமுனி யருளிச்செய்த நூன்முறை குறித்துக்காணே. (121)*

*(இ-ள்.) குடலில் இரைச்சலும், பொருமலும் உண்டாகும். விதையைச் சுற்றிலும் வலியுண்டாகும். உடல்மெலியும். இவைகள் சுழல்வாயுக்குறிகளாகும்.*

### வத்திரகேசிக் குறிகள்

*மானி நீருதரந்தன்னில் வருந்தவே தனைகள் செய்யும்*
*போனகஞ் செரித்தறாது செரித்திடும் போது தன்னி*
*லூனுறு முதரத்தோடே யுளைந்திடும் நாபி நின்று*
*வானுற வலித்து விம்மும் வத்திர கேசி யென்னே. (122)*

*(இ-ள்.) வயிற்றில் வேதனையுண்டாக்கும். சாப்பிட்ட ஆகாரம் சரியாகச் செரியாது. உணவு சீரணமாகும் சமயத்தில் வலியும் ஏற்படும். தொப்புளைச் சுற்றிலும் உளைந்து வயிற்றுப் பொருமலும் உண்டாகும். இவை வத்திரகேசியின் குறிகளாகும்.*

## உண்டைக்குத்தின் குறிகள்

உற்றுறு முருமார்பின்கீ ழுன்னிநா லங்குலத்தில்
மற்றுமோர் பழுவூடோடி மருண்டது கனத்து விம்மிப்
பற்றுற வலித்துப் பின்னைப் பைய வூண்கெடுத்துச் சேரில்
முற்றுமே யிதனை நீயு முண்டைக் குத்தென்று கூறே. *(123)*

*(இ-ள்.)* மர்பிற்குக்கீழே 4 அங்குல அளவிலுள்ள பழுவெலும்பின் பக்கமாகக் கனத்து வீங்கும். தாங்கவியலாத வலியும் ஏற்படும். ஆகாரம் உட்செல்லாது. இவை உண்டைக்குத்தின் குறிகளாகும்.

## இதுவுமது

துய்யு வதரத்தினிடை துன்றி பல வேதனை
செய்து பழுவூடிடை செரிந்தது மரிந்து
கையடி யிருந்துழைத வசைப்பழுவு கண்டி
மெய்யறி வுணர்ந்த தமிழ் வேதமுனி கூறினர். *(124)*

*(இ-ள்.)* வயிற்றில் வலியுண்டாகும். பழுவெழும்பின் பக்கங்களில் வலியுடன் வீக்கம் உண்டாகும்.

## குடலடசியின் குறிகள்

மிடைப்பட வலித்தொரு புறத்திடை மிகுத்தே
குடற்குட கடத்திரைதல் கொண்டது புரண்டே
படபடெனவெய்யதுயர் பற்றுமது கண்டே
கடைக்குட லடசியெனவேகருது வீரே. *(125)*

*(இ-ள்.)* வயிற்றில் அதிகமான வலியுண்டாகிக் குடலில் கடமுட என்ற சப்தம் உண்டாகும். உளைச்சலும் அதிகமாகும். உடலில் படபடப்புடன் வேதனையும் ஏற்படும். இவை குடலடசியின் குறிகளாகும்.

## உழைச்சி ரோகக் குறிகள்

பைப்ப டுதரத்தினி லிருந்துடல் பரந்தே
யைப்புழை மிக்கவலி யெய்துமது கண்டால்

மைப்படும லர்க் குழலின் மானனைய மாதே!
பெய்க் கசிப்பு ழைச்சியென வேயறிகு வீரே. (126)

(இ-ள்.) ஆரம்பத்தில் வயிற்றில் வலியேற்பட்டுப் பின்பு அவை உடல் முழுவதும் பரவி விட்டால் அது உழைச்சி என்ற ரோகமாகும்.

## புறவாயுவின் குறிகள்

வாத மிஞ்சி யேவயின் வளர்ந் தெழுந்து டம்புகால்
சீத மிஞ்சி யே பசியு மன்றியொரு திங்களில்
கோத மிஞ்சி யே கொடிது கொண்டுசூலை கண்டிடு
மேதை மிஞ்சி மங்கமெங்கு மேவுசந்து குத்தியே. (127)

போற்றுமுத ரத்திடை பொருந்தி யதி வேகமாய்த்
தோற்றுமுது கிற்கிடை குறுக்கி னிடை சேருமே
லேற்றுமுழை வோடுவலி யெய்தி வுடல் நையவே
தோற்றுமிக் குணக்கிரிகை சொற்பிறப்புற வாயுவே. (128)

(இ-ள்.) வாதம் உடலில் அதிகரித்து உடம்பு, கால் இவைகளில் வலியைத்தரும். குளிர்ச்சி அதிகமாகி பசி குறையும். ஒரு மாதத்தில் சூலை நோயை உண்டாக்கும். தேகத்தில் வலி அதிகரிக்கும். வயிற்றிலும் வலியைத் தந்து விலாப்புறங்களையும் பற்றும். உடலில் வேதனையும் அதிகரிக்கும் இக்குறிகள் புறவாயு ரோகத்தில் காணும்.

## அங்கசூலையின் குறிகள்

புல்லுமுத ரத்தில்வலி பொங்கியுட லெங்குமே
கல்லுமது தேள்விடமெ னெக்கடு கடுக்குமே
செல்லனைய கூந்தல்திகழ் செங்கண்மட மங்கையே!
தொல்லுலகில் வலவமுனி சொல்லுமங்க சூலையே. (129)

(இ-ள்.) வயிற்றில் வலி ஆரம்பித்துப் பின்னர் உடலெங்கும் வியாபிக்கும். தேள் கொட்டினாப்போன்ற கடுகடுப்பை உண்டாக்கும். இது அங்கசூலையின் குறியாகும்.

## உள்ளடசியின் குணம்

துச்சவுத ரத்திலுற துர்க்குணவி தத்தையே
வெச்சுவித னத்தைவலி யத்தரும றுத்துமே
லெச்சிறுக ழுத்தடிக ளத்திடையி லெய்துமே
யச்சமுறு மிக்குணம தற்குடலுள் ளடசியே. *(130)*

*(இ-ள்.)* உதரத்தில் வேதனையதிகரித்து மார்புப்புற முள்ள விதனத்தில் வலியைக்கொடுக்கும். கழுத்தின் அடிப்புறத்திலும் வலியுண்டாகும். இவை உள்ளடசியின் லட்சணங்களாம்.

## அடிப்பழுச் சொருகியின் லக்ஷணங்கள்

சிக்கெனவ யிற்றில்வலி செய்துமுது கெய்தியே
துக்கமுற வோர்பழுது டித்திடவ டிக்குமே
யிக்குணம றுத்திடிலி சைக்குமுட லெங்குமே
மெய்க்கண மயர்த்திடும டிப்பழுச் சொருகியே. *(131)*

*(இ-ள்.)* வயிற்றில் வலி ஆரம்பித்துப் பின்னர் அது முதுகில் பரவும். மிக்க வேதனையைக் கொடுத்துப் பழுவெழும்பில் தாங்கவியலாத வலியைத்தரும். இதற்குச் சிகிச்சை செய்ய முற்பட்டால் வலி உடலெங்கும் வியாபித்து நோயாளியைப் பலஹீனமடையச் செய்யும். ஆகவே நிதானமாகச் சிகிச்சை செய்யவும்.

## வயிற்றடசியின் குறிகள்

சோகவுத ரத்தினிடை கீழ்வயிறு துன்னியே
நோகுமிக விம்மும்நுவ லாவலிகள் செய்யுமே
தாகமுற மூத்திரம லத்தையுந்த டுக்குமே
யாகுமிது வேகுணம டிவயிற் றடசியே. *(132)*

*(இ-ள்.)* அடிவயிற்றில் குத்துவலியுண்டாகும். வயிற்றுப் பொருமலும் ஏற்படும். நாவறட்சியைத் தரும். மலத்தையும் மூத்திரத்தையும் தடுக்கும். இவை வயிற்றடசியின் லக்ஷணங்களாகும்.

### வாதகண்டியின் லக்ஷணங்கள்

நாவுமுத ரத்தினிடை நாபியது தன்னின்மேல்
மேவுமிரு நாலுவிர லிற்கிடையி லுன்னியே
தீவரம தாகவலி செய்யுமென முன்னமே
கூவுமறை யாகமங்கொ டியவாத கண்டியே. (133)

(இ-ள்.) வயிற்றில் தொப்புளுக்குமேல் 4 விரற்கிடை யளவில் அதிகமான வலியைத் தரும். இது வாதகண்டி நோயின் குறிகளாகும்.

### சூலைவாயுக் குறிகள்

மற்றடிசி லுண்பதும றுத்திடும லத்தையே
செற்றிடுமு டற்சவிசி தைந்திடுமெ லிந்துதாள்
பற்றிடும்ப தைத்திடும்ப ரதவிக்கு மன்னமே !
யுற்றடிமு துகினிலு ளைந்த சூல வாயுமே. (134)

(இ-ள்.) ஆகாரத்தைத் தள்ளும். மலத்தைக் கட்டும். உடல் பலக்குறைவு ஏற்பட்டு மெலிந்துபோம். உடம்பில் வலி, பதைபதைப்பு, உள்ளம் படபடப்பு, முதுகில் வலி இவைகளும் ஏற்பட்டால் இந்நோய் சூலைவாயுவாம்.

வாதத்தினால் ஐம்பத்தாறும், பித்தத்தினால் முப்பதும், சிலேற்பனத்தினால் இருபத்திரண்டும் ஆக நூற்றெட்டு உதரரோக பேதங்கள் உண்டெனத் தெரிந்துகொள்ளவும்.

## ★அரிசை நிதானம்

### உள்மூலக்குறிகள்

மலத்தையிறுக்கி மந்தித்து வறண்டே யிரத்த மலத்தில் விழு
முலத்து முடம்பை நாடோறு மூடே வயிறு வலித்திருக்கும்
மலத்தி வெளியிற் காணாம லழையு முளையு மபானத்துட்
பலத்தைக் குறைக்குமுடல் வெளுக்கும் பேசுமிவையுள்
மூலமதே. (1)

---

★ அரிசை – அர்சஸ்.

(இ-ள்.) மலச்சிக்கலுண்டாகிப் பசி மந்தித்து இரத்தம் மலத்துடன் வெளியாகும். உடம்பு இளைக்கும். தினந்தோறும் வயிற்றுவலி ஏற்படும். அபானத்தில் உளைச்சல் உண்டாகும். பலம் குறைவடையும். உடல் வெளுத்துப்போம். மூலம் வெளியில் தெரியாது. இவை உள்மூலக் குறிகளாகும்.

## இரத்தமூலக் குறிகள்

தொப்புளும் வலித்து நொந்து துலங்கிட விரத்தம் வீழ்ந்து
அப்பொழு தந்தமூல மறியவே வெளியில் தள்ளுந்
தப்பரு மேனிவற்றித் தளர்வுடன் துயரந் தோன்று
மிப்படிக் குணவிரத்த மூலமென் றியம்பலாமே. (2)

(இ-ள்.) தொப்புளில் குத்துவலியுண்டாகி மலம் போகும்போது அதனுடன் இரத்தமும் வெளியாகும். அப்போது மூலமுளை வெளியே தள்ளும். நாளடைவில் உடல் இளைத்து துன்பமுண்டாகும். இவை இரத்தமூலக் குறிகள்.

## அபான மூலக்குறிகள்

கடுத்திடு மெரிப்புத் தோன்றுங் கனக்கவே தினவு தின்னுந்
துடுக் கென உதரம் பாயுத் துன்னுமாங் கிஷக்குதந்தான்
தடுத்திடு மபான வாயிற் சார்ந்திடு மூலந்தானே. (3)

(இ-ள்.) ஆசனத்தில் கடுப்பு வலியுண்டாகும். எரிச்சலேற்படும். அரிப்பு உண்டாகும். மலம் வெளியாகையில் இரத்தம் ஒழுகும். அபான த்வாரத்தில் மாம்ச முளை வந்தடைக்கும்.

குறிப்பு:- இச்செய்யுளில் ஒரு அடி காணப்படவில்லை.

## பிற மூலக்குறிகள்

உண்ட சோ றறாது நிற்கு மோங்கிய புளித்தேக்குண்டா
மண்டியே தண்ணீர் வாங்கும் வயிறது
பொருமிக்கொள்ளுங்
கொண்டெழு முடம் பழற்சி கொதித்திடு மலத்தைக்கட்டுந்
திண்டிற லபானவாயிற் சேர் பிற மூலந்தானே. (4)

(இ-ள்.) சாப்பிட்ட ஆகாரம் சீரணிக்காது. புளித்தேப்பம் உண்டாகும். தண்ணீர் தாகம் எடுக்கும். வயிற்றுப்பொருமல் ஏற்படும். உடம்பில் அழற்சியுடன் மலச்சிக்கலேற்படும். அபானவாயில் மூலம் வந்தடைக்கும். இவை பிறமூலக் குறிகளாகும்.

# அச்மரிக் குணம்

திருந்திய வாதபித்தச் சிலேற்பனம் பிரகோபித்தால்
வகுந்தசு மரித்தா நான்கு வகைப்படும் கல்லரிப்பன்
பிரிந்திடுஞ் சிலேற்பனாசு மரிபித்தா சுமரி பின்னு
மிருந்திடு சுக்கிலாசு மரிநான்கு மெய்துமென்றே. (1)

(இ-ள்.) வாதம், பித்தம்,கபம் முதலான தோஷங்கள் பிரகோபமடைந்தால் கல்லெரிப்பன், சிலேத்மனாச்மரி, பித்தாச்மரி, சுக்கிலாச்மரி என்ற 4 வகை ரோகங்களை உண்டாக்கும்.

## கல்லெரிப்பன் குணம்

சுத்துநீர் நாளந்தன்னிற் சுக்கிலந் தனிற் சிலேற்பம்
பித்தமீ துலர்த்தல் கல்லாய்ப் பீசகிநீ ரடைத்துக் கொள்ளுங்
கொத்துநீ ரீற்றுவீழுங் கொப்புள்நோ குடம்பு காயுஞ்
சித்தமா யருசி யுண்டாஞ் சேர்ந்தகல் லெரிப்பனாமே. (2)

(இ-ள்.) மூத்திரக்குழாய், சுக்கிலம் முதலான இடங்களில் கபமும் பித்தமும் அதிகரித்து உலர்ந்து, கல்லைப்போல் கெட்டியாகி நீரையடைக்கும். சிறுநீரும் சிறிது சிறிதாக இறங்கும். தொப்புளைச் சுற்றிலும் குத்துவலியுண்டாகும். ஜ்வரமடிக்கும். அரோசகமும் உண்டாகும். இவை கல்லெரிப்பன் குறிகளாகும்.

## சிலேத்மாச்மரிக் குணம்

நீர் வரு நாளந் தன்னில் நின்றுநீர் சிறுத்துக்கொண்டு
சோர்தரும் சிவப்பு வெண்மை சுக்கிலம் போலவீழும்

*பேர்பெற நாலா மெட்டுப் பின்னமாய்க் கல்லுவீழும்*
*ஏர்பெறு சிலேற்பனத்தில் அச்மரி என்னலாமே. (3)*

*(இ-ள்.)* சிறுநீர் வரும் துவாரத்தில் சிறு கற்களுண்டாகி நீரையடைக்கும். சிறுநீரும் கொஞ்சம் கொஞ்சமாக வெளிவரும். சிற்சில சமயங்களில் கற்கள் நாலு அல்லது எட்டுத் துண்டுகளாகி வெளியாகும். இது சிலேற்பனாச்மரிக் குறிகளாகும்.

*பித்தாச்மரிக் குறிகள்*

*பெய்யும்நீர் நாளந் தன்னில் பித்தத்தா லெரிப் பெழுந்து*
*செய்யுவுஷ் ணத்தால்வெந்து சேங்கொட்டை போறக்கல்*
*லுண்டாம்*
*நய்யவே தனைகள் செய்யும் நவில் குணம் பித்தந்தன்னில்*
*எய்தசு மரியென்றேமுன் னியம்பின ரறிவின் மிக்கோர். (4)*

*(இ-ள்.)* சிறுநீர் துவாரத்தில் பித்தம் சேர்ந்து எரிச்சலுண்டாகி உஷ்ணம் அதிகரித்து அழற்சியுடன் சேங்கொட்டையைப் போன்ற கல்லையுண்டாக்கும். அதிகமான வேதனையைக்கொடுக்கும். இது பித்தாச்மரிக் குறிகளாகும்.

*சுக்கிலாச்மரி குறிகள்*

*சுக்கிலம் வருங்காலத்தில் தம்பித்தாற் சுக்கிலந்தான்*
*மிக்ககல் லாகிவெம்பி விதனமாய் நீர்விடாமற்*
*சிக்கிநீர் விழா மலங்கே மணல் விழும் வெளுக்குந்தேகம்*
*மிக்குணஞ் சுக்கிலாசு மரியசாத் தியமென்றோதே. (5)*

*(இ-ள்.)* சுக்கிலம் வெளியாகும்போது அதனை வெளிவிடாமல் தம்பனம் செய்தால் அதுவே கல்லாகி நீரையடைத்து சிறுநீர் வெளியாகாமல் நின்று பின்னர் சிறு சிறு மணல்போல் வீழும். தேகம் வெளுக்கும். இவை சுக்கிலாச்மரிக் குணங்களாகும். இது அசாத்யரோகமாகும்.

# மூத்திரகிருச்சிர ரோக நிதானம்

அதிகஉட் டினபதார்த்த மசீரண பதார்த்தத்தாலும்
அதிகசம் போகக்தாலு மதுபான மடுக்கலாலும்
அதிகன மானவஸ்து உண்டியி லடுக்கலாலும்
அதிகமூத் திரமதன்னிற் கிரிச்சன மடுக்கமென்னே. (1)

அடுத்திடும் வாதபித்த மருங்கபஞ் சந்நிவாதந்
தொடுத்தமூத் திரக்கிரந்தி சுக்கிலக் கிரிச்சங் காதம்
அடுத்த சர்க்கரமே வாத குண்டலி வாதவத்தி
எடுத்திடுங் கிரிச்சனத்தின் பெயரிவை யீரைந்தாமே. (2)

(இ-ள்.) அதிகமான உஷ்ண பதார்த்தங்களாலும், அசீர்ண பதார்த்தத்தாலும், அதிக சம்போகத்தினாலும் (பச்சை மீன், காய்ந்த மீன், மச்சம் இவைகளின் உபயோகத்தாலும்) மதுபானங்களாலும் உதரத்திலே தோஷமுண்டாகி 10 வித மூத்திரக்கிருச்ரங்களை உண்டாக்கும்.

### பத்துவித மூத்ரகிருச்சிரங்களின் பெயர்

வாத கிருச்சனம்
பித்த கிருச்சனம்
சிலேற்பனகிரிச்சனம்
சந்நிவாத கிரிச்சனம்
மூத்திரக்கிரந்தி கிரிச்சனம்
மூத்திர சுக்கில கிருச்சனம்
மூத்திராகாத கிருச்சனம்
சர்க்காரா மூத்திரக் கிருச்சனம்
வாதகுண்டல கிரிச்சனம்
வாதவத்திக் கிரிச்சனம்

### வாத கிருச்சனக் குறிகள்

மேயநீர் விடுக்கில் நோவாம் வீழ்ந்தநீர் மிகவு நாறு
மேயநீர்த் துவாரங் காந்தி யெரிந்திடும் விதனமுண்டாந்
தோயுமிக் குணங்கள் வாத கிரிச்சன மென்னத் தோன்றும்
வாயு மா முனிவன் சொன்னா னறிகுவீர் புவியுள்ளோரே!. (3)

(இ-ள்.) மூத்திரம் விடும்போது குத்துவலியுண்டாகும். மூத்திரம் மிகவும் நாறும். நீர்த்துவாரத்தில் எரிச்சலுண்டாகும் வேதனையைத்தரும்.

**பித்தக் கிரிச்சனக் குறிகள்**

நீர் விடுங் காலந் தன்னில் நெலிவுற மெலிவு செய்யுஞ்
சோரு நீர் மஞ்சள் போலத் தோன்றிடுஞ் சிவந்து வீழும்
யேற் பெற வெரிந்து நொந்து கடுத்திடு மிக்கு ணங்கள்
கூர்விழி மானே பித்தக் கிரிச்சன மென்று கூறே. (4)

(இ-ள்.) மூத்திரம் விடுகையில் உடல் மெலிவு (வாட்டம்) அடையும். நீர் மஞ்சள் நிறமாகவோ அல்லது சிவந்தோ வெளிவரும். எரிச்சல், கடுப்பு, வலி இவைகளும் உண்டாகும். இவை பித்தக் கிரிச்சனத்தின் குறிகள்.

**கபக்கிரிச்சனத்தின் குறிகள்**

கூறுவீர்! விடுக்கி லாங்கே சுக்கிலங் கூட வீழும்
நாறு மூத் திரத்துவாரம் நலிவுற வெப்ப முண்டாஞ்
சீறு நீள் முகங் கனக்கு மிக்குணந் தெரியக் கண்டால்
வீறு சேர் சிலேற்பனத்தின் (கிரிச்சின) விதமி தென்னே. (5)

(இ-ள்.) சிறுநீர் விடுகையில் சுக்கிலமுங் கூட வீழும். மூத்திரத்துவாரத்தில் எரிச்சலுண்டாகும். முகம் கனக்கும். இவை சிலேற்பன கிரிச்சினத்திலுண்டாகும். குறிகளாகும்.

**சந்திவாதக் கிரிச்சனக் குறிகள்**

விதமுறு நீர் விடுங் கால் விதனமோ டெரிவு முண்டாங்
கதமுறு நீர்சிவந்து கழிந்துசுக் கிலமும் வீழ
மதமுறு நாற்றமுண்டா மயிலியல் மானே கேளாய் !
இதுகுணஞ் சந்திவாதக் கிரிச்சன மென்னே லாமே. (6)

(இ-ள்.) சிறுநீர் கழிக்கையில் அதிக வேதனையைக் கொடுக்கும். எரிச்சலும் உண்டாகும். சிறுநீர் சிவப்பாகவும் சில சமயங்களில் சுக்கிலத்துடன் சேர்ந்து வீழும். சிறுநீர் நாற்றமடிக்கும். இவை சந்நிபாத கிரிச்சனக் குறிகள்.

### மூத்திராகாதக் குறிகள்

மேவிய உதரந்தானே பொருமிவே தனைகளுண்டாந்
தாவுமூத் திரமிற்றிற்று சற்றுசற் றாகவீழு
மோவில்கல் லெரிப்பன் போலுங் குணமுமே வுண்டா
மென்னிற்
காவியங் கண்ணின் மாதே மூத்திரக் காத மென்னே. (7)

(இ-ள்.) வயிறு பொருமி வலியைத்தரும். மூத்திரம் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கும். கல்லெரிப்பான் போன்ற வேதனையைத்தரும். இது மூத்திராகாதக் குறிகள்.

### மூத்திரக்கிருச்சன சர்க்கரா குறிகள்

மூத்திரநாள நோவா மூர்ச்சையா முடம்பிளைக்குஞ்
சூத்திர விழி மயங்குந் தொண்டைக்கீழ் நெஞ்சு நோவாங்
காத்திரங் கடுக்கு முந்திக் கீழ்நொந்துக் கனத்துக் காணுஞ்
சாத்திரஞ் சர்க்கராமூத் திரக்கிரிச் சனமிதென்றே. (8)

(இ-ள்.) மூத்திரக்குழாயில் வேதனையைத்தரும். அடிக்கடி மயங்குவான். உடம்பு இளைத்துப்போம். மூர்ச்சையுண்டாகும். தொண்டைக்குக் கீழே நெஞ்சு நோகும். உடலில் கடுப்புவலி உண்டாகும். உடல் கனத்துப்போம். இவை மூத்திரக் கிருச்சன சர்க்கரையின் குறிகளாகும்.

### வாத குண்டலி லக்ஷணம்

இதமின்றி மூத்திரந்தான் யிற்றிற்றோர் துளியாய் வீழு
மதுநொந்து கடுத்தெரிந்து விதனமான யழுந்திக் காணுங்
குதம்நொந்து நீரைக்கட்டி வயிறது பொருமிக் கொள்ளு
மதமிஞ்சு கிரிச்சனத்தில் வாதகுண் டலியென்றோதே. (9)

(இ-ள்.) காரணமின்றி மூத்திரம் சாதாரணமாகத் துளிதுளியாயிறங்கும். அப்போது குத்துவலி உண்டாகும். பின்னர் ஆசனவாயில் எரிச்சலேற்பட்டுச் சிறுநீர் கட்டி வயிறு பொருமிக்கொள்ளும் இது வாதகுண்டலிக் கிரிச்சின லக்ஷணங்களாகும்.

**வாதவத்திக் கிரிச்சனக் குறிகள்**

*ஓதுமூத் திரம்வரும்போலிருக்குமோர் துளிவாராது*
*மீதொரு துளிதான் வீழில் மிகுந்தவே தனையுண்டாகும்*
*வாதை கீழ் வயிறு நீர்வாய் வருந்தக்கண் டிக்குங் கண்டா*
*லீது தான் வாதவத்திக் கிரீச்சன மென்பர் முன்னோர்.* *(10)*

(இ-ள்.) மூத்திரம் வரும்போலிருக்கும். போய் உட்கார்ந்தால் வெளியாகாது. அப்படி ஒருசொட்டு வந்தாலும் மிகுந்த வேதனையைக் கொடுக்கும். கீழ்வயிறு மூத்திரத்துவாரம் முதலானவிடங்களில் குத்துவலி உண்டாகும். இது வாதவத்திக் கிரிச்சனக் குறிகள்.

**மூத்திரக் கிரந்தி லக்ஷணங்கள்**

*முன்னமே இரத்தம் வீழு மூத்திரம் வராமலுள்ளே*
*உன்னியே யெரிவுண்டாகு மோது கல் லெரிப்பன் போலே*
*துன்னி வே தனையாய் நீர் வா துலங்கவே வீக்கமுண்டா*
*மென்னில் மூத் திரக்கிரந்திக் கிரிச்சன மிது வென்றோமே.*

(இ-ள்.) சிறுநீர் விட உட்கார்ந்தவுடனேயே இரத்தம் வெளியாகும். ஆனால் மூத்திரம் வாராது. நீர்த்தாரையில் எரிச்சலேற்படும். கல்லெரிப்பன் போல அதிக வேதனையைத்தரும். உடலில் வீக்கமும் உண்டாகும். இவை மூத்திரக்கிரந்திக் கிரிச்சனத்தின் குறிகளாகும்.

**மூத்திரக் கிரந்தியில் அசாத்ய லக்ஷணம்**

*என்றமூத் திரக்கிரந்தி யிழிந்தநீர் சஞ்சரித்துத்*
*துன்னவே சிவந்துவெள்ளை தோன்றி நொந் தெரித்து நீர்தா*
*னின்றொரு துளியாய் வீழ்ந்து நிறைந்தவே தனையுங் காணிற்*
*குன்றியல் மொழியினாளே! குணமசாத்தியமதாமே.* *(12)*

(இ-ள்.) நீர் சிவப்பாகவோ அல்லது வெள்ளை நிறமாகவோ இறங்கி அதிகமான கடுப்புடன் துளித்துளியாய் வீழ்ந்தால் அது அசாத்தியரோகமாகும்.

# பிரமேக நிதானம்

## பிரமேக ரோகத்திற்குக் காரணம்

கார்பெறு குழலார் தங்கள் கலவியி னொந்ததாலும்
பேர்பெறு முட்டினங்கள் சரீரத்திற் பெறுகையாலும்
பார்பெறு காரமான பதார்த்தங்கள் புசிக்கலாலும்
ஏர்பெறு சரீரந் தன்னிற் பிரமேக மெடுக்கு மென்றே. *(13)*

*(இ-ள்.)* அதிகமான ஸ்திரீ போகத்தினாலும், தேகத்தில் உஷ்ணம் அதிகமாவதாலும், அதிகக் காரமான பதார்த்தங்களைச் சாப்பிடுவதனாலும் பிரமேக ரோகம் சம்பவிக்கிறது.

## பிரமேகத்துடன் வரும் இதர ரோகங்கள்

எடுத்திடும் பிரமேகத்தா லெய்திடு மண்டவாதந்
தொடுத்திடுஞ் சூலபித்தஞ் சுரம்பவுத் திரம் விருத்தி
அடுத்தநீர்க் கிரிச்சம்வாயு வழையுழை வங்கரோக
மடுத்திடுந் தாதுநட்டம் வந்திடு மறிகுவீரே. *(14)*

*(இ-ள்.)* அண்டவாதம், சூலை, பித்தம், ஜ்வரம், பவுத்திரம், வ்ருத்தி, (குடல் இரக்கம்) மூத்திர கிருச்சரம், வாயு, வங்கரோகம், (உடலில் கரும்புள்ளி விழுதல்) தாதுநஷ்டம் முதலான பற்பல ரோகங்களும் பிரமேகத்துடன் தொடர்ந்து வரக்கூடியவை.

## பிரமேகம் பத்துக்கும் பெயர்

| | |
|---|---|
| சுக்கிலப் பிரமேகம் | மாங்கிஷப் பிரமேகம் |
| சுரோணிதப் பிரமேகம் | சோமரோகம் |
| சலப்பிரமேகம் | அத்திச்ராவம் |
| மலப்பிரமேகம் | பெரும்பாடு |
| தந்துப்பிரமேகம் | மூத்திரம்பாளை என்பன. |

## சுக்கிலப் பிரமேகக் குறிகள்

இயம்பு மிந்தக் குணமுடனே யுதிரமாகி
யியல்வாகு முடற்பொருத்தெல் லாந்தா னொந்து
செயம்பெறாச் சுக்கிலமு முன்னே வீழ்ந்து
சிறுநீருங் கடுத்து மிகக் கழியலாகும்
வயம்பெறுநற் கருவினுக்கு மாற்றமாகும்
மருவிடுகிற் செங்கலங்கக் குணத்தைக்காட்டும்
நயங்கொடுசுக் கிலப்பிரமே கந்தானென்று
நாற்றிசையுந் தானிசைய நவிலுவீரே. (15)

(இ-ள்.) தேகத்திலுள்ள மூட்டுகளில் குத்துவலி யெடுக்கும். சிறுநீர் வெளியாகுமுன் சுக்கிலம் வெளியாகும். அதிகமான கடுப்பு வலியுண்டாகும். இவை சுக்கிலப் பிரமேகக் குறிகளாகும்.

## சுரோணிதப் பிரமேகக் குறிகள்

நாற்றிசையும் புகழ்சிறுநீர் சிறுகவீழ்ந்து
நடுங்கியுடல் பதைத்திடும்நீர் கடுத்து வீழும்
சீற்றமுட னுந்தியின் கீழ் வயிறெரிந்து
செப்பரிதா யிரத்த (வாந்தி) யெடுக்கலாகு
மாற்றரிதாய் மூத்திரஞ் சிறுக்கலாகு
மாயிழையே சுரோணிதப் பிரமேக மென்னும்
போற்றரிய தமிழ்வல்லோர் ஆயுள்நூலிற்
பொருந்துகுண மீதெனவே புகன்றதாமே. (16)

(இ-ள்.) மூத்திரம் கொஞ்சமாகவிறங்கும். உடலில் நடுக்கம் உண்டாகும். மனதில் திகிலுண்டாகும். சிறுநீர் எரிச்சலுடன் வெளியாகும். அடிவயிற்றில் எரிச்சலும் வலியும் உண்டாகும். இரத்தமாக வாந்தி எடுக்கும். இவை சுரோணிதப் பிரமேகக் குறிகளாகும்.

**சலப்பிரமேகக் குறிகள்**

*நீர்வரு நா ளங்கடுத்துத் தடுத்தடைத்து*
*நின்று நின்று துளித்துளியா யிற்றுவீழுஞ்*
*சாரமுறு மலமுமதில் மிகவே வீழுந்*
*தரியாத வேதனையா யுடல் மயங்குஞ்*
*சேருநீர் நாளமுத லுந்தி மட்டுஞ்*
*செருமி வெந்து விதனமுடன் புண்ணுமாகும்*
*பாருமிந்தக் குணங்கள் சலப் பிரமேகத்தின்*
*பண்பெனவே குருமுனிவன்பகர்ந்த தாமே.* *(17)*

*(இ-ள்.)* நீர்த்துவாரத்தில் கடுப்புவலியுண்டாகி நீர் வெளிவராமல் அடைபடும். சிறுநீரும் துளித்துளியாகவீழும். முக்கி முக்கிப் போகும்போது மலமும் வெளியாகும். தாங்கமுடியாத வேதனையைக் கொடுக்கும். உடல் மயங்கும். அடிவயிறு பொருமி புண்போன்ற வலியைத் தரும். இவை சலப்பிரமேகக் குணங்களாகும்.

**மலப்பிரமேகக் குறிகள்**

*சீலமுறு முந்திதனில்நீர்தான் கட்டிச்*
*சிறுத்துநீ ரதுகுறுகித் திரிந்து வீழும்*
*நூலிழைபோ லந்நீர்தான் வீழும் போது*
*நொந்து கடுத் தெரிந்து மலங் கூடவீழுங்*
*கோலமிக வயிறூது மன்னந் தண்ணீர்*
*கொண்டருந்த வேண்டாது குணங் கண்டா*
*லேலமுறுங் குழலியரே! முன்னோர் சொன்னா*
*ரிகலுமலப் பிரமேகக் குணமிதென்றே.* *(18)*

*(இ-ள்.)* அடிவயிற்றில் நீர்கட்டிக்கொண்டு சிறுநீர் வெகு சிரமத்துடன் வெளியாகும். சில சமயங்களில் நூலிழைபோல் வெளிவரும். அப்போது மலமும் கடுப்புடன் வெளியாகும். வயிறுப் பொருமலேற்படும். அன்னம், தண்ணீர் முதலியவைகள் இறங்காது. இவை மலப்பிரமேகம் என்ற நோயின் குறிகளாகும்.

## தந்துப் பிரமேகக் குறிகள்

நாடோருமுடம்பு காந்தி நலிந்துற மெலிந்து வற்றும்
பீடோறும் புசிப்பு மன்றிப் பித்தமே பிரகோபித்து
வாடிநீரொத்து வீழும் வந்துநூ லிழைபோல் வெள்ளை
யோடுமே தந்துமேகம் வியாப்பிய ரோகமென்னே. *(19)*

*(இ-ள்.)* தினந்தோறும் உடம்பில் எரிச்சலுண்டாகும். தேகமும் மிகவும் இளைக்கும். பசி இராது. பித்தம் பிரகோபமடையும். நீர் அடிக்கடி வெளிவரும். அதில் நூல் இழைபோல் வெள்ளைக் காணும். இவை தந்துரோகக் குறிகள்.

## மேதோப்பிரமேக லக்ஷணங்கள்

உருகிடுஞ் சரீரமெல்லாம் வுலர்ந்துநா வுலர்ந்து காணுங்
கருகிடும் வதனமெல்லாங் காந்திடுங் காலுங்கையும்
பருகிடுந் தண்ணீர் தன்னைப் பரிந்த நீரிழுது நாறும்
பெருகிடுங் குணங்கள் மேதாப் பிரமேக மென்னலாமே. *(20)*

*(இ-ள்.)* சரீரம் வற்றி நாக்கு உலர்ந்துபோம். முகம் கருநிறமடையும். கைகளிலும் கால்களிலும் எரிச்சலுண்டாகும். தண்ணீர்த் தாகமெடுக்கும். சிறுநீர் நாறும். இவை மேதாப் பிரமேகக் குறிகளாகும்.

## சோம ரோகக் குறிகள்

சீர்பெறு சரீர மெல்லாந் தேசுகெட் டிளைத்து நொந்து
பேர் பெறு காந்த லுண்டாம் பெருகு போ சனம் வெறுக்குஞ்
சார் பெறு நீர்த்துவார மெரிவுடன் சாயும் வெள்ளை
யேர் பெறு குணங்கள் கண்டா லிதுசோம ரோகமென்னே.

*(இ-ள்.)* சரீரத்தில் தேஜஸ் குறைந்து இளைக்கும். உடம்பில் வேதனையும் எரிச்சலும் உண்டாகும். ஆகாரம் இறங்காது. சிறுநீர் துவாரத்தில் எரிச்சல் உண்டாகும். வெள்ளையும் அதிகமாக வீழும். இவை சோமரோகக் குறிகளாகும். இது ஸ்திரீகளுக்கு உண்டாகும் நோயாகும்.

## அத்திச்சார (அஸ்தி ஸ்ராவம்) க்குறிகள்

பலன்பெறு சரீர மெல்லாம் பஞ்சுபோல் வெளுத்துக் காயுஞ்
சலந்தனைத் தேடு மல்லாற் றேடிடா தன்னந் தன்னை
யுலந்திடு முடம்பு பித்த மோங்கிடும் வெள்ளை தானே
எலும்பினை யுருக்கிச் சாயு மிவையத்திச் சாரமென்னே. (22)

(இ-ள்.) சரீரம் முழுவதும் பஞ்சைப்போல் வெளுப்பாகும். ஜ்வரம் அடிக்கும். அதிகமாகத் தண்ணீர் பருகுவான். ஆகாரத்தில் இச்சை இராது. உடம்பு இளைக்கும். பித்தம் அதிகரிக்கும். எலும்பையுருக்கி விட்டாற்போல் வெள்ளை சாயும். இந்நோய் அத்திச்சாரம் என்ற நோயாகும்.

## பெரும்பாட்டின் குறிகள்

கையுடன் காலுங் காந்துங் காத்திர முலர்ந்து வற்று
மையலாங் கலவிதன்னை மறுத்திடுங் கர்ப்பங் கேடாஞ்
செய்யநீர் போலுஞ்சற்றே சிவந்திடுங் குருதிபோலும்
பெய்யுமே யாகில் மானே! பெரும்பாடென் றறிகுவீரே. (23)

(இ-ள்.) கை, கால்களில் எரிச்சலுண்டாகும். உடல் இளைக்கும். கலவியில் இச்சையிராது. கர்ப்பமும் தரியாது. நீர்போலும், சிவப்பு நிறமாகவும் இரத்தமாகவும் மர்மஸ்தானத்திலிருந்து கசியும். இது பெரும்பாடு என்ற நோயின் குறிகள். ஸ்திரீகளுக்கு ஏற்படும் நோயாகும்.

## மூத்திரப்பாளைக் குறிகள்

காத்திர மெலிந்து வற்றுங் கண்ணது மஞ்சணிக்குஞ்
சேர்த்திடு முதரத்துள்ளே சிறுவலி யெரிவுகாணுஞ்
சூத்திரம்போலே நீர்தான் துளித்துளி யாகவீழு
மூத்திரப்பாளை யென்றே முன்னை நூலுரைத்தவாரே. (24)

(இ-ள்.) உடல் இளைக்கும் கண்கள் மஞ்சள் நிறத்தையடையும். வயிற்றில் எரிச்சலும், வலியும் உண்டாகும். சிறுநீர் நூலிழைபோல் துளித்துளியாக வீழும். இவை மூத்திரப்பாளையின் குறிகளாகும்.

# மேகரோக நிதானம்

*மணிமுடி முகப்படர்செவ் வனப்பொளிர் வாரணத்தி*
*னிணையடி போற்றி செய்தே யியம்புது மிருபதான*
*பிணியெனு மேகரோக விதியினைப் பிரிக்கில் வாதம்*
*பணி பயித்தியஞ்சி லேற்பம் நாலாறு பத்ததாமே.* (1)

*(இ-ள்.)* வினாயகரைத் துதிசெய்து வாதத்தினால் ஏற்படும் 4 வகை பித்தத்தினால் உண்டாகும் 6 வகை கபத்தினால் ஏற்படும் 10 வகை மேகரோகங்களைக் கூறுவோம்.

### மேகநோய் வருங் காரணங்கள்

*தாளாமேகஞ் சாறும் வகை தன்னைக் கேளீர் மலக்கட்டாற்*
*கேளாச்சத்தங் காணாக்கண் கேட்டுங் கண்டும் போற்பேசிக்*
*கேழாய்க் கருத்திற் றாய்தந்தை குருவைப் பழிக்குந்*
*தோஷத்தால்*
*வாழாக்கன்னிக் கற்பழித்து வரம்பு தவறில் வருமென்றே.* (2)

*கோதையர் கலவி மிஞ்சிற் கொழுத்தமீ னிரைச்சி யுண்கிற்*
*போதவே பால்நெய் யுண்கிற் பொருமலே நீரையுண்கில்*
*நீதியில் காலந் தன்னில் நித்திரை விழித்தல் செய்யில்*
*தீதுறு மேகரோகஞ் சேர்ந்திடு மறிகுவீரே.* (3)

*(இ-ள்.)* மலச்சிக்கலாலும், கண்ணாலும், காதாலும் முறையே பார்க்காதவைகளையும் கேட்காதவைகளையும் கேட்டதாகவும், கண்டதாகவும், புறங்கூறுவதனாலும், தாய், தந்தை, குரு முதலானவர்களை பழிப்பதனாலும், கன்னிகளைக் கற்பழித்து வரம்பு மீறி நடப்பதனாலும் மேகரோகஞ் சம்பவிக்கும்.

ஸ்திரீபோகம் அதிகரிப்பதனாலும், மீன் இரைச்சி உண்பதனாலும், அதிகமாகப் பால், நெய் இவைகளை உண்பதினாலும், தண்ணீர் அதிகம் குடிப்பதனாலும், தூங்கவேண்டிய காலங்களில் கண்விழித்தலாலும் மேகநோய் சம்பவிக்கும்

### மேகநோயின் பூர்வரூபம்

*மண்டலந் தன்னிலுள்ள மாதர்க்கும் புருடர்க்குங்*
*கொண்டதோர் சலக்கழிச்சல் கொள்ளுமுன் காணுநோய்கள்*
*கண்டிடு முடல் கால் கைகள் கான்றழந் தெரிந்து காந்தி*
*யுண்டநீர் சுவறிக் காட்டி யுடைந்துநீர் கழியுமென்றே. (4)*

*(இ-ள்.)* சலக்கழிச்சல் ஏற்படுவதற்கு முன்னர், கீழ்க்கண்ட குறிகுணங்கள் காணும். உடல், கை கால் முதலியவிடங்களில் எரிச்சல், அழற்சி, அடிக்கடித் தண்ணீர் தாகம் முதலானவைகள் உண்டாகும். பின்னர் சலக்கழிச்சலில் கொண்டுவிடும்.

### மேகநோயின் வகைகள்

உட்டின ரோகத்தாலு முறுபெறும் பசியினாலுங்
கட்டவிழ் கோதைமாதர் கலவிமுட் டாமையாலுந்
தொட்டதோர் வாதபித்தந் தோன்றிய சிலேற்பத்தாலு
முட்டியே நாலுமாறு மும்மூன்று மொன்றுமாமே. (5)

*(இ-ள்.)* உஷ்ண ரோகத்தினாலும், பெரும் பசியினாலும், ஸ்திரீ சங்கத்தின் கோளாறுகளினாலும் உண்டாகும் இந்நோயை வாதபித்த சிலேத்ம ரோகங்களாகப் பிரித்து வாதத்தில் 4 வகைகளாகவும், பித்தத்தில் 6 வகைகளாகவும், கபத்தினால் 10 வகைகளாகவும் வகுத்துக் கூறுகின்றனர்.

### வாதமேகம் 4ன் பெயர்

| | |
|---|---|
| *சாம்பியமேகம்* | *மதுமயமேகம்* |
| *அப்பிய மேகம்* | *அசனிய மேகம்* |

### சாம்பிய மேகத்தின் குணம்

*பெண்படை மயிலன்னாரே! பேசு சாம்பிய மேகந்தான்*
*பண்புநீர் புலாலே நாறும் பசுவின்மூத் திரமேநாறுங்*
*கண்படு மிறைச்சி தன்னைக் கழுவுநீர் நிணமே காணும்*
*நண்புறக் காய்ச்சிக் கற்கம் நல்விளக் கேற்றலாமே. (6)*

(இ-ள்.) சிறுநீர் புலால் நாற்றமடிக்கும். சிற்சில சமயங்களில் பசுவின் மூத்திரத்தைப்போலும் நாறும். இறைச்சியைக் கழுவிய தண்ணீரைப் போன்றும் காணும். சிறு துணியை இம்மூத்திரத்தில் நனைத்துக் கொளுத்தினால் படபடப்பு இல்லாமல் எரியும். இவை சாம்பிய மேகத்தின் குறிகளாகும்.

## அப்பிய மேகக் குறிகள்

மைப்பெறு குழலின் மானே! மானிலந்தனிலுள்ளோருக்
கப்பிய மேகமானா லதுசெய்யுங் குணத்தைக் கேளாய்
நெய்த்துளி நீரிற் றோன்றும் நிலவிய கள்ளுநாறு
மெய்ப்புடன் காய்ச்சிக்கற்கம் விளக்கினி லெரிக்கலாமே. (7)

(இ-ள்.) மூத்திரத்துடன் நெய்த்துளி போன்று கொழுப்பும் வீழும். மூத்திரம் கள்ளைப்போன்று நாறும். இதனையும் துணியில் தோய்த்துக் கொளுத்தினால் எரியும்.

## மதுமயமேகத்தின் குணம்

மதுமய மேகமானால் வந்திடுங் குணத்தைக் கேளாய்!
பதிவுறத் தண்ணீருண்ணும் பார்க்கில் நீர் புலாலே நாறும்
விதபெறக் காய்ச்சிக் கற்கம் விளாவிய தேன்போலாகும்
புதிய மெல் லமிர்தவின் சொற் பூவையே! யறிகுவாயே. (8)

(இ-ள்.) தாகம் அதிகரிக்கும். அதனால் அடிக்கடி தண்ணீர் பருகுவான். மூத்திரம் கொழுப்பு வாடையடிக்கும். மூத்திரத்தைக் காய்ச்சினால் அது தேன்போல் கெட்டியாகும். இவை மதுமேகக்குறிகளாம்.

## அசனிய மேகக் குறிகள்

அசனிய மேகமானா லதுசெய்யுங் குணத்தைக் கேளாய்!
கசமதங் கள்ளுநாறுங் காய்ச்சினாலிழையுங் கண்டா
யிசைபெறு தாகந்தாப மெய்திடு முடம்பிளைக்குந்
தசையினை யுருக்குஞ் சொன்னோஞ் சைவக் கூந்தல்மானே!

(இ-ள்.) யானையின் மதநீர் போன்ற நிறமாகவும், கள்ளையொற்ற நாற்றத்தையுடையதாகவும் மூத்திரம் வெளியாகும். இதனைக் காய்ச்சி ஆறவைத்தால் சிலந்திவலைபோல இழைகள்காணப்படும். தாங்கமுடியாத தண்ணீர் தாகம், எரிச்சல், உடம்பு இளைத்தல், மாம்ஸ பலக்குறைவு முதலான குறிகுணங்களும் உண்டாகும்.

**பித்தமேகம் 6க்கும் பெயர்**

| | |
|---|---|
| அரித்ராமேகம் | சுரோணிதமேகம் |
| ஆமில மேகம் | நீலமேகம் |
| சுதை மேகம் | இழுதை மேகம் |

**அரித்திரா மேகக் குறிகள்**

அத்தம்போலும் நிறமாகும் அரித்ராமேகக் குணங்கேளாய்!
பித்தரோகமது மிஞ்சும் பெய்யும்நீரில் மஞ்சளூறும்
சுத்தச்சுவாச மதுவாகுஞ் சொல்லு மிரத மதுவாகும்
புத்தி கலங்குந் தாகிக்கும் பொன்போலுடம்பு
நிறமாமே. (10)

(இ-ள்.) சிறுநீர் மஞ்சள் நிறமாக இறங்கும். மேல்மூச்சு வாங்கும். புத்தி தடுமாறும். தாகம் உண்டாகும்.

**ஆமில மேகக் குறிகள்**

ஆமில மேகஞ் செய்யுங் குணந்தனை யறியச் சொல்வேன்
பூமயி லனையாய்! நீரில் மலத்தினிற் புளித்து நாறுந்
தாமயிலன்னந் தண்ணீர் சார்ந்திடி வரிதேயாகுஞ்
சேமமா முடம்பு நொந்து சிதைந்திடுங் சுண்டிடாயே. (11)

(இ-ள்.) சிறுநீர், மலம் முதலியவைகளிலிருந்து புளிப்பு வாடை வீசும். சாப்பாடு, நீர் இவைகளின் மேலிச்சையிராது. உடம்பில் குத்துவலியுண்டாகும்.

### சுதைமேகத்தின் குணம்

*பெண்ணோடு மயிலே கேளாய்! பேர்பெறு சுதைமேகந்தான்*
*சுண்ணாம்புக் கரைத்த நாற்றஞ் சுடலையிற் சாம்பல் நாற்றம்*
*பண்ணுயிந் நீரைக் குத்திப் பார்க்கினு மதுவேயாகு*
*மெண்ணாத சோகமேக மெய்ப்பிளப் பிவையுண்டாமே.(12)*

(இ-ள்.) சிறுநீர் சுண்ணாம்பு கரைத்த நீரின் நெடியடிக்கும். சுடலையிலு சாம்பலின் நாற்றமும் நாறும். நோயாளிக்கு மிக்கவேதனையைக் கொடுக்கும். உடலும் இளைத்துப்போம்.

### சோணித மேகத்தின் குணம்

*சுரோணிதப் பிரமேகத்தின் சூக்குமஞ்சொல்லக்கேளீர்*
*திராணிசெவ் வள்ளிக்காய்ந்து சிவந்த நீரலைபோற் காணும்*
*பிராணிகள் வாயில்வைத்தா லக்குணம் பிசகாதாகு*
*நாரணி! யறிந்து வேத நன்முனி பகர்ந்த தாமே. (13)*

(இ-ள்.) மூத்திரம் இரத்தம்போல் வெளியாகும். பிராணிகள் இம்மூத்திரத்தை நக்கினாலும் இரத்தத்தை நக்குவதைப் போன்ற உருசியுடன் உட்கொள்ளும்.

### நீலமேகத்தின் குணம்

*அரியதோர் நீலமேக மறிந்திடிற் றுருசு மின்னங்*
*கரியநீ லமதுதன்னைக் கரைத்தவன் னமதுகாணும்*
*பெருகு கள்ளும்போல் நாறும் பித்தமெழுப்புந்*
*தாகமுண்டாந்*
*தெரியுங் குணங்கள் பொதிகைமலைத் தெய்வமுனிவன்*
*செப்பியதே. (14)*

(இ-ள்.) மூத்திரம் துரிசைக் கரைத்த தண்ணீரைப்போல் நீலவர்ணமாக இருக்கும். கள்ளைப்போல் நாறும். உடலில் பித்தம் அதிகரிக்கும். தாகம் உண்டாகும். இவை நீலமேகத்தின் குறிகளாகும்.

## இழுதை மேகத்தின் குறிகள்

தாலத்திழுதை மேகமது தரையிற் கள்ளுவிழுந்ததுபோற்
சீலத்துடனே வழுவழுத்துத் திணுக்கிப் புலால்போல்
நாற்றமுண்டாங்
கோலத்தா... ... ...க்கை கொடுக்குந் தளர்ச்சி யுண்டாகும்
வாலக் குயிலே! அன்னநடை மயிலே! முந்நூல்
வளமையிதே. *(15)*

(இ-ள்.) மூத்திரம் கள்ளைப்போன்ற நிறத்துடனும். வழுவழுப்பாகவும் விழுந்து, புலால் நாற்றமடிக்கும் உடலில் தளர்ச்சியையுண்டாக்கும். இவை இழுதைமேக குறிகளாகும்.

## சிலேத்தும மேகம் பத்தின் பெயர்

| | |
|---|---|
| ஸௌரைமேகம் | அந்திரமேகம் |
| வாலமேகம் | சுனைமேகம் |
| நனைமேகம் | அத்திமேகம் |
| சீயக்காய்மேகம் | சலமேகம் |
| லவணமேகம் | சுக்கிலமேகம் |

## ஸௌரைமேகக் குறிகள்

வந்திடும் சுரைமேகத்தின் குணமது வகுக்கக்கேளாய்
தந்திடும் நீரில்வெள்ளை சார்ந்திடுங் கள்ளுப்போல
சிந்திடும் நீரிலந்த வாசமே செறியுந் தேகம்
நொந்திடுங் கண்டாய்! கெண்டை
நொக்கியமயிலன்னாரே. *(16)*

(இ-ள்.) நீர் கள்ளைப்போன்ற வெண்ணிறமாகவும் அதே நாற்றத்துடன் வெளியாகும். உடல் வலியும் உண்டாகும். இவை ஸௌரைமேகக் குறிகளாகும்.

**வாலிய மேகக்குறிகள்**

வாலிபமேகஞ் செய்யுங் குணந்தனை வகுக்கக்கேளாய்
பாலியல் நுரையதாகப் பரியும்நீர்க் கடுப்புமுண்டாஞ்
சீலமாக் கரைத்தாப்போலச் சேர்ந்து நீரடியிற் பற்றுங்
கோலமா மயிலே! யிந்தக் குறிகுணங் கண்டுகொள்ளே. *(17)*

*(இ-ள்.)* நீர் விடும்போதும் பின்னரும் பாலின் நுரையைப் போன்று கடுத்து நீர் விழும். சிறிது நேரஞ்சென்று மூத்திரத்தின் அடியில் மாவைப்போன்ற கசடு படியும். இவை வாலிய மேகக்குறிகள்.

**நனைமேகத்தின் லக்ஷணங்கள்**

பேர்பெறு நனை மேகத்தின் குணந்தனைப் பேசக்கேளாய்!
சோர்தரு நீர் தெளிந்து தூய்மையாயிருக்குங் கண்டாய்
யேர் பெறத்தீயிற்காய்ச்சி லெழும்பிடும் நாற்றந்தானே
வார் பெறு குடமென் கொங்கை மயிலியல்
மதவேற்கண்ணே! *(18)*

*(இ-ள்.)* சிறுநீர் துல்யமாக இறங்கும். ஆனால் அதைக் காய்ச்சிப் பார்த்தால் வெகு துர்நாற்றமடிக்கும். இவை நனைமேகக் குறிகளாகும்.

**சீயக்காய் மேக லக்ஷணம்**

சற்றுசற் றாகவேநீர் வீழ்ந்திடுங் கடுப்புத்தானே
முற்றிடு முறக்கம் நீங்கு முலாவிடு முலரும் நாவு
குற்றநீர் காய்ச்சிப் பார்க்கில் குணஞ்சீயக் காய்போல் நாறும்
பற்றுசீயக்காய் மேக மிதுவெனப் பகர்கின்றோமே. *(19)*

*(இ-ள்.)* சிறுநீர் கொஞ்சம் கொஞ்சமாக வெளியாகும். தாங்கமுடியாத கடுப்பு உண்டாகும். தூக்கம் இராது. நாக்கு வறண்டுபோம். நீரைக் காய்ச்சி முகர்ந்தால் சீயக்காய் நாற்றம் அடிக்கும். ஆகவே இதனைச் சீயக்காய்மேகம் என்று கூறுகிறார்கள்.

## லவண மேகத்தின் குணம்

கூறிய லவணமேகக் குணந்தனைக் கூறக்கேளாய்!
மாறியே உவர்க்கரைத்து வைத்தநீர் நிறமேபோலாய்
நாறியே நைந்து நொந்து நலிந்துடல் மெலிந்துதாக
மீறியே யிருக்குமென்று விமலநூலுரைத்தவாறே. (20)

(இ-ள்.) சிறுநீர் உவர்மண்ணைக் கரைத்துவைத்த நீர்போன்ற நிறத்துடனும், நாற்றத்துடனும், குத்து வலியுடனும் வெளியாகும். உடல் மெலியும். தாகம் மேலிடும். இவை லவணமேகத்தின் குறிகளாகும்.

## அந்திரமேகத்தின் குணம்

ஓமந்திரமேகத்தின் குணந்தனை யுரைக்கக்கேளாய்
வாங்குமே தண்ணீர் தன்னை வடியுமே றளவில்லா நீர்
நீங்குதீ ரிளநீர்போல நிறம்பெறும் நாற்றமுண்டாம்
கோங்கிள முலையாய்க்கும்பக குருமுனியுரைத்தவாறே. (21)

(இ-ள்.) இளநீரையொத்த நிறத்துடன் சிறுநீர் மிக்க அதிகமாக வெளியாகும். இளநீரின் வாடையடிக்கும். இவை அந்திரமேகக்குறிகளாகும்.

## சுனைமேகக் குறிகள்

உட்குண்ட சுனைமேகத்தின் குணந்தனை யுரைக்கக்கேளாய்
கட்டுண்ட சுனைநீர் போலுங் கரும்பினிற் சாறுபோலுந்
தட்டுண்ட கூரைநொந்த சருகில் வீழ் தண்ணீர் போலு
மிட்டுண்ட வாழான்செல்வ மென்னநீ ரிறங்குமென்றே. (22)

(இ-ள்.) தேங்கிய சுனை நீரைப்போலவும் ்ருப்பஞ்சாற்றைப் போலவும், சிறுநீர் காணப்படும். ்ரையின் கூடல்வாய் அடைபட்டு அதன்வழியாக ழைத்தண்ணீர் தேங்கித்தேங்கிக் கீழே எவ்வாறு விழுமோ 'வ்வாறு சிறுநீர் ஒரே தாரையாக வராமல் நின்று நின்று

வெளியாகும். ஈயாத லோபியின் செல்வம் எவ்வாறு சிறுகச் சிறுக வெளியாகுமோ அதேபோல நோயாளி சிரமப்பட்டுச்சிறுநீர் விடுவான்.

சுனைமேகம்=சனைர்மேகம் என்பதின் திரிபு. (மெள்ள மெள்ள வெளியாதல் எனப்பொருள்.)

## அத்திமேகத்தின் குறிகள்

வேகமா மத்திமேகத்தின் குணந்தனை விளம்பக்கேளாய்
பாகமாந் தயிர் நீர்போலும் பகர் பன்னீர் போலுமாகும்
சோகமாயுடம்பிளைக்குந் துயரமு மிகுந்து தோன்றும்
தாகமாங் குணங்கள் தன்னைத் தையலே! யறிகுவாயே. (23)

(இ-ள்.) தயிரின்மேல் தெளிவைப் போலவும். பன்னீரைப்போலவும், மூத்திரம் வெளிவரும். உடம்பு இளைக்கும் அதிகவேதனையைத்தரும். இவை அத்திமேகக் குறிகளாகும்.

## சலமேகத்தின் குணம்

பெருகிய சலமேகத்தின் குணந்தனைப் பேசக்கேளாய்
மருவிநீ ரருவிபோலே வந்திடுந் தாகமுண்டாங்
கருகியே மலமும் வீழுங் கரபாத மெரிவுண்டாகு
முருகவே தீயிற் காய்ச்சி லூற்றதுற் கெந்தமாமே. (24)

(இ-ள்.) சிறுநீர் அருவிபோல் அதிகமாகப்போகும். மலம் கருத்து வீழும். கைகால்களில் எரிச்சலேற்படும் சிறுநீரை நெருப்பில் காய்ச்சினால் மிக்க துர்கந்தம் அடிக்கும்.

## சுக்கிலமேகக் குறிகள்

சுக்கிலமேகஞ் செய்யுங் குணமது சொல்லக்கேளாய்
மிக்கநீ ரிறங்கும் போது வீழ்ந்திடுஞ் சலமுங்கூடத்
தக்கமீன் போலநாறுஞ் சரீரமும் நொந்துவாடும்
மைக்கயல் விழியாய்! வேத மாமுனிவுரைத்தவாறே. (25)

(இ-ள்.) மூத்திரத்துடன் சுக்கிலமும் சேர்ந்துவீழும். மூத்திரம் மீன் கழுவிய தண்ணீரைப் போல நாற்றமடிக்கும். உடலிலும் குத்துவலியுண்டாகும்.

### வாதநீர் நான்கிற்கும் பொதுக்குணம்

*மூளையும் நிணமும்போல முறிந்த சுக்கிலமே போல*
*ஆளரி வேலுங்கோலு மணங்கனும் அம்புபோல*
*நீளிய நரம்புபோல நீர்தனி லெண்ணெய் காணில்*
*வாளினை வென்ற கண்ணாய்! வாதத்தின் கூறுதானே. (26)*

(இ-ள்.) வாயகன்ற பாத்திரத்தில் மூத்திரத்தைவிட்டு அதில் 1 துளி நல்லெண்ணெய் தெரிக்கவும். அப்போது அவ்வெண்ணெய்துளி மூளையும் நிணமும் போலவோ அல்லது முறிந்த சுக்கிலம் போலவோ வெண்ணிறமாகக் காணப்பட்டாலும் அந்த எண்ணெய்த்துளி வேலைப் போலவும் மன்மதபாணம் போலவும் நீண்ட நரம்பைப்போலவும் பரவி நின்றாலும் அது வாதத்தின் லக்ஷணங்களாகும்.

### பித்தரோகக் குறிகள்

*பையரவல்குல் மாதே! பாருள் ளோர்கிழிந்த நீரிற்*
*கையிலேயெண்ணெய் வாங்கிக் கழிந்ததோர் துரும்பாற் குத்த*
*மையிறு மேனியொத்த வட்டஞ் செய்திருக்குமாகில்*
*அய்யுறு நீரதாகு மல்லதாற் பித்தமாமே. (27)*

(இ-ள்.) கையில் சிறிது நல்லெண்ணெய் விட்டு அதிலிருந்து ஒரு துரும்பினால் ஒரு துளி எடுத்து நீரில் குத்தவும். அப்போது கருநிறமுள்ள வட்டம் உண்டானால் அது பித்த நோய்க்கு அறிகுறி எனத்தெரிந்து கொள்ளவும்.

### வாதமேகத்தில் நீரின் நிறம்

*கடிதரு மிறைச்சிதன்னைக் கழுவும்நீர் நிறமே போலும்*
*படிதரும் பசும் புற்றின்னப் பழகுகோசலமே போலும்*
*வெடிதரு நிறமேவாத மேகத்தின் குணமதாமே. (28)*

*(இ-ள்.) மூத்திரம் இறைச்சி கழுவிய தண்ணீரின் நிறத்தையொத்திருக்கும். பசுவின் மூத்திரம் போன்ற நிறம் காணும். இவை வாதமேகக்குறிகள்.*

**பயித்திய மேகத்தில் நீரின் லக்ஷணங்கள்**

*நீலமா நிறமே மஞ்சள் நிறம்புளி கரைத்த வண்ணஞ்*
*சாலவே யெரித்த சாம்பற் நனைக்கரைத் திடுநீர்வண்ணஞ்*
*காலமே பலவாமாட்டின் கொழுத்தமாங் கிஷநீர் போலும்*
*பாலை நேர் மொழியாய்! காணிற் பயித்திய மேகமாமே. (29)*

*(இ-ள்.) சிறுநீர் நீலநிறமாகவோ அல்லது மஞ்சள் நிறமாகவோ அல்லது புளியைக் கரைத்த தண்ணீரின் நிறமாகவோ, சாம்பரைக்கரைத்த தண்ணீரின் நிறமாகவோ, எருமை மாட்டின் கொழுப்புத் தண்ணீர் போன்றும் காணும். இவை பித்தமேகத்தின் குறிகள்.*

**[illegible]மேகத்தில் நீரின் [illegible]**

அரும்புன லருவிக்கு மடிக்கரும் பதனிற் சாறும்
விரும்பிய தயிர்பால் நீரும் விறகு (விரைவு)டன்
றோற்றமாகுந்
திருந்திய தேனுமாகுஞ் சிறந்த யிவ்வாறு நல்லக்
குரும்பை மென் முலை நன்மாதே! சிலேற்பனக்
கூறென்றோமே. *(30)*

*(இ-ள்.) மூத்திரம் அருவி நீரின் நிறமாகவும், அடிக்கரும்பின் சாற்றைப் போன்றும், தயிரின் நீர், முறிந்த பாலின் தோற்றமாகவும், தேன் நிறமாகவும் இருக்கும்.*

# *பவுத்திர நிதானம்*

*புவிமிசை வாழ்கின்ற புருஷர் மங்கைய ரிவர்க்கு*
*சவிகெட வரும் பவுத்திரந்தான் செய்யுங்குறிகுணங்க*
*ளவையினிற் சாத்தியங்க ளசாத்திய மதன்பேர் தானும்*
*குவிமுலை மானே! சொல்லக்கேட்டு நீ குறித்துக்கொள்ளே!*

(இ-ள்.) பூவுலகில் வாழ்கின்ற ஆண், பெண் இவர்களுக்கு உண்டாகும். பவுத்திர ரோகத்தின் வகைகள், சாத்யாசாத்யம் முதலானவைகளைச் சொல்லுகின்றோம்.

### பவுத்திர நோய் உண்டாகக் காரணம்

உட்டண ரோகத்தாலும் மொண்டொடி வருத்தத்தாலும்
வட்டமா முதரத்துள்ளே வளர்மலங் கிருமியாலு
முட்டி நீர் செறுத்து விம்மி முளைத்த மாங் கிஷங்களாலும்
துட்ட மாம் ரோகமாகும் பவுத்திரத் தோஷமாமே. (2)

(இ-ள்.) உஷ்ணரோகத்தினாலும், ஸ்திரீ போகத்தாலும் வயிற்றில் மலம் சேருதல், கிருமி சேருதல் முதலானவைகளினாலும், மாம்ஸ முளை உண்டாகிப் பவுத்திரத்திற்குக் காரணமாகும்.

### பவுத்திர நோய் உண்டாகுமிடம்

அண்டத்து மூலச் சுற்று மாசனந்தனிலு மப்பால்
துண்டத்து நரம்பின் மேலுஞ் சொல்லிய பக்கமிரண்டு
முண்டித்த பீசத்தோடு முளைத்திடு நாடி முன்புங்
கண்டிக்கும் வியாதியென்னும் பவுத்திரத் தலமாங்காணே!

(இ-ள்.) விரையின் அடிப்புறம், ஆசனத்தின் சுற்றுப்புறங்கள், அதன் வெளிப்புறம், பீஜத்திற்கும், மலத்வாரத்திற்கு இடையிலுள்ள நரம்பு, அதன் இரு பக்கங்கள் பீஜத்துடன் கூடிய நாடிக்கு முன்புறம் ஆக இப்பிரதேசங்களில் இந்நோய் உண்டாகும்.

### பவுத்திரங்களுக்குப் பெயர்

ஆசனப் பவுத்திர மென்றும் அண்டத்திற் பவுத்ர மென்றும்
பேசிய பக்கமண்டம் புடைத்திடும் பவுத்ரமென்றுங்
கோசமாங் கொடியின் மீதே கொதித்தெழும்
பவுத்ரமென்றும்
காசணி முலையாய்! தண்டிற் பிளவை
யோடாறுங்காணே! (4)

*(இ-ள்.)* ஆசனப் பவுத்திரம், அண்ட பவுத்ரம், பக்கப் பவுத்திரம், அண்டம் புடைத்த பவுத்திரம் (கொடிப் பவுத்திரம்) கோச பவுத்திரம், தண்டிற்பிளவை என்று ஆறு வகைப்படும்.

**அசாத்ய குணம்**

அண்டத்தில் வெடித்தலாலும் அதன் கீழே கொடியிலாலு
முண்டித்த பீசத்திற்கு முன்பாக வெடித்தலாலுந்
தெண்டித்த மருந்தினாலுங் கருவியினாலுந் தீரா
தண்டத்து முனிவோர் சொன்னார் ஆயுர் வேதமாமே ! (5)

*(இ-ள்.)* அண்டப் பவுத்திரம், கொடிப்பவுத்திரம், பீஜத்திற் முன்பாக ஏற்படும் (கோச பவுத்திரம்) இவைகள் மருந்தினாலும், கருவியினாலும் தீராது.

**சாத்ய பவுத்திரம்**

பாரிச மிரண்டிற் றோன்றும் பவுத்திர மதுவும் பின்னைக்
கூறிய மூலச் சுற்றிற் கொதித் தெழும் பவுத்திரந் தானும்
ஆரணத்துரை செய்கின்ற ஆசனப் பவுத்திரந் தானும்
நேரிழையாளே தீரும் நிச்சயமாகுந் தானே ! (6)

*(இ-ள்.)* பக்க பவுத்திரங்கள், ஆசனத்தைச் சுற்றிலும் உண்டாகும் மூலப் பவுத்திரமும், ஆசன பவுத்திரமும் தீரும்.

**சாத்யம் மூன்றின் பெயர்**

*(1)* பக்கப் பவுத்திரம்
*(2)* மூலப்பவுத்திரம்
*(3)* ஆசனப் பவுத்திரம்

**பக்கப்பவுத்திரக் குறிகள்**

மிக்கதோர் கொடியை விட்டு வலமிடம் வெடித்த தாகில்
ஒக்க நீர் மலமும் வீழா தொடு விழுஞ் சீயிரத்தந்

தக்கதோரசவை மூலம் தான் மட்டும் புரையதாகும்
பக்கமாம் பவுத்திரமென்று பகரலாம் பகரலாமே ! (7)

(இ-ள்.) விரைக்கும் ஆசனத் துவாரத்திற்கும் இடையிலுள்ள கொடிக்கு இடது பக்கத்திலோ அல்லது வலது பக்கத்திலோ கட்டி ஏற்பட்டு உடைந்து சீழும் இரத்தமும் வெளியாகும், புரையோடும். இவை பக்கப் பவுத்திரத்தின் குறிகள்.

## மூலப் பவுத்திரக் குறிகள்

குதத்தினிற் சுற்றி நொந்து குமிழ் முளை போற்றிரண்டு
வத்தியாய் வெடித்து நீருஞ் சலமலமதனில் வீழும்
விதப்பட வலியுமுண்டாம் மிகு சேனைக் கிழங்கு போலச்
சதைத்திடில் மின்னே மூலப் பவுத்திர மாகுந் தானே ! (8)

(இ-ள்.) குதத்தைச் சுற்றிலும் சிறு சிறு மாம்ச முளைகள் தோன்றிப் பழுத்து உடைந்து அதிலிருந்து நீரும், மலமும் வெளியாகும். தாங்க முடியாத வலியுண்டாகும். வெட்டிய சேனைக்கிழங்கைப் போலச் சதைக் காணப்படும்.

## ஆசனப் பவுத்திரக் குறிகள்

சொல்லிய குதத்தை விட்டுத் தோன்றிடுஞ் சகனந்தன்னில்
கல்லெனப் புடைத்து நொந்து களாக்காய் முள் போலக்
காணும்
வல்பைமாக மென்மே லடிக்கனம் புரையுமாகும்
அல்லியங் கோதை நல்லாய் ! ஆசனப் பவுத்திரமாமே ! (9)

(இ-ள்.) ஆசனத்தைத் தவிர்த்தும் பக்கத்தில் பின் பக்கத்தில் கல்லைப்போன்று வீக்கம் வலியுடன் உண்டாகி அதன்மேல் கிளாக்காய் முள்ளை போன்ற துவாரம் உண்டாகும். அடியில் கனமேற்படும். புரை ஓடும். இது ஆசனப் பவுத்திரத்தின் குறிகளாகும்.

## மூலப் பவுத்திரத்திக் குறிகள்

மூலமுங் கொடியும் பீச முற்றிட வீங்கும் நோகும்
சாலவே ப்ரமேகம் வீழுஞ் சலமல மடைத்துக் கொள்ளும்
மேலெழக் கோசந் தன்னில் வேதனை மிகவு முண்டா
மாலவேல் விழியாயண்ட பவுத்திர மென்னலாமே ! (10)

(இ-ள்.) மூலப்பிரதேசம், அதன்மேல் பிரதேசத்தில் காணும் கொடி, பீஜம் முதலான இடங்களில் வீக்கம் ஏற்படும். மூத்திரம், மலம் முதலானவை அடைத்துக்கொள்ளும். கோசத்தில் வலியும் உண்டாகும்.

அண்டத்தின் கீழதாக வியானத்தின் மேலதாகத்
துண்டத்தி நரம்பின் மேலே சுறுக்கென வீங்கிக் கொள்ளும்
விண்டத்தில் சலமும் பாயும் வீழ்ந்திடுஞ் சலமுங் கூடக்
கொண்டத்திற் பிரமேகம் வீழுங் கொடிப் பவுத்திரமதாமே!

(இ-ள்.) விரைக்குக் கீழேயும், அபானத்திற்கு மேலேயும் உள்ள சந்திப்பில் சுறுக் என்ற வலியுடன் வீக்கம் உண்டாகும். பின்னர் உடைந்து அதிலிருந்து நீர் கசியும். இவை கொடிப் பவுத்திரத்தின் குறிகளாகும்.

## தண்டிற் பவுத்திர நிதானம்

செப்பிய பீச முன்பே செரிந்திடும் நாடியிற் கீழ்
கொப்பளங் கொண்டு வீங்கிக் கொதித்திடு நோவுமுண்டா
மைப்படாக் கண்ணின் மாதே ! வடித்து நீர்ச் சலமுமாகி
யிப்படிக் குணங்கள் தண்டிற் பவுத்திர மென்னலாமே ! (12)

(இ-ள்.) கோசத்தின் கீழ் உள்ள நாடிக்குக் கீழே கொப்பளமுண்டாகி வீங்கி வலியைத் தரும். பின்னர் உடைந்து சீழ் வெளியாகும். இவை தண்டிற் பவுத்திரக் குறிகளாகும்.

# விப்புருதி நிதானம்

வீங்கிடுங் கல்லுப் போலே மேவிடும் விதனஞ் செய்யு
மாங்கது ரண்டு மூன்றுறா யடுத்திடு மொன்றுங் காணுந்
தாங்கிய சலமுந் நாறுஞ் சார்ந்திடும் புரையுமுண்டாம்
ஓங்கு விப்புருதி யெட்டு மோர் குண மறிகுவீரே! (1)

(இ-ள்.) கல்லைப்போல் வீக்கம் உண்டாகும். தாங்கமுடியாத வலியுண்டாகும். மேலும் இரண்டு, மூன்று கட்டிகளாகும் காணும். பழுத்து உடைந்து சலம் வெளியாகும். நாற்றமுண்டாகும். புரையுமுண்டாகும். இவை எட்டு வகைப்படும்.

### 8 வகை விப்புருதியின் இருப்பிடங்கள்

அறிந்திடுங் கன்னங் கக்க மரை கீழ் மேல் சகனஞ் சந்து
பெருந்துடை துடைக் கீழென்னப் பேசிய தலமோ ரெட்டுஞ்
செறிந்த விப்புருதி சேருந் தானங்கள் செப்புகின்றோ
மறுகுணந் தலங்கள் கண்டு சாத்திய முணர்ந்து செய்யே! (2)

| | |
|---|---|
| கன்ன விப்புருதி | ஆசன விப்புருதி |
| கக்க விப்புருதி | சந்து விப்புருதி |
| அரையாப்பு விப்புருதி | பெருந்துடை விப்புருதி |
| ஏறு விப்புருதி | துடைவாழை விப்புருதி |

(இ-ள்.) ஸ்தானங்களினால் பேர் பெற்றதற்குக் குணமொன்றாகையால் ஸ்தான விசேஷங் கண்டு சாத்யா சாத்யம் அறியவேண்டும். கன்னம், அரை, அரைக்குமேல், கீழ், ஆசனம் ஆக 5ம் வரிய பிரயாசத்தால் தீர வேண்டியது. சந்தும் அசாத்யம் துடை, துடைக்குக் கீழ் இரண்டும் சாத்யம் என்று அறிக.

# அரையாப்பு நிதானம்

புற்றரை யாப்பினாடும் புகர் முளையரைப் பென்னுஞ்
சுற்றிக் கிரந்தி மற்றச் சுரோணித அரையாப் பென்றும்
பற்றிய சுளுக்கு வாயுப் பதிந்திடு மரையாப் பென்றும்
பெற்றிடு மாறு பேதம் பெயர் குணம் பேசுவேனே! (1)

(இ-ள்.) புற்றரையாப்பு, கிரந்தியரையாப்பு, சுளுக்கு அரையாப்பு, முளையரையாப்பு, சுரோணிதவரையாப்பு, வாயு அரையாப்பு என்று அறுவகைப்படும்.

**புற்றரையாப்பின் குறிகள் (cyst)**

தாமரைப் பூவுட் காய் போற் றானெழுந் தரும் பரும்பா
யாமத்திற் பக்கந் தன்னிற் சதை தொடா தகன்று நிற்குந்
தாமது மருந்து செய்யிற் றள்ளிடுஞ் சட்டை பண்ணாப்
பூமுகக் கோதை மாதே! புற்றரையாப் பென்றோமே! (2)

(இ-ள்.) தாமரைப் பூவுள் காணப்படும் மொட்டைப் போலே எழுந்து எழுந்து மேல் தோலானது அதனுடன் சம்பந்தப்படாமல் நிற்கும். மருந்து போட்டால் உடைந்து அப்படியே மொட்டைப் போல் வெளியாகும். இவை புற்றரையாப்பின் குறிகளாகும்.

**முளையரையாப்பின் குறிகள்**

வீங்கியே கழற்சிக்காய் போல் வெளுத்தது வழுவழுத்து
மோங்கிய முளைத்தெழும்பு மோரத்தில் விடவு காணும்
ஆங்கதிற் கருவிகார மாடிடிற் சட்டை செய்யுங்
மூங்கிலின் முளை போற் காணு முளை யரைப்
பென்றோமே! (3)

(இ-ள்.) கழற்சிக்கொட்டையைப் போன்ற வீக்கம் முதலில் ஏற்படும். இவ்விடம் வெளுத்து வழு வழுப்பாகும். அதன் நடுவில் ஒரு முளை கண்டு வெடிக்கும். சஸ்திர

சிகிச்சையினால், காரம் கட்டுவதனாலோ குணமுண்டாகும். மூங்கிலின் முளையைப்போன்று சதை அதில் காணும். இவை முளையரைப்பின் குறிகளாகும்.

### கிரந்தியரையாப்பின் குறிகுணங்கள்

புண்ணது கோசந் தன்னிற் பொருந்தி வேதனை யுண்டாகி
நண்ணிய நெறிபோற் கட்டி நாடோறும் வீக்கமுண்டா
யுண்ணிறை சலமு முண்டா யுறுபுரை யோடுமாகில்
அண்ணலே சொன்னோஞ் சொன்னோங் கிரந்தி யினரையாப்
பென்றே ! (4)

(இ-ள்.) பீஜ கோசத்தில் வலி ஏற்பட்டு புண்களுண்டாகும். தொடையிடுக்கு இரு பக்கங்களிலும் நெறிகட்டும். தினந்தோறும் வீக்கம் உண்டாகும். இவை பழுத்து உடையும் புரையோடும். இவை கிரந்தி அரையாப்பின் குறிகள்.

### சுரோணித அரையாப்பின் குறிகள்

நடந்துலைந்திருக்கு நாளில் நாடிய வீரத்தந் தானே
உடைந்துறைந் துருண்டெழுந்து வோங்கியே வீங்கிக்
கொள்ளுங்
குடைந்திடுங் குமிறுஞ் சீழ் நீர் கொண்டிடுத் தகர்ந்து தீரு
மடந்தையே ! சுரோணிதத்தில் வருமரையாப் பென்றோமே!

(இ-ள்.) வெகுதூரம் நடந்த காரணத்தால் இரத்தம் கட்டி வீங்கிக்கொள்ளும். பழுத்து உடையும். அதிலிருந்து சீழும், நீரும் பொசியும். இவை சுரோணித அரையாப்பின் குறிகள்.

### சுளுக்கரையாப்பின் குறிகள்

கடந்திட வரியதொன்றைக் கடந்திடிற் கனஞ்சுமக்கில்
மடந்தையர் கலவிதன்னில் வழிமுறை தவறிச் செய்யில்
முடங்கியே நரம்பு தேற்றி மொக்குள் போற்றடித்து வீங்கு
துடர்ந்திடுங் குணங்கள் கண்டு சுளுக்கரையாப்பென்றோதே.

*(இ-ள்.) தாண்டமுடியாத இடத்தைச் சிரமப்பட்டு தாண்டுதல், கனத்தை சுமத்தல், ஸ்திரீ போகத்தை நிலைதவறிச் செய்தல். இவைகளினால் நரம்பு தடித்து மொட்டைப்போல வீங்கும். இவைகள் சுளுக்கு அரையாப்பின் குறிகள்.*

**வாயுவரையாப்புக் குறிகள்**

*உதரத்தில் நின்றவாயு வொதுங்கியே யரையிற்றங்கி*
*விதனித்துத் தடித்துவீங்கி விம்மிவேதனைகள் செய்யு*
*மதமுற்ற கொங்கைமானே! மானிலந் தனிலுள்ளோருக்*
*கிதமிந்தக் குணங்கள் வாயு வரையாப்பென்றியம்பினோமே.*

*(இ-ள்.) வயிற்றில் வாயு அதிகரித்து தொடையிடுக்கில் தங்கி தடித்து வீங்கி வேதனையைத்தரும். இது வாயு வரையாப்பின் குறிகள்.*

*இவைகளுள் புற்றரையாப்பு, முளையரையாப்பு, கிரந்தியரையாப்பு மூன்றும் கஷ்டசாத்யம்.*

*சுரோணித அரையாப்பு, சுளுக்கரையாப்பு, வாயு அரையாப்பு மூன்றும் சாத்தியம்.*

## பாதரோக நீதானம்

*உள்ளடியி லேதானு முதித்திடும் நோ*
*யொருபதின்பே ருரைத்திடுவ னுலகு தன்னிற்*
*கள்ளமில்லா வுள்ளடியில் வாதம் பாதச்*
*சக்கரம் காற்காந்தல் கரி வாத குட்டம்*
*வள்ளலே கரும்புற்றுத் தசைப் புற்றென்ன*
*மருவிய செங்குரு வாதச் சூலை பாதெரிப்பு*
*மெள்ளவே யிவ்வகையாம் நோயின் பேர் தன்னை*
*விரித்து மிக மருத்து முனி விளம்புங் காணே! (1)*

| | |
|---|---|
| *(இ-ள்.) வாத பாதச்சக்கரம்* | *கரிவா குட்டம்* |
| *காற்காந்தல்* | *கரும் புற்று* |
| *தசைப்புற்று* | *செங்குரு* |
| *பாதசூலை* | *பாதெரிப்பு* |
| *பதகரி* | |

### பாதச் சக்கரத்தின் குறிகள்

ஊறுதற்குமரிய திமிரெரிப்பு முண்டாய்க்
கனத்து வலித் திடுகிலிவையுள் ளடி வாதந் தான்
சேணெரியு மக்கி விதர் போலத் தோன்றித்
தினவாகி நீர் பாய்ந்து செம்புண்ணாகித்
தோணு மெனி லிவை பாதச் சக்கரத்தின்
றொகுதி யெனவே முனிவன் சொன்னவாறே ! (2)

(இ-ள்.) பாதங்களில் மதமதப்பு உண்டாகி எரிச்சலெடுக்கும். கனத்து வலி மிகும். சில சமயங்களில் புண்கள் ஏற்படும். அரிப்பெடுக்கும். அதிலிருந்து நீர் கசியும். செம்புண்ணாகும். இவை பாதச் சக்கரக் குறிகளாகும்.

**குறிப்பு:-** செய்யுளில் ஒரு அடி குறைவாயுள்ளது.

### காற்காந்தல், பதகரி, வாத குட்ட நோய் முதலான வகைகள் லக்ஷணம்

உண்மையன லதனில் மிதித்த தெனவே காந்தியுறச்
சுள்ளுச் சுள்ளெனவே வலிக்குமாகிற்
றிண்ணமுறுகாற் காந்தலாகும் பின்னைச்
செப்பு கவுள்ளடி சொரிந்து கீற்று கீற்றாய்
வண்மையுறவே வெடித்துட் டணமாய் நொந்து
வருத்து மெனிற் பதகரியின் குணமதாகு
நண்ணு முள்ளங் கால் காசு போலாய் நொந்து
நைந்துளைய வாத குட்டம் நவிலுங் காலே ! (3)

(இ-ள்.) நெருப்பில் கால் வைத்த மாத்திரத்தில் எவ்வாறு அழற்சி ஏற்பட்டு வலிக்குமோ அவ்வாறு கீழே கால் வைத்தால் சுள் சுள் என்று குத்துவலி உண்டாகும். இவை காற்காந்தலின் குணங்களாகும்.

உள்ளங்காலில் அரிப்பு ஏற்பட்டுப் பின் கீற்றுக் கீற்றாக வெடித்து, சூட்டுடன் வலி ஏற்பட்டு வேதனை கொடுத்தால் அது பதகரி என்ற நோயின் குறிகளாகும்.

உள்ளங்காலில் ஒரு காசு அளவுள்ள பிரமாணம் வலித்து, அந்த இடம் நைந்து ரணமானால் அது குட்டநோய் என்று தெரிந்துகொள்ளவும்.

**கரும்புற்று, சதைப்புற்று, செங்குறு இவற்றின் லக்ஷணங்கள்**

நவிலுந் தாமரைக் காய் போல் பல புண்ணாகி
நைந்துளையும் பிதிக்கிற் சீழ் நணிக் காணும்
நுவலுங் காற் பதந் தேயு முளைவு முண்டாய்
நோகு மெனி லிக் குணங்கள் கரும்புற்றாகுங்
குவியுந்தா டனிற் சதையாய் முளைக்கு நோவாங்
குமுறு முளைந்திடு மிவை தான் சதைப் புற்றாகு
மவியுங்கால் சிவந்துளைந்து துவரை போலு
மரும் பவளம் போலுஞ் செங் குறுவதாமே! (4)

(இ-ள்.) தாமரைக் காய்போல் பல புண்கள் உண்டாகி வலி கொடுக்கும். பிதிக்கினால் அதிலிருந்து சீழ் வெளியாகும். காலைக் கீழே ஊன்ற முடியாமல் குத்து வலியுண்டாகும். இவை கரும்புற்றின் லக்ஷணங்களாகும். சதை மென்மேல் வளர்ந்து, வலி ஏற்பட்டால் அது சதைப்புற்றாகும். துவரையைப் போன்றோ அல்லது பவளத்தை ஒத்த சதையோ சிவப்பாக வெளியே துருத்திக்கொண்டு வந்து வலியைக் கொடுத்தால் செங்குறு என்று தெரிந்துகொள்ளவும்.

**பாதசூலை பாத எரிவு முதலான நோயின் குறிகள்**

பண்புறவே காலிரைகள் வெடித்துப் புண்ணாய்
பரிந்து புறங் காலுளைந்து வலிக்குமாகி
னண்புமிகுந் திடும்பாத சூலையென்க
நடந்திடுகில் நரம்புவலித் திடுமீதன்றி
திண் பெறுள்ளங் காலநகக்கண் புறங்காலெல்லாந்
தீயெனவே யெரிந்துளைந்து வலிக்குமாகி
லொன்குழையே யிவைபாத யெரிவாமென்றே
யும்பர் புகழ் கும்பமுனியுரைத்தவாறே. (5)

(இ-ள்.) உள்ளங்காலின் அடிபாகம் வெடித்துப் புண்களாகி, புறங்காலிலும் வலியும் உளைச்சலும் ஏற்பட்டால் பாதசூலையாகும்.

நடக்கும்போது நரம்புவலி ஏற்பட்டு உள்ளங்கால் நகக்கண், புறங்கால் முதலான இடங்களை தீயிட்டுக் கொளுத்தினாப்போல் எரிந்து வலியுண்டானால் இது பாதஎரிவு என்ற நோயாகும்.

# குட்டரோக நிதானம்

*வாரண முகனைத் தொந்தி வயிற்றினையன்பர் போற்றுங்*
*காரணச் சிவனையைந்து கரத்தனைப் போற்றி செய்து*
*பார்தனில் நரர்க்கு வந்த பதினெட்டுக் குட்டத்திலும்*
*பேர்குணம் வடநூல் கண்டு பிரிந்து நானறிவித்தேனே.* (1)

(இ-ள்.) யானை முகத்தையும், தொந்தி வயிற்றையும் ஐந்து கரங்களையுடையவரும், அன்பர்கள் போற்றும் ஆதிகாரணமுமான விநாயகப்பெருமானை வந்தனை செய்து ஜனங்களுக்கு உண்டாகும் 18 வித குஷ்டரோகத்தின் பெயர், குணம் முதலானவைகளை வடநூலில் கண்டுள்ளவாறு நான் அறிவிக்கிறேன்.

### குட்டநோய் உண்டாகக் காரணங்கள்

*அறிவின்றி விபரீதஞ் சேராகாரம் புசிக்கலாலும்*
*துறையன்றி தொடாத தொன்றை தொட்டவைப் புசிக்கலாலும்*
*குறைகொண்ட நிசித்தமான குலமங்கை யடுக்கலாலும்*
*நிறைகொண்ட பெரியோர் தம்மை நிந்தித்துப் பேசலாலும்*

*நிந்தித்துப் புறத்தியாற் சோம நிலைகெடப் பிரிக்கலாலும்*
*வந்தித்துப் பூருவா சென்மாந்திர பாவத்தாலுஞ்*
*சந்திக்கக் கற்புமாதர் தங்களைக் கருதலாலும்*
*தொந்தித்த குட்டரோகந் தொடுக்குமென்றுரைத்தார் முன்னோர்.* (3)

(இ-ள்.) அறிவின்மையால் ஒன்றுக்கொன்று விரோதமான ஆகாரங்களை ஒன்றுசேர்த்துச் சாப்பிடுவதனாலும் விலக்கக்கூடிய சுத்தமில்லாத, தாசிகளைச் சேர்வதனாலும் பொறுமையையே உருவாகக்கொண்ட பெரியோர்களை நிந்தனைசெய்வதனாலும், இருமனமொத்த ஸ்நேகிதர்களைப் பிரிப்பதனாலும், பூர்வ வினைகளினாலும், கற்புள்ள மாதர்களை இச்சிப்பதனாலும் குஷ்டநோய் சம்பவிக்கும்.

**குஷ்டரோகம் சம்பவிக்கும் விதம்**

முன்னிய வாத பித்தச் சிலேத்மன மூன்று மங்கம்
பின்னியே தறுக்காயுள்ள நரம்பினிற் பிரவேசித்து
மன்னிய இரத்தந் தண்ணீர் மாங்கிஷந் தோல் கொடுத்தே
யன்னிய வன்னங் காணு மாகையாற் குட்டமாமே. (4)

(இ-ள்.) வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் கோளாறடைந்து நரம்பில் சேர்ந்து, இரத்தம், தண்ணீர், மாம்சம், தோல் முதலானவைகளைக் கெடுத்து வர்ண மாறுபாடுகளை உண்டாக்கும்.

**இதுவுமது**

குட்ட ரோகந்தான் வந்து குடி கொண்டாற் சரீரத்திலுள்ள
மட்டுறு வியர்வை யீரம் வற்றியே சூட்சஞ் சூட்சந்
திட்டமாய்க் கிருமியுண்டாய் தேகத்தில் மயிர் தோலெலன்பு
சட்டமாம் நரம்பு தின்று சரீரத்திற் காணுமென்றே. (5)

(இ-ள்.) குஷ்டநோய் சம்பவித்தால் சரீரத்தில் வியர்வை வற்றும் தேகத்தில் கிருமிகள் உண்டாகும். மயிர், தோல், எலும்பு, நரம்பு முதலானவைகளை இந்நோய் தின்னும். அதாவது சரீர உறுப்புக்கள் குறைவடையும்.

### குஷ்டரோக வகைகள்

வாதபித்தச் லேற்பனத்தின் வாதரோகந் தானெனினும்
தீது குட்ட மெழுந் தீருங் குட்டம் பதினொன்று
மோதுங் குட்டம் பதினெட்டுடன்றோய வையினுற்பவமும்
பேதக் குணமும் வியாதியின் முன் பிறக்குங் குணமு
முரைப்பேனே. (6)

(இ-ள்.) குட்டநோய் வாத பித்த சிலேஷ்மத்தினுள் வாதம் பிரரோபித்தலால் உண்டானவை எனினும், 7 வகை குஷ்டங்கள் தீராது. 11 வகை குஷ்ட வகைகள் குணமடையும். இவற்றின் குணத்தையும், காரணத்தையும் கூறுகின்றேன்.

### குஷ்டம் நோயின் பூர்வ ரூபம்

தொட்டுப் பார்த்தால் நகம் வைத்தால் றோலினுணர்ச்சி
தெரியாதே
கெட்டுச் சரீரந் தடித்ததிற் கிளறுந் தினவும் வீரணமுமா
மட்டில் வியர்வை வரினும் வரு மாறியு வருகினு முலரும்
விட்டு விளங்கு மொரு வன்ன மேவுங் குஷ்டஞ்
சீக்கிரமே. (7)

நிரத்த வுடம்பு சரசரத்து நெருப்புப் பொறி பட்டாற்
புண்ணாய்
கறுத்தே இரத்த மயிர்க் கூச்சல் காணுங் குணங்களிது வாகிற்
பொறுத்தே நெடுநாளனு சரித்துப் பொங்கும் வியாதி
யென்றறிக
மறுத்து முரைத்தோ மஹா குட்டம் வளமை யேழும்
புவிமீதே. (8)

(இ-ள்.) தேகத்தில் தொட்டுப் பார்த்தாலும் அல்லது நகத்தினால் கீறினாலும், தோலில் உணர்ச்சி தெரியாது. சரீரத்தில் தடிப்புகளுண்டாகும். அரிப்பும், விரணமும் ஏற்படும். வியர்வை உண்டானாலும் உண்டாகும் அல்லது வந்தாலும் வெகுசீக்கிரம் உலர்ந்துபோம். சரீரத்தில்

நிறவேறுபாடுகளும் ஏற்படும். உடம்பில் நெருப்புச் சுட்ட புண்களைப்போல் புண்ணாகும். கறுநிறமடையும். மயிர்க்கூச்சலுண்டாகும். இக்குறிகள் ஏற்பட்டால் நாளாவட்டத்தில் மஹா குஷ்ட நோய்க்கு அறிகுறிகள் என்று தெரிந்துகொள்ளவும்.

**அசாத்யகுஷ்டம் 7ன் பெயர்**

சொல்லுங்குஷ்டம் எழுவகைபேர் சொல்லிற்
கபாலஞ்சர்மீகம்
'வெல்லு முதும்பா மேகிடிபம் வீசர்ச்சி மண்டலாக்கிரமு
மல்லல்தருமீசி யகுவை யாகும் பெயரோ ரேழாகும்
வல்லவியாதிக் குணமதனை வகுத்துப் பாரி லுரைப்பேனே.

*(இ-ள்.)* கபாலக் குஷ்டம், முதும்பா குஷ்டம், விசர்சிகா குஷ்டம், அகுவை குஷ்டம், சர்மீக குஷ்டம், கிடிப குஷ்டம், மண்டலாக்கிர குஷ்டம் இவை அசாத்யமாகும்.

**அசாத்யம் ஏழின் குணம் (கபால குஷ்டம்)**

ஓட்டிற் புள்ளி குத்துகைபோ லுணர்ச்சியன்றிச் சரசரத்துக்
காட்டிக் கொஞ்சமாய்ச் சிவப்புங் கறுப்புங்காணு
மவ்வளவுந்
தோட்டு ரோமந்தான் சிலிர்க்குந் தோன்றுந்
தினவுகெட்டியதா
மீட்டுங் கபால குட்டமென வியம்பு வாத உற்பவரே. (10)

*(இ-ள்.)* ஓட்டில் புள்ளி குத்தினால் எவ்வாறு இருக்குமோ அவ்வாறு தேகத்தில் திட்டுத் திட்டா வெளுத்து உணர்ச்சி குறைவடையும். சொறசொறப்பாகும். சிறிது காலஞ்சென்றபின் சிவப்பும் கருப்புமான திட்டுக்கள் உண்டாகும். ரோமக்கால்கள் சிலிர்க்கும், அரிப்பு ஏற்படும். தோல் மறத்துக்கொட்டியாகும். இவை வாதகோபத்தினால் உண்டான கபால குஷ்டம் எனப்படும் நோயாகும்.

### சன்மீக குஷ்டக் குறிகள்

வீசுமும் மதமே கொண்ட வேழத்தின் சருமம் போன்று
மாசறு சரீரமெங்கும் வந்தது தடித்துக் காணும்
காசறு பொம்மல் விம்புங் களபக் குங்குமப்
பைங்கொங்கைத்
தேசுறு மானே! வாதச் சிலேற்ப சன்மீக மாமே. (11)

(இ-ள்.) மும்மதம் பொழியும் யானையின் தோலைப் போலச் சரீரம் முழுவதும் தடிக்கும். இதுதான் சன்மீக குஷ்டத்தின் அறிகுறியாகும்.

### உதும்பரக் குஷ்டக் குறிகள்

தோலுடன் மயிர் சிவப்பாய்த் துணை நரம் பதிகமாகிச்
சீலமாஞ் சலமெரிப்புச் சேர்ந்தத்திப் பழம்போற் சிவப்பாய்
கோலமாம் புழுவும் புண்ணுங் கொடியவே தனையுங் காணி
லாலவேல் விழியாய் பித்தத் தாலுதும் பரமிதாமே. (12)

(இ-ள்.) தோலும் மயிர்க்கால்களும் செந்நிறமாகும். நரம்புகள் தடிக்கும். எரிச்சலுடன் சிறுசிறு கட்டிகளுண்டாகும். அத்திப்பழத்தைப்போல் செந்நிறமாக இருக்கும். பின்னர் இவை உடைந்து புழு வெளிப்படும். புண்களும் உண்டாகும். தாங்கமுடியாத வலி உண்டாகும். இவை உதும்பரகுஷ்டக் குறிகளாகும்.

### கிடிபகுஷ்டக் குறிகள்

(குட்டி) மீன் சிலம்பு போல வுரிந்துரிந் துணர்ச்சியன்றி
கெட்டியாய்ச் சரசரத்துக் கிருஷ்ண வண்ணம் பெற்றுத்
தொட்டிடிற் றினவு முண்டாய்த் துலங்கவே வியர்வை
யில்லா
விட்டிடிற் சிலேற்ப பித்த மேல் வரும் கிடிபமாமே. (13)

(இ-ள்.) மீன் சிலம்பு போல் தோல் உரியும். உணர்ச்சியிராது, தடித்துப்போகும். சொறசொறப்பாகும்.

கருநிறமடையும். அரிப்பெடுக்கும், வியர்வை வராது. இவை கபம், பித்தம் இவைகளின் பிரகோகத்தினாலுண்டாகும். கிடிபம் என்ற வகைக் குஷ்டமாகும்.

**விசர்ச்சிகாவின் லக்ஷணங்கள்**

சிறங்கது வெடித்தாற் போலத் தினவு தான் மிகவுமுண்டாய்
அருஞ்சிறு குறுணை நொய் யரிசிபோற் சரீரமெங்கும்
வருங் கருக் கருத்திருக்கும் வலு திரளாகக் காணும்
விரும்பிய வாத பித்த மேல் வரும் விசர்ச்சியாமே. *(14)*

(இ-ள்.) சிறங்கு வெடித்தாற் போல அரிப்பு அதிகமெடுக்கும். அரிசி நொய்யைப் போலச் சிறு சிறு கட்டிகள் சரீரம் முழுவதும் உண்டாகும். கருநிறமாகவும் இருக்கும். திரள் திரளாகவும் ஏற்படும் நோயாகும்.

**மண்டல குஷ்ட லக்ஷணம்**

வட்டமாய் வீழுமூண்டு பொன்னிறத்தவாய் வருமகன்று
கெட்டியாய் மினு மினுத்துக் கிருமியுந் தினவு முண்டாய்
ஒட்டியச் சிவப்பு வெள்ளை உதிரமு மெள்ள வுண்டா
யட்டமுங் கனத்தால் மண்டலாக்கிரங் கபத்தின் கூறே. *(15)*

(இ-ள்.) பொன்னிறமான நிறவேறுபாடுகள் வட்டம் வட்டமாக உடலில் உண்டாகும். நாட்கள் செல்லச் செல்ல இவை பெரிதாகும். அந்த இடம் தடித்து, மினு மினுப்புடன் அரிப்பும் ஏற்படும். பின்னர் சிவப்பாகவும், வெள்ளையாகவும் கசிவுகள் உண்டாகும். இவை கபத்தினாலேற்பட்ட மண்டலாக்ர குஷ்ட லக்ஷணங்களாகும்.

**தகீசிய குவைக் குறிகள் (ருஷ்யஜிஹ்வம்)**

மெய் சரசரத் துயர்ந்து மினுத் தெரித்துத் தண்ணீர்
பையவே பொசிந்துடும்பு நாக்கெனப் பகர்ந்து காட்டி
நொய்ய வேதனையு முண்டாய் நுனைத்தடி கனத்துதாகிற்
செய்யதோர் வாத பித்தத் தகீசிய சிகுவை யென்னே. *(16)*

(இ-ள்.) சரீரம் சொர சொரப்பாகி, மினுமினுப்பு உண்டாகும். எரிச்சலெடுக்கும், தண்ணீர் கசியும். உடும்பின் நாக்கைப்போல் பிளவாகத் தடிக்கும். தாங்க வியலாத வலியுண்டாகும். அடி கனமுண்டாகும். இவை வாத பித்தத்தினாலுண்டான ததீசியகுவை என்ற குஷ்டத்தின் லக்ஷணங்களாகும்.

## பொது

கொண்டதோர் மஹா குஷ்டக் குறி குண மேழுஞ் சொன்னோங்
கண்டுநீ மருந்து செய்யக் கடவனேற் செய்யுங் காலை
யுண்டதிற் பிரயாசந்தா னுண்மையே யுரைத்தோமன்றிப்
பண்டு தான் றீருங் குஷ்டம் பதினொான்றுங் கூறுவேனே. (17)

(இ-ள்.) இவ்வாறு மஹா குஷ்டம் 7 வகைகளையுஞ் சொன்னோம். பிரயாசையுடன் மருந்து செய்து கொடுக்கவேண்டும். ஆகவே இவை அசாத்யம் என்ற வகையில் சேர்க்கப்பட்டுள்ளது.

## சாத்யம் பதினொான்றின் பெயர்

பூண்டதத் துருவினோடு சதாரிகம் புண்டரீகந்
தாண்டு விற்போடம் பாமா வுடன னமதலம் வெண் குட்டங்
கூண்டிடு காக நந்தி சித்துமை யலச குஷ்டம்
வேண்டிய விபாதியோடும் பதினொான்றும் விரித்துக் காணே. (18)

(இ-ள்.) தத்ரு — சதாரிகம்
புண்டரீகம் — விஸ்போடகம்
பாமா — சன்ம தலம்
காக நந்தி — வெண்குஷ்டம்
சித்மா — அலசம்
விபாதிகா

என்று பதினென்று வகை சாத்யமானவைகள்.

### தத்ரு குஷ்ட லக்ஷணம்

அருகு போற் சரீரமெங்கும் அடர்ந்து படர்ந்து காட்டி
நிறமது காயாம்பூப் போல் நித்தலு முயர்ந்து காட்டித்
திறமுற வட்டமாகித் தினவு தான் தோன்றுமாகில்
மறைமுறை யோதும் நோய் தான் தத்துரு வென்ன மாதே.

(இ-ள்.) காசாம்பு வர்ணமாமுள்ள தடிப்புகள் சரீரம் முழுவதிலும் காணப்படும். வட்டமாகவும் இருக்கும். தாங்கமுடியாத அரிப்பும் உண்டாகும். இது தத்ரு குஷ்டத்தின் லக்ஷணங்களாம்.

### புண்டரீகக் குஷ்ட லக்ஷணங்கள்

அடிக் கனத் தெரித்துச் செப்பா யாரத்திச் சிந்துகளுண்டாய்த்
திடப்படக் கபிலை வன்னஞ் செரிந்து நீர் பொசிந்து
புண்ணாய்
இடிப்பது பொறுத்து தோறு மிஞ்சிய விரணங் காணில்
மடப்பிடி யனைய மாதே! வலிதரு புண்டரீகம். (20)

(இ-ள்.) தோலின் அடிப்பாகம் கனத்து எரிச்சலுடன் கொப்பளிக்கும். அது கருஞ் சிவப்பாக ஆகும். அதிலிருந்து துர்நீர் பொசியும். புண்ணாகப்போம். மூட்டுகளிலும் வலியேற்படும். விரணங்கள் உண்டாகும். இவை புண்டரீகக் குஷ்டக் குறிகள்.

### விஸ்போட குஷ்டக் குறிகள்

அங்க பங்கங்களாகப் பிழிந்திடு மங்கமெல்லாம்
துங்கவே தனையுந் தீரும் தோன்றிடு மிவை விஸ்போடம்
பங்கய முகையை வென்றே யாடவர் மரு (மம்பா)ய்ந்து
குங்குமங் களபம் பூசுங் குஞ்சரக் கொங்கை மாதே. (21)

(இ-ள்.) தேகம் பூராவும் வெடித்துப்போம். வலியைக் கொடுக்கும். கொப்புளம் உண்டானால் வேதனை தீரும். இவை விஸ்போட குஷ்டக்குறிகள்.

### பாமா ரோகக் குறிகள்

நினைவுறு சிரங்கு முண்டாய் சிவந்ததில் நீருமுண்டாய்
நினைவுறு மதனிற் கொஞ்சங் கறே றென நிறமுமுண்டாய்
வன முலை மானே கையிற் சகனத்தில் மிகுதி வந்து
கனமதாய் வளரும் பாமா வென்னவே பகரலாமே. (22)

(இ-ள்.) உடல் முழுவதிலும் சிரங்குகள் உண்டாகிச் சிவந்து நீர் வடியும். சிறிது நாட்சென்ற பின் கருநிற முண்டாகும். கையிலும், பின்புறத்திலும் அதிகமாக உண்டாகும். இவை பாமா என்ற குஷ்ட வகையைச் சேர்ந்தது.

### சர்மதலைக் குஷ்டக் குறிகள்

தொட்டிடி லெரிக்குங் குத்துந் துலங்கவே தனையு
முண்டாங்
கட்டது சிவந்திருக்குங் கருத்தினிற் குணங்கள் கண்டால்
மட்டவிழ் குழலாய் ! தேனைப் பாகினை மழலைச்
சொல்லைத்
தட்டிய மொழியாய் சர்ம தலமெனச் சாற்றலாமே. (23)

(இ-ள்.) தேகத்தில் தொட்டவிடமெல்லாம் எரிச்சலுண்டாகும். குத்துவலியுமேற்படும். வேதனையைத் தரும். வட்ட வடிவமான சிவப்பு நிறத்தடிப்புகளும் காணும். இவை சர்ம தல குஷ்டக் குறிகளாகும்.

### காகநந்தி, வெண்குஷ்ட லக்ஷணங்கள்

காக்கணம் பழத்தைப் போன்று கறுத்துப் பின் சிவப்புங்
காட்டித்
தாக்கு வேதனை யெரிப்புச் சார்ந்திடுங் காகநந்தி
மீக் கொளத் தோலுமேலு மோர்முகம் வெளுக்குமாகில்
நோக்கியல் மரிக்குஞ் சொன்ன நோக்கி வெண் குட்டமாமே.

(இ-ள்.) காக்கணம் பழத்தைப் போன்ற உடலில் கட்டிகளுண்டாகி கருநிறமடைந்து பின்னர் சிவக்கும்.

தாங்கவொண்ணாத வேதனையைத் தரும். எரிச்சலும் எடுக்கும். இவை காகநந்திக் குஷ்டவகையைச் சேர்ந்ததாகும்.

சர்மம் நாட்கள் ஆக ஆக வெளுத்துக்கொண்டே வந்தால் அது வெண்குஷ்டம் என்று கண்டுகொள்ளவும்.

## சித்மா குஷ்டக் குறிகள்

*திறம் பெற மினு மினுத்துத் தேய்த்திடிற் பொடியுதிர்ந்து*
*உறுஞ் சிவப் புண்டாய் நாற்றம் வெளுப்புண ரூட்சை*
*யுண்டாய்*
*நிறங் கவுள் கன்னம் மார்பு நிரம்ப நா ரத்தம் பூப்போல்*
*பெருங் குணமீது கண்டாற் பேசுசுத் துமையி தென்றே. (25)*

*(இ-ள்.)* தேகம் மினு மினுத்துத் தேய்த்தால் பொடிப் பொடியாக உதிரும். சிவந்துபோம். நாற்றமும், வெளுப்பும், சொர சொரப்பும் அதிகரிக்கும். கவுள், கன்னம், மார்பு முதலானவை இடங்களில் நாரத்தம் பூப்போல நிறவேறுபாடும் உண்டாகும். இவை சித்ம ரோகக் குறிகள்.

## விபாதிகா நோய்க் குறிகள்

*கையினிற் காலிற் கண்டு கனன்றது கீற்றுக் கீற்றாய்*
*செய்ய வேதனையுங் கொஞ்சத் தினவுமாய் சிவந்து காட்டி*
*யெய்தியப் பதகரிப் பேரிசைந்திடு மிதுவுமன்றி*
*மைதிகழ் கண்ணினாளே! விபாதியாம் பெயருமாமே. (26)*

*(இ-ள்.)* கையிலும், காலிலும் கீற்றுக் கீற்றாக வெடிப்புகளுண்டாகும். தாங்கமுடியாத வலியைத்தரும் அரிப்பும் உண்டாகும். சிவந்த நிறமடையும். இதனைப் பத வரிப்பு அல்லது விபாதிகா என்று கூறுவர்.

*(குஷ்ட நிதானம் முற்றும்.)*

# மகோதர நிதானம்

*அங்கமு மடைக்க வீங்கி யறமெலிந் தாகமாகி*
*மங்கிய வுதரந் தன்னில் வாயுவுஞ் சலமுங் கோர்த்து*
*கங்குல் சேர் நேரமானால் கடுகவே வாந்தி பண்ணும்*
*இங்கிதங் குலவு மானே! மகோதர மென்னலாமே. (1)*

(இ-ள்.) உடம்பு முழுவதிலும் வீக்கமுண்டாகும். தாகம் அதிகரிக்கும். வயிற்றில் வாயுவும், நீரும் சேரும். இரவு நேரங்களில் வாந்தியெடுக்கும். இவை மகோதரக் குறிகளாகும்.

### இதுவுமது

*காலினிற் புறங்கால் தன்னைக் கதுப்புடன் வயிறு கை கண்*
*சால நெஞ்சிடத்து முந்தித் தலத்திலும் வீங்கும் பின்னை*
*சீலமா மலங்கள் சிக்கு மூத்திரஞ் சேருமாகில்*
*மாலிரு பத்தினை மகோதர மென்னலாமே. (2)*

(இ-ள்.) கால், புறங்கால், கன்னப்பிரதேசம், வயிறு, கைகள், கண்கள், நெஞ்சு, தொப்புள் பிரதேசம் முதலான இடங்களில் வீக்கம் உண்டாகும். மலச்சிக்கலேற்படும். மூத்திரம் சரியாக வெளியாகாது. இவைகளும் மகோதர ரோகத்தைச் சேர்ந்ததாம்.

### மகோதரத்திலிதர லக்ஷணம்

*தடங்கண் சிவந்து நாவறண்டு தண்ணீர் வேண்டித்*
*தகையெய்தி*
*விடிந்த பொழுதில் மிகவிம்மி மூச்சும்விடவே மிகவரிதாய்*
*கடந்த பதத்திற் காசத்திற் கனத்து மலநீர் சிறுத்துதெனிற்*
*றுடர்ந்த குணங்கள் மகோதரத்தின் றொகுதியெனவே*
*யறிவீரே. (3)*

(இ-ள்.) கண்கள் சிவந்து, நாக்கும் வறட்சியுண்டாகித் தண்ணீர்த் தாகம் எடுக்கும். காலை நேரங்களில் உடம்பு வீங்கி மூச்சுத் திணரும். மலம், சிறுநீர் முதலியவை குறைவடையும். இவைகளும் மகோதர நோயில் காணும்.

### குண்டலவாயுக் குறிகள்

கண்டிக்கு முதரந்தன்னில் கனத்திடும் கூப்பிட்டோடும்
விண்டிச்சை விரும்பித்தின்னில் மிகுந்திடு மிகுண்டமூன்று
தெண்டித்துச் சிதறிப் பின்னாஞ் சினத்துடல் பரந்தடங்கிக்
குண்டுற்ற குத்துண்டாகுங் குண்டல வாயுவாமே. *(4)*

*(இ-ள்.)* வயிற்றில் எரிச்சலுண்டாகும். இரைச்சலும் ஏற்படும். ஆகாரம் சாப்பிட்டவுடனே படபடப்புண்டாகிக் கண்கள் இருண்டு பின்னர் சாந்தமாகும். இவை குண்டல வாயுவின் குறிகளாகும்.

## கிரந்தி நிதானம்

தாயாரிற் றந்தைதன்னில் சார்ந்திடுந் தோகை தன்னில்
தீயதாம் பொசிப்புத் தன்னில் செயுமலக் கிரிகை தன்னில்
மேயது கிரந்தியாகும் விடம்புற்று வெடிகிரந்தி
யாயமேதக் கிரந்திக் கருப்பத்திற் கிரந்தியஞ்சே. *(1)*

*(இ-ள்.)* தாயார், தந்தைகளின் நடத்தைப் பிசகுகளாலும், சாப்பாட்டின் கோளாறினாலும், மலச்சிக்கலினாலும் கிரந்தி ரோகங்கள் உண்டாகும். அவை விஷக்கிரந்தி, புற்றுக்கிரந்தி, வெடிக்கிரந்தி, மேதக்கிரந்தி, கர்ப்பக்கிரந்தி என்று ஐவகைப்படும்.

### விஷக்கிரந்தியின் லக்ஷணம்

மூக்கில் நாக்கி லுண்ணாக்கில் முகத்தில் நகத்தில் கோசத்தில்
தாக்கிப் புண்ணாய்க் கரைத்தெரிந்து தானந்தன்னைத் தின்றுவிடும்
நோக்கி லெருமை நெய்யதுபோல் நிறமாய் மிகுந்த நோவுமுண்டாய்
தூக்கந் தவிரும் விஷக்கிரந்தி சொல்லுங் குணங்கள் பொல்லாதே. *(2)*

(இ-ள்.) மூக்கு, நாக்கு, உள்நாக்கு, முகம், நகங்கள், கோசம் முதலான இடங்களில் கிரந்தி (கட்டிகள்) ஏற்பட்டுப் புண்ணாகும். பின்னர் அந்த இடங்களையரிக்கும். எருமை நெய்யைப்போன்ற நிறத்துடன் நிணநீர் வடியும். தூக்கம் வராது. இவை விஷக்ரந்தி ரோகக்குறி குணங்களாகும்.

**புற்றுக்கிரந்தியின் குணம்**

துண்டத்தடியிற் புருவத்திற் றுலங்கு கழுத்திற் கையடியிற்
அண்டத் தவத்திற் கோசத்தில் அதுவுமின்றி மற்றிடத்திற்
கண்டத்தெழும்பி வலித்தத்திக் காய்போற்றோன்று
மிவைகண்டால்
வண்டப்புற்றுக் கிரந்தியென வகுத்தார் பொதிகை
மலைமுனியே. (3)

(இ-ள்.) புருவத்தின் கீழ்பாகம், கழுத்து, கை கீழ்பாகம் அல்லது அக்குள், கோசத்தினடி முதலானவிடங்களில் அத்திக்காயைப் போன்ற ஒரு வீக்கமேற்பட்டு உடைந்தால் அது புற்றுக்கிரந்தியாகும்.

**வெடிகிரந்திக் குறிகள்**

காசுபோற் பணம்போற் முள்ளுக் கள்ளியின் பூப்போர்
புண்ணாய்
வீசுமே சரீரமெங்கும் விதனமும் பிறகே யுண்டாந்
தேசுதானழியுங் கைகால் தேய்ந்திடுங் கறுக்குங் கீற்றாம்
பேசுவார் வெடிகிரந்திக் குணமெனப் பெரியோர்தாமே. (4)

(இ-ள்.) காசைப்போன்றும், கள்ளிப்பூவை ஒத்ததுமான தடிப்புகள் சரீரம் முழுவதிலும் உண்டாகும். வலியும் ஏற்படும் உடலில் உள்ள பிரகாசம் மங்கும். கை கால்கள் ஓய்ந்துபோம். கருநிறமடையும். பின்பு அவ்விடத்தில் வெடிப்புகள் காணும். இவை வெடி கிரந்தி லக்ஷணங்களாகும்.

### மேதக்கிரந்தியின் குணம்

தூயதோர் சரீரந்தன்னிற் றுலங்கவே வெடித்துப் புண்ணாந்
தீயவேதனையுங் குத்துஞ் சீழ் சல மெரிவு முண்டா
மாயபுண் பருத்திபோல வதிற் சதை வெளுத்துத் தின்னும்
காயமே கனக்கு மேதக் கிரந்தியாங் கனகக்கொம்பே ! *(5)*

(இ-ள்.) சரீர முழுவதிலும் வெடிப்புகளுண்டாகிப் புண்களேற்படும். தாங்கமுடியாத குத்துவலியுடன், சீழ், சலம் முதலியவை வெளிவரும். எரிச்சலுமேற்படும். புண்களில் பருத்திக்கொட்டையைப் போன்ற சதை வளர்ந்து வெளுப்பு நிறத்துடன் பின்னர் குறைவடையும். இவை மேதோக்கிரந்தி லக்ஷணங்களாகும்.

### கர்ப்பக்கிரந்திக் குணங்கள்

விருப்புற்ற க்கர்ப்பகாலம் விரவிய தோஷந்தானே
இடுப்புற்ற சுரங்கரைப்ப னெழும்பிய வாயுவுண்டா
யுருப்புற்ற கருப்பந்தன்னை யுலைத்திடு முபாதியுண்டாங்
கருப்பத்திற் கிரந்தியென்னக் கலைவல்லோ
 ருரைக்கின்றாரே. *(6)*

(இ-ள்.)ஸ்திரீகள் கருவுற்றுருக்கையில் தோஷங்கள் கோளாறடைந்து, சுரம், கரப்பான், வாயு முதலானவைகளை உண்டாக்கிக் கருவையும் தாக்கும். இவை கருப்பக்கிரந்தி லக்ஷணம்.

## சூலை நிதானம்

### சூலையுண்டாகக் காரணங்கள்

அங்கத்தி லெண்ணெய் தேய்த்து முழுகும்நா ளரிவைசேரிற்
சங்கத்திற் சுக்கிலத்தைத் தம்பிக்கிற் றுலைநடந்த
பங்கத்திற் பசியிற் கட்க பதார்த்தத்தில் மிகும் புளிப்பில்
வங்கத்தியாச தோஷத்தில் வந்திடுஞ் சூலை தானே. *(1)*

(இ-ள்.) எண்ணெய் தேய்த்து முழுகிய நாளன்று ஸ்திரீபோகம் செய்தால் சுக்லம் ஸ்தம்பித்துப்போய் சூலைநோய்க்கு ஏதுவாகும். வெகுதூரம் வழிநடந்து ஏற்பட்ட பசிக்கு வறட்சியான பதார்த்தங்களையோ அல்லது மிகவும் புளிப்புள்ள பதார்த்தங்களையோ உபயோகித்தால் சூலை நோயுண்டாகும்.

### இதுவுமது

*அந்தணர் கற்புமாத ரருளிய சாபத்தாலு*
*முந்திய வினையினாலு முதரி கர்ப்ப மேகத்தாலுஞ்*
*சிந்தையிற் கொடுமையாலுஞ் சிவகுரு நிந்தையாலுந்*
*தொந்தமாம் வியாதியாலுந் தோன்றிடுஞ் சூலை தானே. (2)*

(இ-ள்.) பிராமணர், கற்புடைய ஸ்திரீகள் முதலானோர் கொடுத்த சாபத்தினாலும், பூர்வ வினையினாலும், கர்ப்பக் கோளாறுளினாலும், கொடூர நெஞ்சத்தினாலும், சிவநிந்தை அல்லது குருவின் நிந்தை முதலானவைகளினாலும் சூலைநோய் சம்பவிக்கும்.

### வாதசூலைக் குணம்

*வீங்கிடும் பொருத்துதோறும் விதனமுங் குத்துமுண்டாம்*
*பாங்குட னுணவு கொள்ளிற் பகைத்திடுந் திகைத்து வீழுந்*
*தாங்கிய சுரமுண்டாஞ் சரீரத்திற் குத்தமுண்டாங்*
*கோங்கிள முலையாய்! வாதச்சூலையின் குணமிதாமே. (3)*

(இ-ள்.) ஒவ்வொரு மூட்டுகளிலும் வீக்கமேற்படும். குத்துவலியும் ஏற்படும். ஆகாரத்தில் வெறுப்புண்டாகும். மயக்கமுண்டாகும். சுரம் ஏற்படும். சரீரத்தில் குத்துவலி ஏற்படும். இவை வாதச்சூலைக் குறிகளாகும்.

### வாயுவற்றிச் சூலைக்குறிகள்

*காயம் வற்றிக் கடுப்புமுண்டாங் கைகாலுளைந்து*
*கனத்திரண்டு*
*நோயு மிகுந்து நொந்துடம்பு நோக்குக்கெட்டுத் தாதுகெடுஞ்*

*சேயின்வடிவு தானழிந்து தேங்கிக்கிழவ னாமேனி*
*வாயுவற்றிச் சூலையென வகுத்துப்பேச வல்லீரே. (4)*

*(இ-ள்.)* உடல் மெலிந்து, கடுப்புவலியும் உண்டாகும். கை கால்களில் உளைச்சல் அதிகமிருக்கும். பார்வையும் மந்தமாகும். தாதுக்கள் க்ஷீணமடையும். வாலிபமான தேகத்தின் காந்தி குறைந்து கிழவர்களைப்போன்று சுருங்கிப்போம். வாயுவும் குறைந்து சூலைக்குக் காரணமாகின்றது.

**சுரோணிதச் சூலைக் குறிகள்**

*நாடோறு முடம்பு நோவால் நலிந்திடுந் திருந்திடாது*
*கூடிய பொறுத்துத் தோறுங் கொதித்துடன் கதித்துக்கூட்டு*
*மூடியே நரம்பைப்பற்றி முடங்கிடுங் கிடைபடுத்துஞ்*
*சூடிய வாதஞ்சேர்ந்த சுரோணிதச் சூலையாமே. (5)*

*(இ-ள்.)* தினமும் உடம்பில் குத்துவலியுண்டாகும். மூட்டுகளில் கண்டு கண்டான வீக்கம் ஏற்படும். நரம்புகளிலும் வலியேற்பட்டு முடங்கும். இவை வாதசோணிதச் சூலையின் குறிகளாகும்.

**திரிதோஷச் சூலைக்குறிகள்**

பாதமேல் வீங்கிக் காணு மிளைப்புடன் மயக்கங்காணும்
வாதமே பொருந்திக் காணு மலசலஞ் சிறுத்துக்காணும்
போதவே மேகங்காணும் பொங்கியே யிருமல்காணுஞ்
சேதமே செய்யுந் தீரா திரிதோஷச் சூலை யென்னே. (6)

(இ-ள்.) உடலில் வீக்கமுண்டாகும். இளைப்பு ஏற்படும். மயக்கம் ஏற்படும். வாயு அதிகரித்து மலசலத்தைக் கட்டும். இருமலுண்டாகும். இவை திரிதோஷச் சூலைக்குறிகள்.

### சுரச்சூலைக் குறிகள்

ஆதியிற் சுரமுண்டாகி அங்கத்தை மெலிவு காட்டிச்
சோதியைக் கெடுத்துச் சந்து தொறுந் தோறும்
வீக்கமுண்டாம்
பீதியுங் கனவுமுண்டா யன்னமும் பின்னமாகி
லோதிய சுரத்தின் சூலைக் குணமென வுரைக்கலாமே. (7)

(இ-ள்.) ஆரம்பத்தில் ஜ்வரம் அடிக்கும். தேகம் இளைக்கும். பார்வையைக் குறைக்கும். மூட்டுகள்தோறும் வீக்கம் ஏற்படும். தூக்கம் வாராமல் கனவுகளுண்டாகும். சாப்பாட்டில் இச்சையிராது. இவைகள் சுரச்சூலைக் குறிகளாகும்.

### வறள்சூலைக் குறிகள்

நாடோறும் உடம்புவற்றி நடந்திடில் நோவுதோன்றி
யீடுறச் சுரமுண்டாகி யேகமாய் வெளுப்புத் தோன்றிச்
சூடுற வாந்தி தோன்றித் துயரமாய் வலியுந் தோன்றில்
வாடுறு மிடையாய்ச்! சொன்னேன் வறள்சூலைக்
குணமிதென்றே. (8)

(இ-ள்.) நாளடைவில் உடம்பு இளைக்கும். நடந்தாலும் தேகத்தில் வலியுண்டாகும். ஜ்வரம் அடிக்கும். உடல் வெளுக்கும். வாந்தியெடுக்கும். வலியும் ஏற்படும். இவை வறள் சூலையின் குறிகள்.

### விஷநீர்ச்சூலைக் குறிகள்

நரம்பிடை யழல்போல் காய்ந்து மசையவே கொதித்துக்
குத்துஞ்
சுரங்கொனா மூதைவிம்முந் தூயநீர்க் கடுத்து வீழு
மரம் பெறத் திமிர்ப்புண்டாகி யபையவவ் விரல்கள் வீழு
முரம் பெறும் விஷநீர்ச்சூலை தானென வோதினாரே. (9)

(இ-ள்.) நரம்புகளில் நெருப்பைச் சுட்டதைப்போன்ற வலி உண்டாகும். குத்துவலியும் ஏற்படும். சுரம் அடிக்கும். சிறுநீர் கடுத்து வீழும். உடலில் திமிர்ப்பு உண்டாகும். விரல்களில் பலமிராது. இவை விஷநீர்ச்சூலைக் குறிகளாகும்.

**அத்திச்சூலைக் குணம்**

முழந்தான் கைகள் பொருத்துமுட்டு மோதியெலும்பு
மிகப்புடைக்கு
முளைந்தே குத்திக் கடுப்புண்டாய் வெடித்தே யொடுவு
மதிற்பாயு
வளைந்தே முடங்கும் கைகால்கள் மயமுங் கெட்டுத்
தாதுடரும்
விளைந்தே யெலும்பு சூலையென்ன ஆயுள்வேதம்
விளம்பிடுமே. (10)

(இ-ள்.) முழங்கை, முழங்கால்கள், மூட்டெலும்புகள் முதலான இடங்களில் வீக்கமுண்டாகும். உளைச்சலுண்டாகும். கடுப்பும் ஏற்படும். தோலில் வெடிப்புகளுண்டாகும். கை கால்களை முடக்கும். அடிக்கடி மயக்கமுண்டாகும். தாது க்ஷீணமுண்டாகும். இவைகள் அத்திச்சூலைக் குறிகளாகும்.

**நரம்புச் சூலைக்குணம்**

உடல் கால் கைகள் மேற்படர்ந்த வுரிபோல் நரம்பு முடிச்சு
விழு
மடவே குழைவு மில்லாமல் அடியும் புறமும்
கனத்திருக்கும்
திடமாய் நடக்க வொட்டாறு முடக்கி நரம்பு திமிர் பெரிதாய்
இடரே செய்யுங் குணம் நரம்புச் சூலையிதுவென்
றிசைப்பீரே. (11)

(இ-ள்.) தேகம், கால், கைகள் முதலான இடங்களிலுள்ள நரம்புகளில் கண்டு கண்டான

முடிச்சுகளேற்படும். மூட்டுகளிலும் வீக்கம் இருக்கும். நடக்கவியாலாது. நரம்பு முடங்கும். மதமதப்பு உண்டாகும். இவை நரம்பு சூலைக்குறிகளாகும்.

### நிதம்பச்சூலைக்குணம்

கொப்புரை வழியதாகக் குறித்துத்தான் கனத்துத் தேறி
நீர்புரை வாயிற்க் கோர்த்து நிரம்பியே முளைத் தேங்காய்போ
லொக்கவே சவ்வுமுற்றி யிடுப்புளைந் திருக்கும் நாளில்
நீர் பொசிந்திருக்குமாகில் நிதம்பத்திற் சூலைதானே. (12)

(இ-ள்.) தொப்புள் வழியாக மர்மஸ்தானம் வரை கனத்துப்போகும். முளைத்தேங்காயைப்போல வீக்க முண்டாவதுடன் இடுப்பும் கடுக்கும். இவை ஆண்களின் நிதம்பசூலைக் குறிகள்.

### இதுவுமது

பிள்ளை பெற்ற போததனிற் பெருத்தயோனி தனில் வாயு
உள்ள குருதியுடன் றடைபட் டொதுங்கிப்
புரைபட்டொடுவாகி
மெள்ள கனத்தோர் பால்வீங்கி வெடித்தே வலியு மாறாது
வள்ளைக் குழையாயிக் குணந்தா னிதம்ப சூலை
வகையாமே. (13)

(இ-ள்.) குழந்தை பிறந்தபின் மர்மஸ்தானத்தில் வாயு தங்கி ரத்தம் வெளிவராமல் நின்று புரைபோக ஆரம்பிக்கும். மார்பில் பாலும் கட்டி காம்பில் சிறுசிறு வெடிப்புகளுண்டாகும். வலிகொடுக்கும். இவைகள் பெண்களின் நிதம்பசூலை நோயாகும்.

### இதுவுமது

வெய்ததோர் கிரந்தி தன்னால் மேவிய யோனி மீதே
மொய்பனையதின் காய்த் தோல்போல் மோதியே
கனத்துக்கட்டி
ய்யுநீ கொடுவுமாறா நயனத்திற் றசைபோ லுந்து
ய்விலா நிதம்பசூலை தானென வோதினாரே. (14)

(இ-ள்.) கர்ப்பக்கிரந்தியினால் யோனியில் பனைங்காயைப் போன்ற வீக்கம் உண்டாகும். நயனத்தில் தசை வளருவதைப் போன்ற சதை வளர்ச்சியும் இதன்மேல் காணும். இவை நிதம்பசூலைக் குறிகள்.

### அண்டசூலைக் குறிகள்

வாய்வினால் நீரினால் மாங்கிஷத்தால் ரத்தத்தா
லாயபல சூலையோ யண்டத்தோர் பாலினின்று
சேய குடருள்ளே செனிற்றிறங்கி மிக்குணங்கள்
நேயம சாத்தியமாம் நீயறிந்து கொள்வாயே. (15)

(இ-ள்.) அண்டத்தில் வாயுவினாலும், நீரினாலும், மாம்ஸ வளர்ச்சியினாலும், ரத்தம் உறைவதாலும், வலியுடன் கூடிய வீக்கத்தை உண்டாக்கும். சிறுகுடலும் சிற்சில சமயங்களில் அண்டத்திலிறங்கும். இவை யாவும் அசாத்தியமாகும்.

### இதுவுமது

கொண்டிருங் குடலிற்றங்கி குறித்தொரு விதையுற் றோன்று
மண்டியே விதைதானொன்றை வலித்தேற வுடலுள்
வாங்கும்
பண்டுதானண்ட வாயுப் பற்றிய சூலையென்று
அண்டரு முனிவர் தாமு மறியவே யுரைக்கலுற்றார். (16)

(இ-ள்.) வாயு குடலிலதிகரித்து விதைக்குள் இறங்கும். ஒரு விதையையும் பற்றி இழுக்கும். வலி அதிகமிருக்கும். இது அண்டவாயுச் சூலைக்குறிகள்.

### பக்கசூலைக் குறிகள்

வந்துபொருமு முதரத்தில் வலித்துமிகவே சுரந்தோன்றும்
நொந்து சரீரம் புண்போல நோவினுடனே தலைவலிக்கு
மிந்தக் குணத்தோ டொருபக்கத் திடரே மிகுந்து
வேதனையாய்த்
தொந்தக் குணங்களிவை பக்கச்சூலையெனவே சொல்வீரே.

(இ-ள்.) வயிற்றில் பொருமலேற்படும். சுரம் அடிக்கும். சரீரத்தில் புண்போல் வலியுண்டாகும். தலைவலியும் ஏற்படும். ஒரு பக்கத்தில் (வலதோ இடதோ) வேதனை அதிகமிருக்கும். இவை பக்கச்சூலையின் குறிகள்.

### ஆந்திரசூலைக் குறிகள்

கொண்டதோர் பிரமேகத்தின் குணத்தினோர் பாலில் வீங்கி
விண்டிகக்குறுக்கு நொந்து மிகுஞ்சுரம் பிடரி நோவாம்
பண்டு தானண்ட வாதம் பற்றியே குடலுள் வாங்கு
மண்டரு மறியச் சொன்னோ மாந்திரச் சூலையாமே. (18)

(இ-ள்.) பிரமேகக் குறிகளை ஒத்திருக்கும். (துடை இடுக்கின்) ஒருபக்கத்தில் வீக்கமுண்டாகி, நோய் ஏற்பட்டுச் சுரம், பிடரிகனம் முதலானவைகளுடன் குடல் அண்டகோசத்தினுள் இறங்கும். இது ஆந்திரசூலைக் குறிகளாகும்.

## பாண்டு நிதானம்

திருந்திடும் பாண்டு ரோகஞ் சேர்ந்திடுங் குணத்தைக் கேளாய்
இருந்திடும் வாதபித்தச் சிலேற்பன மிவைதான் மாறிப்
புரிந்துதா னொன்டோன்று பொருந்துவதாலு மண்ணோ
டருந்துவதாலும் பாண்டு வணைந்திடு மென்னலாமே. (1)

ஆகிய மூலந்தன்னி லணைந்தவுட் டணத்தினாலுந்
தோகையர் மோகத்தாலுந் துயர்மிகு சோகத்தாலுந்
தேகபோஷ ணையுள்ளார்க்குத் தரித்திரஞ் சேர்தலாலும்
வேகமாந் திரிதோஷங்கள் மிஞ்சியே பாண்டுவாமே. (2)

(இ-ள்.) வாத, பித்த, கபங்கள் ஒன்றோடொன்று தூஷித்துப் போவதனாலும் ஏற்படும். மண்ணைத் தின்பதினாலும் பாண்டு என்கிற சோகை உண்டாகும். இதைத்தவிர மூலாதாரத்தில் இருக்கவேண்டிய உஷ்ணம் குறைந்து போவதாலும், ஸ்திரீகளிடம் அதிக இச்சை

உண்டாவதாலும், மிகுந்த வருத்தத்தாலும், நன்றாகச் சௌக்யமான தேக புஷ்டியையுடயவர்கள் திடீரென ஏழையானாலும், திரிதோஷங்கள் கோளாறடைந்து பாண்டு ரோகத்திற்குக் காரணமாகின்றன.

**பித்த பாண்டுவிற்குக் காரணங்கள்**

*ஏய்ந்தவுட் டினக்காலத்தில் எழும்பிடும் பித்தந்தன்னில்*
*வாய்ந்திடும் உப்புப் புளிப்பு மரிசந்தா னெனும் பதார்த்தம்*
*சேர்ந்துபித் தந்தான் கெட்டு சிலேற்பனம் பொருந்தித்*
*தேக்கிற்*
*பாய்ந்து வண்ணந் தனைக் கெடுக்கும் பயித்தியப்*
*பாண்டுவாமே. (4)*

*(இ-ள்.)* உஷ்ணகாலத்தில் சாதாரணமாகப் பித்தம் அதிகரித்திருக்கும்போது உப்பு, புளிப்பு, மிளகு முதலானவைகளை அதிகம் சாப்பிட்டால் பித்தம் கெட்டுப்போம். கபமும் கோளாறடைந்து தேககாந்தியை அழிக்கும். பித்தபாண்டு ரோகம் சம்பவிக்கும்.

**சந்நிபாத பாண்டு உண்டாகக் காரணம்**

*பாண்டுவிற் சந்நிபாதப் பாண்டுவுண் டாகுஞ் செய்கை*
*பூண்டநித் திரைதவிர்ந்தே யகாலநித் திரையை பூண்டு*
*ஆண்டிடுஞ் சுரமாந்தன்னில் பத்தியஞ் செய்கையாலு*
*மீட்டியே வெயிலினாலும் யெழுமெனப்*
*பயில்கின்றோமே. (4)*

*(இ-ள்.)* தூக்கம் வரும்போது தூங்காமல், அகாலத்தில் நித்திரை செய்வதாலும், சுரம் வந்தபோது அபத்யமான பதார்த்தங்களை சேவிப்பதனாலும் வெயிலில் நடப்பதாலும், சந்நிபாத பாண்டு நோயுண்டாகும்.

*7 வகைப் பாண்டுரோகத்தின் பெயர்கள்*

*பயித்திய பாண்டு வாத பாண்டுவே சிலேத்மபாண்டு*
*வியத்திரி தோஷப் பாண்டு வெளும் பித்தச் சிலேத்ம பாண்டு*

பயித்திய வாதபாண்டு பகர் சந்நிவாதபாண்டு
நயப்புறும் பாண்டு வேழின் குணத்தை நான் நவிலுற்றேன்.

(இ-ள்.) பித்தபாண்டு, வாதபாண்டு, சிலேத்மபாண்டு, சந்நிபாதபாண்டு, பித்தச்சிலேத்மபாண்டு, பித்த வாதபாண்டு, திரிதோஷ பாண்டு என்று ஏழுவகைப்படும்.

**பித்தப்பாண்டுவின் குறிகள்**

உற்றதோர் வன்னபேதம் அரோசக முதரமந்த
முற்றிய மார்பு நோவு மூத்திரம் பொன்னின் வன்னம்
வெற்றிசேர் புறங்கால் கைகண் வீங்குடல் வெளுத்தல்
வேர்த்தல்
பற்றிய தொக்கிற் காய்தல் பயித்திய பாண்டுவாமே. (6)

(இ-ள்.) உடலில் நிறவேறுபாடு, அரோசகம், வயிற்றில் மந்தம், மார்புவலி, மூத்திரம் மஞ்சள் நிறமாக இறங்கல், புறங்கால், கண் முதலானவிடங்களில் வீக்கம், உடல் வெளுத்துப்போதல், அடிக்கடி வியர்வையுண்டாதல், உடலில் சூடு முதலான குறிகள் காணும்.

**வாதபாண்டு ரோகக் குறிகள்**

ஆனகண் மலசலங்கள் அணி நகங் கறுப்பதாகுந்
தாகமாமங்க மெங்குந் தடியடி படுகை போல
மீனமாய் நடுக்க முண்டா மிசைந்ததுர் பலமுமுண்டா
மானநீர் வாதபாண்டு வென்னவே வகுக்கலாமே. (7)

(இ-ள்.) கண்கள், மலம், சிறுநீர், நகம் முதலானவிடங்கள் கறுநிறமடையும். தடியினால் அடிபட்டால் எவ்வாறு தேகமெங்கும் வலியுண்டாகுமோ அதைப்போன்ற வலியும் உண்டாகும். நடுக்கம் ஏற்படும் பலஹீனமும் ஏற்படும். இவைகள் வாதபாண்டு ரோகக் குறிகளாகும்.

## சிலேத்ம பாண்டுக் குறிகள்

வகுத்திடிற் சத்தியுண்டா மற்றுமே யருசி யுண்டா
மிகுத்த வாய்ப்பிளைப்பு முண்டா வீக்கங்கள்
வெளுப்புமுண்டாம்
நகத்தினில் வெளுப்பு முண்டாம் நாடியும்
பலக்கேடுண்டாம்
பகுத்திடுஞ் சிலேற்பனத்திற் பாண்டு வென்றுரைக்கலாமே.

(இ-ள்.) காரணமின்றி வாந்தியெடுக்கும். அருசியும் ஏற்படும். மேல்மூச்சு வாங்கும். உடல் வீங்கும். வெளுப்பாகவும் ஆகும். நகங்களும் வெளிறிவிடும். நாடிகள் பலஹீனமாகும். இவைகள் கபப்பாண்டுவின் லக்ஷணங்களாகும்.

## திரிதோஷப் பாண்டுக் குறிகள்

உரைத்திடில் புறங்கால் மேற்கை யொளிர் முகம் கண்ணும்
வீங்கும்
நிரைத்திடு மிளைப்புச் சத்தி யெடுக்கும் மார் பினில்
வலிக்கும்
நுரைத்தநீர் நகங்கண் மஞ்சளல்லது கறுப்பு நோக்குந்
திரைத்துடல் கடுக்கும் வியர்குந் திரிதோஷப்
பாண்டுவென்னே. (9)

(இ-ள்.) புறங்கால், மேல்கை, முகம், கண்கள் முதலானவிடங்களில் வீக்கமுண்டாகும். இழுப்பு ஏற்படும். வாந்தியும் எடுக்கும். மார்பு வலியும் உண்டாகும். நகம், கண்கள் முதலானவை மஞ்சள் நிறமோ அல்லது கருநிறமோ அடையும். உடல்வலியும் காணும். அதிகமான வியர்வையும் உண்டாகும். இவை திரிதோஷப் பாண்டுவின் லக்ஷணங்களாம்.

**வாதபித்த, பித்தச்லேத்ம பாண்டுவின் குறிகள்**

*என்றிடும் பித்தபாண்டு விதனோடு வாதபாண்டு*
*வொன்றிடிற் பித்தவாத பாண்டுவென் றோதலாகும்*
*அன்றியும் பித்தபாண்டு வதனோடு சிலேத்ம பாண்டு*
*சென்றிடிற் பித்தச் சேத்ம பாண்டுவாய்ச் செப்பலாமே. (10)*

*(இ-ள்.) பித்தபாண்டு, வாதபாண்டு இவ்விரண்டின் குறிகளும் பித்தவாத பாண்டுவிலுண்டாகும். பித்தபாண்டு, சிலேத்மபாண்டு இவ்விரு நோயின் குறிகளும் பித்த சிலேத்ம பாண்டுவில் காணும்.*

**சந்நிபாத பாண்டுவின் குணம்**

*செப்பிய திரிதோஷத்தின் செய்கையுண்டாக ரத்தந்*
*தப்பிய சரீரம் வீங்கச் சலமலம் நகங்கள் பொன்போ*
*லிப்படிச் சந்நிவாத பாண்டுவி னியல்பதாகு*
*மொப்புறு மருந்திற் றீரா தசாத்திய மென்னவோதே. (11)*

*(இ-ள்.) இரத்தம் குறைவடைந்து, சரீரம் வீங்கும், மலம், மூத்திரம், நகங்கள் முதலான உறுப்புகள் பொன்போல் மஞ்சள் நிறமாகும். இவை சந்நிபாத பாண்டுவின் குறிகளாகும். இந்நோய் மருந்தினால் தீராதென்றும் அசாத்தியமென்றும் அறியவும்.*

**சாத்யா சாத்யங்கள்**

*ஓதியபாண்டு வேழிற் றிரிதோஷ பாண்டு வொன்று*
*தீதுசெய் சந்நிவாத பாண்டுவுந் தீராதாகுஞ்*
*சாதகமாகும் பாண்டு வோரைந்துஞ் சாத்தியந்தா*
*னீதுதானாயுள் நூலி னியல்பென லறிகுவீரே. (12)*

*(இ-ள்.) திரிதோஷ பாண்டுவும், சந்நிபாத பாண்டுவும் தீராது. மற்ற ஐவகை பாண்டு ரோகங்களும் தீரும்.*

## சிகிச்சை முறைகள் (வாதரோகங்களுக்கு)

### பக்குவாசய வாதத்திற்குச் சிகிச்சை

*திருந்திய பஞ்சமூலந் திரிபலை நெரிஞ்சிவித்து*
*பொருந்து மா வலிங்கு காயம் புனலிவேர் காய்ந்தநீரில்*
*அருந்துவீர் பொரிக்காரத்தோ டாமணக்கெண்ணெயாகி*
*லிருந்திடும் வாதம் பக்குவாசயமேகு மென்றே.* (1)

| (இ-ள்.) | பில்வம் | குமிழ் |
|---|---|---|
| | பாதிரி | வாகை |
| | முன்னை | கடுக்காய்த்தோல் |
| | நெல்லிவற்றல் | தான்றித்தோல் |
| | நெருஞ்சில்வித்து | மாவலிங்கை |
| | பெருங்காயம் | புனலிவேர் |

*இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்துக் கல்லுரலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். இதில் 1 பலம் எடுத்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எட்டிலொன்றாகும்வரை எரித்து, மூவிரல் கொள்ளுமளவு பொரிக்காரமும், 2 ஸ்பூனளவு ஆமணக்கெண்ணெயும் விட்டு உட்கொள்ளவும். பக்குவாசய வாதங்கள் தீரும்.*

### ஆமாசய வாதத்திற்குச் சிகிச்சை

*தசமூல மரத்தைக் கோஷ்டந் திரிகடு கடகசிங்கி*
*நிசமூல மாடாதோடை நிச்சுர தாரு வோமம்*
*குசமூலங் கடுக்காய் தான்றிக் கூடிய கஷாயங்கொள்ளில்*
*அசைமூலமாகத் தீரும் ஆமாசய வாதமென்னே.* (2)

| (இ-ள்.) | தசமூலம் | சிற்றரத்தை |
|---|---|---|
| | கோஷ்டம் | சுக்கு |
| | திப்பிலி | மிளகு |
| | கற்கடசிங்கி | ஆடாதோடைவேர் |
| | தேவதாரு | ஓமம் |
| | தர்ப்பைவேர் | கடுக்காய்த்தோல் |
| | தான்றித்தோல் | |

இவைகளைச் சரி எடை எடுத்துக் காயவைத்துக் கல்லுரலில் ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது இதில் 1 பலம் சூரணம் எடுத்து 8 மடங்கு சுத்த ஜலம்விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டிப் பருகவும். ஆமாசயத்தில் சேரும் வாயுக்கள் தீரும்.

***குறிப்பு:-*** தசமூலம் வில்வம், குமிழ், வாகை, பாதிரி, முன்னை, கத்திரி, முள்ளுக்கத்திரி, நெருஞ்சில், ஓரிலை, மூவிலை இவைகளின் வேர் வகைகளாகும்.

### உதரவாதத்திற்குச் சிகிச்சை

திரிகடு கடுக்காய்தான்றி செவ்வியம் சிறுகாஞ்சோறி
வருமதுத்துனுகிக் கோஷ்டம் வாத்தலைக் கரந்தைகொற்றா
வெரி வினிற் காய்ந்தெட்டான்றா யிசைசிந்தா
மணியோடுண்ணப்
பரிவுறு முதரவாதம் பறந்திடு மறிந்து கொள்ளே. (3)

(இ-ள்.)

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கடுக்காய்த்தோல் |
| தான்றித்தோல் | செவ்வியம் |
| சிறுகாஞ்சோறி | கோஷ்டம் |
| பறங்கிச்சக்கை | கொற்றான் |
| சிவகரந்தை | |

இச்சரக்குகளைச் சரி எடையெடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வைத்துக்கொள்ளவும். வேண்டும் போது 1 பலம் தூளெடுத்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1 ஆக வற்றவைத்து வடிக்கட்டி உட்கொள்ளவும். வயிற்றிலுண்டாகும் வாதங்கள் தீரும்.

### மாங்கிச வாதத்திற்குச் சிகிச்சை

ஆகிய பஞ்சகோலக் கஷாயத்தக் கினிகுமாரஞ்
சேகர மாகிற் றீருஞ் செந்தை வேர் வேப்பம்பட்டை
பாகுறு பிரப்பமூலம் பறங்கியின் பட்டை நீரால்
மாகரு மறியச்சொன்னோ மாங்கிஷ வாதம் போமே. (4)

(இ-ள்.) 1. பஞ்சகோலக் கஷாயத்துடன் அக்கினிகுமாரச் செந்தூரத்தை உட்கொள்ளக் கொடுக்கவும்.

2. செந்தைவேர், வேப்பம்பட்டை, பிரப்பமூலம், பரங்கிப்பட்டை இவைகளையும் சமனெடுத்து இடித்துக் கஷாயம் வைத்துப் பருகிவரவும். மாங்கிஷ வாதந்தீரும்.

**குறிப்பு:-** திப்பிலி, கண்டத்திப்பிலி, செவ்வியம், கொடிவேலிவேர், சுக்கு இவைகள் பஞ்சகோலமாகும்.

### மேதஸு வாதத்திற்குச் சிகிச்சை

சுண்டியா மணக்கின் மூலஞ் சூரல்வேர் சிவனார் வேம்பு
கொண்ட சாரணை பூவாகை கோலத்திப் பிலியின்மூல
மண்டிய கஷாயந்தன்னி லிந்துப்பா மணக்கினெண்ணெய்
உண்டிடும்போது மேத சுவாதம தோடு மென்றே. (5)

| (இ-ள்.) சுக்கு | ஆமணக்கம்வேர் |
|---|---|
| சூரைவேர் | சிவனார்வேம்பு |
| சாறணைவேர் | வாகைவேர் |
| இலந்தைக்கொட்டை | திப்பிலிமூலம் |

இவைகளைச் சமனெடுத்து உலரவைத்துக் கல்லுரலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்துக்கொள்ளவும். இதில் 1 பலம் எடுத்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக எரித்து வடிக்கட்டிக்கொண்டு, இந்துப்பு, ஆமணக்கெண்ணெய் இரண்டும் வேண்டிய அளவு சேர்த்து உட்கொள்ளவும். நன்கு பேதியாகும். மேதஸ் வாதம் தீரும்.

### அத்திவாதத்திற்குச் சிகிச்சை

சூரல் வேருவாய் வேர் வீழி தூய வியாக்ரி வேர் சுண்டி
பாரில் வேர் தேவதாரம் பகர் கண் மரிசங்கோஷ்டம்
நீரினி லெட்டொன்றாக்கி நிறைந்தவக் கினி குமார
மாறவே பருகு வோருக் கத்தியில் வாதம் போமே. (6)

(இ-ள்.) சூரல்வேர் உகாவேர்
வீழிவேர் கண்டங்கத்திரிவேர்
சுக்கு தேவதாரம்
மிளகு கோஷ்டம்

இவைகளைச் சமனெடுத்துக் கல்லுரலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். ஒருபலம் தூளுடன் 1 சேர் தண்ணீர்விட்டூறவைத்து 1 ஆக வற்றவைத்து அக்கினிகுமார ரசத்துடன் பருகிவரவும். அஸ்தி வாதம் தீரும்.

## மச்சைவாதச் சிகிச்சை

செய்யகுண் டலியின்வேருஞ் சிறந்ததூ தளையின்வேரும்
துய்யதோர் புனலியாடா தோடைவே
ரிலைக்கொற்றான்வேர்
நய்யவே காய்ந்தநீரில் நலம்பெறு ரசதபற்பம்
பய்யவே நுகர்வீராகிற் பறந்திடு மச்சை வாதம். (7)

(இ-ள்.) சங்கம்வேர் தூதுவேளைவேர்
புனலிவேர் ஆடாதோடைவேர்
கொத்தான்வேர்

இவைகளைச் சரியெடை எடுத்து நசுக்கிச் சுத்தஜலம் 8 மடங்கு விட்டு, எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டி வெள்ளி பற்பத்துடன் உட்கொள்ளவும். மஜ்ஜை வாதங்கள் தீரும்.

## சுக்கில வாதத்திற்குச் சிகிச்சை

சுக்கில வாத மென்னுந் துயரது தீரவேண்டிற்
சுக்கது பதின் கழஞ்சு சுகம் பெறக் காய்ந்த நீரில்
மிக்குள லவங்கஞ் சாதி வினவிய சொர்ணபற்பம்
மொக்கவே நுகரவேண்டு மோதிமர் பெடையினல்லாய்! (8)

(இ-ள்.) சுக்கு 12½ கழஞ்சளவெடுத்து இடித்து 8 மடங்கு ஜலம் விட்டு எட்டிலொன்றாகும்வரை வற்றவைத்து வடிக்கட்டிக் கஷாயத்துடன் சொர்ண பற்பம் கூட்டி உட்கொள்ளவும். சுக்கில வாதங்கள் தீரும்.

## சந்நிகத வாதத்திற்குச் சிகிச்சை

*பகர்ந்திடும் பஞ்சகோலம் பரிந்தொரு பலம் நன்னீரில்*
*சுகம் பெறக் காய்ந் தெட் டொன்றாய்ச் சுறுங்கிய கஷாயந்*
*தன்னிற்*
*நிகழ்ந்திடுங் காந்தஞ் சூதச் செந்தூரஞ் சேர்ந்துண்பீரா*
*லுகந்திடுங் கொடிய சந்திகத வாதமோடு மென்னே. (9)*

*(இ-ள்.) திப்பிலி, கண்டத்திப்பிலி, செவ்வியம், கொடிவேலிவேர், சுக்கு இவைகளை 1 பலம் எடுத்து இடித்து, 1 சேர் சுத்தஜலம் விட்டு எட்டிலொன்றாக வற்றவைத்து ரசச்செந்தூரம், காந்தச்செந்தூரம் இவைகளுடன் கூட்டி அருந்தி வரவும். சந்நித (மூட்டுகளில் ஏற்படும்) வாதங்கள் தீரும்.*

## ஆட்சேப வாதத்திற்கு

*முற்றிய நிம்பத்தோலு முதிர்ந்திடுஞ் சிவனார் வேம்பும்*
*பற்றிய இசங்கம் வேரும் பகர்பஞ்ச கோலத்தோடும்*
*வற்றிநீ ரெட் டொன்றாக்கி வாதராட்சஸன் சேர்த்துண்ண*
*வற்றி டுஞ் சொன்னேன் சொன்னேன் ஆட் சேப*
*வாதமென்னே. (10)*

*(இ-ள்.)*

| | |
|---|---|
| *முதிர்ந்த வேப்பம்பட்டை* | *முற்றிய சிவனார்வேம்பு* |
| *சங்கம்வேர்* | *திப்பிலி* |
| *திப்பிலிமூலம்* | *செவ்வியம்* |
| *சித்திரமூலம்* | *சுக்கு* |

*இவைகளைச் சமனெடுத்து இடித்து (ஒன்றிரண்டாக்கி) ஒரு டப்பியில் பத்திரப்படுத்தி வைக்கவும். இதில் ஒரு பெரும் டீஸ்பூனளவெடுத்து 1 சேர் தண்ணீர் சேர்த்து, எட்டிலொன்றாக்கி வடிக்கட்டி வைத்துக்கொண்டு, வாதராட்சஸ மாத்திரையுடன் உட்கொள்ள ஆட்சேபகவாதம் (நடுக்குவாதம்) நீங்கும்.*

## அவதந்திர வாதத்திற்குச் சிகிச்சை

*சிவதைவேர் செவ்வியஞ் சுக்குத் திரிபலை புனலிக்கொற்றா*
*ணிவைவகை கழஞ்சிரண்டி லிசைந்த நீரொட்டான்றாக்கி*
*குவிமுலைமானே! வாயுக் குடார மிட்டுண்பாராகில்*
*நவையவதந்திர வாதம் நடுங்கிப்பின் பறந்துபோமே. (11)*

*(இ-ள்.) சிவதைவேர் — செவ்வியம்*
*சுக்கு — கடுக்காய்த்தோல்*
*நெல்லிவற்றல் — தான்றித்தோல்*
*கொத்தான்*

*இவைகளை வகைக்கு 2 வராகனெடை வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து 1/8 ஆக வற்றக் காய்ச்சி வாயுக்குடாரம் என்ற மருந்துடன் உட்கொள்ளவும். அவதந்திரக (அபதந்திரவாதம்) வாயு நீங்கும்.*

## அந்தராயாம வாதத்திற்குச் சிகிச்சை

*சிக்குருமூலம் வேலிப் பருத்தித்திப் பிலியே தாரஞ்*
*சுகமுடன் மிளகு வெள்ளைத் தோடுள்ளி வருணத்தொக்கு*
*மைக்குழல் மயிலே காய்ந்து வடித்தநீ ரதனிற் சூத*
*சக்கிய மருந்தால் அந்த ராயாமமுந் தவிருமென்றே. (12)*

*(இ-ள்.) முருங்கை வேர் — வேலிப்பருத்தி*
*திப்பிலி — தேவதாரம்*
*மிளகு — வெள்ளைப்பூண்டு*

*இவை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து வைத்துக் கொள்ளவும். இதில் 1 பலம் தூளெடுத்து 1 சேர் தண்ணீருடன் சேர்த்து, 8ல் ஒன்றாகும்வரை வற்றவைத்து வடிக்கட்டி சூதசாக்ய மருந்துடன் உட்கொள்ளவும். அந்தராயாம வாதம் தீரும்.*

## பாகியாயாம வாதத்திற்குச் சிகிச்சை

*அந்தராயாம வாத மதற்குச் சொல்லிய கஷாயந்*
*தந்திரமாமருந்து தன்னினாற் றீரு மென்கச்*

சுந்தரத்திருவி நல்லாய் சுக்குநீ ரதனிற்சூத
பந்தன மருந்து கொள்ளிற் பாகியா மம்போமென்னே. (13)

(இ-ள்.) அந்திராயாம வாத ரோகத்திற்குக் கூறப்பட்டக் கஷாயத்தை உட்கொண்டாலும் அல்லது சூதபந்தன மருந்தைச் சுக்குக் கஷாயத்துடன் உட்கொண்டாலும் பாஹ்யாயாம ரோகம் தீரும்.

## பிராணாயாம வாதத்திற்குச் சிகிச்சை

குண்டலி நிலவாகைத் தூறு கூறிய பஞ்சகோலஞ்
சுண்டிய கஷாயந் தன்னிற் சூதமாரண மருந்தை
யுண்டிடிற் றீருந்தீரு முரைத்திடும் பிராணாயாமம்
பண்டித முனிவன் கூறும் பரிசிவை யறிந்துகொள்ளே. (14)

(இ-ள்.) சங்கம்வேர் நிலவாகைவேர்
திப்பிலி திப்பிலிமூலம்
செவ்வியம் சித்திரமூலம்
சுக்கு

இவைகளைச் சரியளவெடுத்து இடித்துச் சுத்தஜலம் 8 மடங்கு விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டி, சூதமாரணம் என்ற மருந்துடன் உட்கொள்ளக் கொடுக்கவும். பிராணாயாம வாதங்கள் தீரும்.

## அனுசிராங்கிஷ வாதத்திற்குச் சிகிச்சை

தப்பிலா ராமபாணத் தைலத்தினாலுங் கொற்றான்
வைப்புலாங் கள்ளி நொச்சி வேம்புமத் தெருக்கு மேனி
வொப்பிலாப் பொட்டணஞ் சேர்த்தொடம் போடலாலும்
அப்புலாங் கண்ணி! கேளாய்! அனுசிராங்
கிஷம்போமென்னே. (15)

(இ-ள்.) ராமபாணத் தைலத்தை உடலில் தேய்த்துக்கொண்டு, கொத்தான், கள்ளி, நொச்சி, வேம்பு, ஊமத்தை, எருக்கு, குப்பைமேனி இவைகளை ஒரு மூட்டையாகக் கட்டிச் சூடாக்கி ஒத்தடம் போட்டாலும் குணமாகும்.

**சீவுகாத்தம்ப வாதத்திற்குச் சிகிச்சை**

*அக்கிராக் கடுகுரோணி மாகதி வசம்பு சுக்கு*
*மிக்கநா ரத்தம்பிஞ்சும் விரவியே நாவிற்றேய்க்க*
*குக்குடாண்டத்தி நெய்யைக் கொடுறுக்கிப் பிடரிற்றேய்க்க*
*கச்சிகேள் மருந்து செய்யச் சிவ்வுகாத்தம்பம் போமே. (16)*

*(இ-ள்.)* அக்கிராக்காரம் — கடுகுரோகிணி
திப்பிலி — வசம்பு
சுக்கு — நார்த்தம்பிஞ்சு

இவைகளை இடித்து நாக்கில் தேய்க்கவும். அண்ட தைலத்தைப் பிடறி, உச்சி முதலான இடங்களிலும் தேய்க்கவும்.

*சீவுகாத்தம்பம் - ஜிஹ்றவாஸ்தம்பம்*

**அர்த்தித வாதத்திற்குச் சிகிச்சை**

*விடமுட்டித் தைலமாதி மிக்குளத் தைலத்தாலுந்*
*திடமிட்ட பஞ்சாருக்கஞ் சிநேகபொட்டணத்தினாலும்*
*புடமிட்ட ரசசெந்தூரம் பூஷண விதத்தினாலும்*
*மடமிட்டு முகத்தைச் சாய்க்கும் அத்தித வாதம் போமே. (17)*

*(இ-ள்.)* விஷமுட்டித் தைலத்தை மேலே தேய்த்து வருவதனாலும், பஞ்சார்க்க ஸ்நேஹ பொட்டணத்தினாலும், ரசசிந்தூரம், ரசபூஷணம் முதலான மருந்துகளை உபயோகிப்பதனாலும் அர்த்திதவாதம் (Paralysis facial) நீங்கும்.

**சிரோக்ரஹ வாதத்திற்குச் சிகிச்சை**

*பஞ்சார்க்கத் தைலம் தேய்த்துப் பகர்நொச்சி வசம்பு கள்ளி*
*பிஞ்சாருக் குருடமேனி வெதுப்புற வொத்தல் செய்து*
*பஞ்சார்க்கம் பஞ்சகோலங் காய்ந்தநீர் பருகச் செய்யில்*
*துஞ்சார்க்க நரம்பிலேறிற் றுடராச்சி ராக்கதம் போமென்னே.*

*தன்-2 வந்திரி-10*

(இ-ள்.) பஞ்சார்க்கத் தைலத்தைத் தலையில் தேய்த்துக்கொண்டு, நொச்சி, வசம்பு, கள்ளி, குப்பைமேனி இவைகளை நசுக்கிப் பொட்டணங்கட்டி, வெதுப்பி ஒத்தடமிடவும். பஞ்சகோல கஷாயத்தையும் பருகி வரவும். நரம்பில் வாயு சேர்ந்து, வலியைத் தரும். சிரோக்ரஹம் என்ற நோய் தீரும்.

**பக்கவாதத்திற்குச் சிகிச்சை**

மிக்குராத் தைலத்தாலும் விரவு மொத்திடத்தினாலுஞ்
சுக்கு நீரிஞ்சிச்சாறு துலங்கு வெள்ளுள்ளிச்சாறு
புக்கியாசலோகாதி பொரு நம மருந்தினாலும்
பக்கவாதந் தான்றீரு மெனிமுனி பகர்கின்றாறே. (19)

(இ-ள்.) அமுக்கிராத் தைலத்தை மேலே தேய்ப்பதனாலும், அதையே ஒத்தடம் கொடுப்பதனாலும் சுக்குக் கஷாயம், இஞ்சிச்சாறு, பூண்டுச்சாறு இவைகளுடன் லோகாதி பொருமம் மருந்தை உட்கொள்ளுவதனாலும் பக்கவாதம் தீரும்.

**சர்வாங்க வாதத்திற்குச் சிகிச்சை**

சுக்குடன் றிருகுகள்ளி துயமூலங் காய்ந்த நீரிற்
குக்கில் சூரணமதாகக் கொண்டிட மண்டலந்தான்
மிக்குள தைலமோதல் விதம்பெறச் செய்யச் செய்யச்
சிக்கியே சர்வாங்கத்தைச் சேர்ந்திடும் வாதம்போமே. (20)

(இ-ள்.) சுக்கு, திருகுக்கள்ளி இவ்விரண்டையும் சமனெடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டி, அதனுடன் குக்கில் சூரணம் சேர்த்து, 45 நாட்கள் உட்கொள்ளவும். அமுக்கிராத் தைலத்தையும் மேலே தேய்க்கக்கொள்ளலாம். சர்வாங்க வாதம் தீரும்.

### தண்டக வாதத்திற்குச் சிகிச்சை

ஆதளை இசங்குகள்ளி ஆமணக்கதின்வேர் சுக்கு
மேதகு பலையோர் மூன்று மேவிய கஷாயந் தன்னிற்
கோதறு காந்தம் வாயுக் குடோரமிட்டுண்ண வுண்ணச்
சாதக மாகத்தீரும் தண்டகவாத மென்னே. (21)

(இ-ள்.) காட்டாமணக்கம்வேர் சங்கம்வேர்
கள்ளிவேர் ஆமணக்கம்வேர்
சுக்கு கடுக்காய்த்தோல்
நெல்லிவற்றல் தான்றித்தோல்

இவைகளைச் சரிசமனெடுத்து ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். இதில் 1 பலம் சூரணம் எடுத்துத் தண்ணீர் 1 சேர் விட்டு, அடுப்பின்மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டிக் காந்தச் செந்தூரம், வாயுக்குடாரம் முதலான மருந்துகளையிட்டுப் பருகவும். தண்டக வாதம் தீரும்.

### சாருக வாதத்திற்குச் சிகிச்சை (பாஹுக)

ஆனதூர்த்தூரபன்ன மாமணக்கிலை நிற்குன்றித்
தானமா யேரண்டத்தின் றயிலத்தாற் கற்குஞ் சேர்த்துப்
பானமா முதிய வேப்பம் பட்டையின் கஷாயங்கொள்ள
யீனமாய்க் கையை வீழ்த்தும் அவசாருகம் போமென்னே.

(இ)-ள்.) ஊமத்தையிலை, ஆமணக்கம் இலை, நொச்சியிலை இவைகளை அரைத்து ஆமணக் கெண்ணெயுடன் குழப்பி அடுப்பின்மேலேற்றிக் கொதிக்க வைத்துப் பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு, இதனை வேப்பம்பட்டைக் கஷாயத்துடன் உட்கொள்ளவும். கையை வீழ்த்தக்கூடிய அபசாருகம் (அபபாஹுகம்) என்ற நோய் நீங்கும். நன்கு பேதியாகும்.

**குறிப்பு:-** தூர்தூரபன்னம் - தூத்தூரபர்ணம் அதாவது ஊமத்தையிலை.

## விச்வபீ வாதத்திற்குச் சிகிச்சை

*வருடம் நூறான வேம்பில் வருபட்டை கொடி கழற்றூர்*
*குருடக மூலங் கொற்றான் கூடிய கஷாயந் தன்னில்*
*அருடரு சூதபற்பம் அக்கினி குமாரமுண்ணக்*
*கருடனில் அரவொப்பாகும் விசுவபிவாதங்காணே. (23)*

*(இ-ள்.) 10 வருடங்கள் சென்ற வேப்பமரத்தின் பட்டை, கழற்சிக்கொடி இலை, முன்னை வேர், கருடங்கிழங்கு, கொற்றான் இவைகளைச் சமனெடுத்து இடித்து வைத்துக்கொள்ளவும். இதில் ஒரு பெரும் ஸ்பூனளவெடுத்து 1 சேர் தண்ணீர் விட்டு 1/8 ஆகச்செய்து அக்கஷாயத்துடன் ரசபற்பம், அக்கினிகுமார ரசம் இவைகள் ஏதேனும் ஒன்றை உண்ண, விச்வபீ வாதங்கள் கருடனைக்கண்ட பாம்பைப்போல் தீரும்.*

## கஞ்சவாதத்திற்கும் பங்குவாதத்திற்கும் சிகிச்சை

*வருடசதநிம்ப வயிரமே சிவனார் வேம்பு*
*தருதயி லத்தைத் தேய்த்துத் தானுள்ளே கொடுக்கத் தீரும்*
*பொருகஞ்ச வாதம் மெய்க்கப் புகல்கின்றோன் பங்குவாத*
*முருகஞ்சுங் குழலாயிந்த முறைமையிற் றீருமென்றே. (24)*

*(இ-ள்.) 100 வருடத்திய வேம்பின் வைரம், சிவனார்வேம்பு இவ்விரண்டையும் குழித்தைலமிறக்கி, உடலிலும் தேய்த்து உள்ளுக்கும் கொடுக்கவும். கஞ்சவாதம், பங்குவாதம் இவ்விரு நோய்களுந் தீரும்.*

## ஊருஸ்தம்ப வாதத்திற்குச் சிகிச்சை

*அடுத்திடுங் களாயகஞ்ச வாதத்துக் கமைத்ததாகு*
*மெடுத்திடு மூருத்தம்ப வாதத்திற் கென்பார் நூலோர்*
*கொடுத்திடு மருந்தி லுண்ணுங் கூறுதுங் குமரிபற்பம்*
*வடுத்திகழ் விழியாய்! சூத பற்பமும் வாங்கலாமே. (25)*

(இ-ள்.) கலாயகஞ்ச வாதத்திற்கேற்பட்ட சிகிச்சை முறைகளே ஊருஸ்தம்ப வாதத்திற்கும் ஏற்றவை குமாரி பற்பத்தையும், சூத பற்பத்தையும் உபயோகிக்கலாம்.

**அண்டிய வாதத்திற்குச் சிகிச்சை**

சொல்லிய களாயகஞ்சம் தோன்றிய லூருத்தம்பம்
புல்லிய வகையிரண்டிற் பொருந்திய மருந்துமாகும்
வல்விசேர் ... ... ... தேனிலருந்தத் தீரும்
அல்லியங் குழலாய் கேளா யண்டிய வாதம் போமே. (26)

(இ-ள்.) கலாயகஞ்சம், ஊருஸ்தம்பம் இவைகளுக்கு உண்டான மருந்துகள் இதற்கும் நல்லது.

***குறிப்பு:-*** அண்டியவாதம் என்பதை ஆட்யவாதம் என்று ஆயுர்வேதமுறைகள் கூறும்.

**கொட்டுச்சீட வாதத்திற்குச் சிகிச்சை**

பஞ்சபா ஷாணஞ்சூதம் பகருங்கெந் தகமிலிங்கம்
அஞ்சவே தேசிச்சாற்றில் அரைத்ததில் பூசக் கட்டத்
துஞ்சிய இரத்தம்வாங்கச் சூதபற்பத்தைக் கொள்ள
மிஞ்சிய கொட்டுச்சீட வாதந்தான் விட்டுப்போமே. (27)

(இ-ள்.) பஞ்சபாஷாணம் — பாதரஸம்
லிங்கம் — கெந்தகம்

இவைகளை எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நன்றாகவரைத்து வீக்கமிருக்குமிடத்தில் வைத்துக் கட்டவும். ரசபற்பத்தையும் உட்கொள்ள இரத்தக்கட்டுகள் வாங்கும்.

***குறிப்பு:-*** கொட்டுச் சீடவாதம் என்பதை குரோஷ்டக சீர்ஷம் என்று கூறுவர் ஆயுர்வேத வல்லுனர். இதனையே நரித்தலை வாயு என்று தமிழில் வழங்குவர். கால் முட்டுகளில் உண்டாகும் வீக்கம்.

**வாதகண்டக வாதத்திற்குச் சிகிச்சை**

*கூறிய முழங்கால் கட்டுங் கொட்டுச்சீடத்திற் சொன்ன*
*மீறிய மருந்தினாலு மிகுந்தந் திரத்தினாலு*
*மூறிய இரத்தம் போக்கு முபாயத்தி னாலுந்தானே*
*மாறிடுங் காண்மை கட்டும் வாதகண் டகமிதென்னே. (28)*

(இ-ள்.) முன்சொன்ன கட்டு மருந்தையும், சூதபற்பத்தையும் இதற்கும் உட்கொள்ளவும். தந்திரமாக இரத்தத்தை வெளியாக்கவும். (அட்டைப் பிரயோகம், கொம்புவை ஊதியெடுத்தல் ) முதலான பிரயோகங்களி னாலும் குணமாக்கவும்.

**கிரத்துசி வாத சிகிச்சை**

*ஈனமில் நீலகண்ட விரதச்செந் தூரந்தன்னை*
*ஆனதோர் குக்குடாண்ட தைலத்தி லருந்த்த தீரும்*
*தானமாம் விஷபாஷாணத் தைலத்தினாலுந் தீருங்*
*கானமார் குழலினாளே! கிரத்துசிக் கழுகுவாதம். (29)*

(இ-ள்.) நீலகண்ட இரசசெந்தூரத்தை கோழிமுட்டைத் தைலத்தில் குழைத்து உட்கொள்ளவும். விஷபாணத் தைலத்தையும் மேலுக்குப் பிரயோகம் செய்யவும். கிருத்துசி என்ற கழுகு வாதம் தீரும்.

***குறிப்பு:***- ஆயுர்வேதத்தில் இந்நோயைக் க்ருத்ரஸீ என்று கூறுவர்.

**பாதாரிச வாதத்திற்குச் சிகிச்சை**

*வாய்ந்த குண்டலியிரண்டு மதுத்துனி யொன்றுங் கூட்டிக்*
*காய்ந்தநீர் கொள்ளத் தீரும் கனிலிலிங்குள ரசத்தை*
*யேந்தகால் புகைக்கத்தீரு மெழில்நிம்பத் தைலம் பூசப்*
*பாய்ந்தபா தாரிசந்தான் பறந்திடு மறிந்து கொள்ளே. (30)*

(இ-ள்.) சங்கம்வேர் 2 பங்கு, மதுத்துனி 1 பங்கு இவ்விரண்டையும் இடித்துக் கஷாயம் வைத்துப் பருகவும். இலிங்கத்திலிருந்து எடுத்த ரசத்தை நெருப்பிலிட்டுப் புகையைக் காலில் பிடிக்கவும். பின்னர் வேப்பெண்ணெய் பூசவும்.

**குறிப்பு:-** மதத்துனி - பரங்கிச் சக்கை.

## ஆறுவகை வாதத்திற்கு மருந்து

திருமதுத் துனுகி சேர்த்த ரசாயனந் தேனில் நெய்யில்
பருகிடக் கிடக்கும் பசாகம் பிடித்திடப் பாததாகம்
வருகர பாததாக வாதந் தருமத்த யேக சித்திர
தருமங்க தாக வாதமும் போகுமென்னே. *(31)*

(இ-ள்.) மதுஸ்நுஹி ரசாயணத்தைச் சிறிது தேனோ, நெய்யோ அதிகம் சேர்த்து உட்கொள்ளவும். பாததாகம், கரதாகவாதம், கரபாத தாகவாதம், அர்த்தாங்கவாதம், ஏகாங்கவாதம், சித்ராங்க வாதம் முதலானவை நீங்கும்.

## சோணிதவாதத்திற்கு

சுரவசூரி வீழி தூரைவாரு நீரிலே
பாரிலோரில் பூவிலோரில் பாங்கு வீங்கு மாங்கவன்
ருரிசேரில் வாதரோணி தானதேரு மேகுமே
பாரிசூரி வீரிநாரி மாதுபாக ராணையே. *(32)*

(இ-ள்.) பெருமருந்து, சூரை, வீழி இவைகளைச் சேர்த்துக் கஷாயமாக்கிப் பருகவும். வாதசோணிதம் நீங்கும்.

## 3வித சோணிதவாதத்திற்கும் மருந்துவகைகள்

மருவிய லவணகுக்கில் வாதசோணிதத்தைப் போக்கும்
பெருகிய மிரதகுக்கில் பித்த சோணிதத்தைப் போக்குந்
தெரிதரு பட்டைகுக்கில் சேர்ப்ப சோணிதத்தைப் போக்கும்
விரிதரு மனுபானங்கள் விதவிதமாகச் செய்யே. *(33)*

(இ-ள்.) பஞ்சலவணத்தைக் குக்கிலுடன் சேர்த்து உட்கொள்ள வாதசோணிதம் தீரும். ரசத்தைக் குக்கிலுடன் சாப்பிடப் பித்த சோணிதம் குணமாகும். குங்கிப்பட்டை (பீனாரிப்பட்டையுடன்) குக்கிலை உட்கொள்ளக் கபசோணிதம் தீரும்.

**பிராண வாதத்திற்கு**

*மூக்கினில் நஸ்யஞ்செய்ய முக்கடுகரத்தைக் காய்ந்து*
*வாக்குநீர் கொள்ளத்தீரும் பிராணவாதந்தானென்னே. (34)*

(இ-ள்.) சுக்கு திப்பிலி

மிளகு சித்தரத்தை

இவைகளை இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து உட்கொள்ளவும். மூக்கில் நஸ்யமிடவும். பிராண வாதங்கள் தீரும்.

**உதானவாதத்திற்கும் வியானவாதத்திற்கும் மருந்து**

*செப்பிய பிராணவாத சிகிச்சை யினாலுந் தீரும்*
*ஒப்புறு கெந்தகத் தாமுறுதியா மருந்திற்றீரு*
*மிப்படி யுதானவாத மென்னவே யுரைத்தோமன்றி*
*வெப்புறு வியானவாத மேற்படி சிகிச்சையாமே. (35)*

(இ-ள்.) உதானவாயுப் பிரகோபத்திற்குப் பிராண வாயுவிற்குக் கூறப்பட்ட மருந்துகளைச் சேவித்தாலும், கெந்தகபற்பம் உட்கொண்டாலும் தீரும். வியானவாயுக் கோளாறுகளுக்கும் இதே சிகிச்சை முறையாகும்.

**சமான வாதத்திற்கு**

*சொல்லிய பஞ்சகோலந் துலங்கிய வில்வமூலம்*
*கல்லிய பாணபுங்கி கழல்பெருங் காயமிந்து*

புல்லிய கஷாயந் தன்னில் பொருந்திலக் கினிகுமாரஞ்
செல்லவே சமானவாதந் தீர்ந்திடுஞ் செப்பினோமே. *(36)*

(இ-ள்.) திப்பிலி — திப்பிலிமூலம்

சவ்வியம் — சித்திரமூலம்

சுக்கு — வில்வவேர்

சரபுங்கம்வேர் (கொன்னை) — கழற்சிக்கொடி

பெருங்காயம் — இந்துப்பு

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். ஒருபலம் சூரணத்துடன் 1 சேர் தண்ணீர் சேர்த்து 1/8 ஆக வற்றவைத்து, அக்கினிகுமார ரசத்துடன் உட்கொள்ளவும். சமானவாயுக் கோளாறுகள் தீரும்.

## அபான வாதத்திற்கு மருந்து

பரிசுத்தமான பல்லாதகி குழம் பருகையாலும்
புரையற்ற வனகெந்தாதிச் சூரணம் புசிக்கையாலும்
விரிவுற்ற சர்ப்பிந்த கிருதத்தை விழுங்கலாலு
மெரிவுற்ற அபானவாத மேகுமென் றுரைத்தான் முன்னோர்.

(இ-ள்.) பல்லாதிகிக்குழம்பு, வனகெந்தாந்திச் சூரணம், சர்பிந்த கிருதம் முதலான மருந்துகளைச் சேவித்தால் அபானவாயுப் பிரகோபங்கள் தீரும்.

***குறிப்பு:-*** இவைகளை வகைக்கு ஒரு ஸ்பூனளவெடுத்து உட்கொள்ளவும்.

## சாமவாதத்திற்கும் நிராமவாதத்திற்கும் மருந்து

பலன்கொடி சமூலத்தோடே பஞ்சகோலங் காய்ந்திடும் நீர்
துலங்கப் பருகி நீலகண்ட தூமமுடம்பு தனிற் பிடித்தாம்
நலங்கு முடம்பு திடமுண்டாம் சாமவாதம் நலிந்தோடுங்
கலங்கு நிராம வாதமுமென் றுரைத்தார் போகக்கடவுளறே.

| (இ-ள்.) | திப்பிலி | திப்பிலிசமூலம் |
|---|---|---|
| | செவ்வியம் | சித்திரமூலம் |
| | சுக்கு | சித்தாமுட்டிச்சமூலம் |

இவைகளைச் சமனெடையெடுத்து இடித்து வைத்துக் கொள்ளவும். இதில் ஒரு பலம் எடுத்து 1 சேர் சுத்தஜலம் விட்டு, அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி உட்கொள்ளவும்.

நீலகண்ட ரசத்தை நெருப்பிலிட்டு அதிலிருந்து எழும்பும் புகையை உடலில் பிடிக்கவும். உடம்பு திடமுண்டாகும். ஆமவாதம் தீரும். நிராமவாதங்களும் தீரும்.

## ஆவரண வாதம் 24ன் பெயர்கள்

| | |
|---|---|
| பித்தாவரண வாதம் | சிலேத்மாவரண வாதம் |
| இரத்தாவரண வாதம் | மாங்கிஷாவரண வாதம் |
| மேதாவரண வாதம் | அத்தியாவரண வாதம் |
| மஜ்ஜாவரண வாதம் | சுக்கிலாவரண வாதம் |
| அன்னாவரண வாதம் | மூத்திராவரண வாதம் |
| மலாவரண வாதம் | சர்வதாவரண வாதம் |
| பிராண பித்தாவரண வாதம் | உதான பித்தாவரண வாதம் |
| வியானபித்தாவரணவாதம் | சமானபித்தாவரண வாதம் |
| அபான பித்தாவரணவாதம் | பிராணசிலேத்மாவரணவாதம் |
| உதானாவரண வாதம் | வ்யானாவரண வாதம் |
| சமானாவரண வாதம் | அபானசிலேத்மாவரணவாதம் |
| பிராண உதானாவரணவாதம் | சங்கிரகாவரண வாதம் |

என்பன

## மருந்து முறைகள்

சீர்பெரும் அஷ்டவர்க்கந் தசமூலம் கரஞ்சமாயில்
ஏர்பெரு கோட்டமிந்து யெருக்கம்வேர் சித்தாமுட்டி
பார்புகழ் வீழிவேலிப் பருத்தியா மணக்கின் மூலம்
பேர்பெறு முதிரை மாடம் பெருங்காயங் குப்பைமேனி. (39)

சதகுப்பை குருஞ்சி மஞ்சள் தகரி நெய்த் தகரம் போளம்
இதமுறு சவுரிக் கொத்து யிலந்தைக் காரகில் நிர்குன்றி
பதமுறு தூதிவித்துப் பரியசாறடை வேர்த் தூப
மதமுறு குக்கில் கள்ளி மணமுன்னைச் சதுரக்கள்ளி. (40)

எண்ணெய்செம் புளிச்சங்கட்டை யிதம்பெறுமுவாய்
சமூலம்
நண்ணிய மருந்தாமன்பத் தொன்றுமே நவிலுங்காலை
மண்ணுளோர் தனக்கு வந்த வாதரோகங் கடன்னிற்
றிண்ணியா வரணவாத மிருபத்து[1] மூன்றுந்தீரும். (41)

(இ-ள்.) 1. அஷ்டவர்க்கம் என்று சொல்லும்படியான மேதா, மஹாமேதா, காகோலி, க்ஷீரகாகோலி, ருஷபகம், ஜீவகம், ருத்தி, வ்ருத்தி என்ற சரக்குகள்.

2. தசமூலம் என்ற வில்வம், குமிழ், பாதிரி, வாகை, சிறுமுன்னை, பெருமுன்னை, நெருஞ்சில், கத்திரி, முள்ளுக்கத்திரிவேர், சிறுகுமிழ் என்ற 10 வகைச் சரக்குகள்.

3. புங்கம்வேர்
4. ஆயில்பட்டை
5. கோஷ்டம்
6. இந்துப்பு
7. எருக்கம்வேர்
8. சித்தாமுட்டிவேர்
9. வீழிவேர்
10. வேலிப்பருத்திவேர்
11. ஆமணக்கம்வேர்
12. முதிரை, மாடம் (அவரை, உளுந்து முதலியன)
13. பெருங்காயம்
14. குப்பைமேனி
15. சதகுப்பை
16. குருஞ்சி
17. மஞ்சள்
18. வெள்ளாட்டு நெய்

1. "மிருபத்து நான்குந்தீரும்" என்றிருத்தல் வேண்டும்.

19. தகரை
20. போளம்
21. சவுரி
22. கொத்தான்
23. இலந்தை
24. அகில்கட்டை
25. கருநொச்சி
26. தூதிவித்து
27. சாறடைவேர்
28. குக்கில்
29. கள்ளி
30. முன்னை
31.சதுரக்கள்ளி
32. நல்லெண்ணெய்
33. செம்புளிச்சை
34. உகாய் சமூலம்
35. சாம்பிராணி.

ஆக இந்த 51 சரக்குகளையும் ஆவரண நோய்களுக்குத் தக்கபடி தேர்ந்தெடுத்துப் பிரயோகிக்கவும். 23 வகை ஆவரண வாதங்களும் குணமாகும்.

## அனலெரி வாதத்திற்கு

வாய்ந்திடும் பூதிகாதிக் கிருதத்தி னாலும்மாகு
மேய்ந்திடுங் கும்பசாக மேகாதசமூல மேது
தோய்ந்திடத் தீருமன்றி... லு மதுத்துனிகியூரல்
காய்ந்தநீர் கொள்ளிற் றீரும் கனலெரிவாதந்தானே. (42)

(இ-ள்.) பூதாகாதிக்கிருதம், கும்பசாகம், தசமூலம் மதுஸ்நுஹி ஊரல் கஷாயம் முதலானவைகளினால் தீரும்.

## துடிவாதத்திற்கு

அனலெரி வாதந்தன்னில் அமைத்திடு மருந்தினாலும்
கனவிட முட்டியாதிக் கஷாய மருந்தலாலும்
தனவயிர் வாசஞ்சிந்தா மணி தன்னினாலும்
புனகம்ப வாதமற்றத் துடிவாதம் போமென்றோதே. (43)

(இ-ள்.) அனலெரி வாதத்திற்குச் சொல்லிய மருந்துகளே இந்த வியாதிக்கும் அமையும். விஷமுஷ்டியாதி (எட்டிக்கொட்டை) கஷாயத்தை உட்கொள்ளுவதனாலும், வயிரவ சிந்தாமணியைச் சாப்பிடுவதனாலும், கம்பவாதம், துடிவாதம் முதலான நோய்கள் நீங்கும்.

### விரணவாதத்திற்கு

சீரகங் கரிய சீரந் திரிகடு கருடமூலம்
பேர்பெறு மிசங்கு சூரை பேணிய கஷாயந் தன்னி
லேர்பெறு மிரதபற்பந் தேனுட னிசைத்துண் பீரால்
வீரமாம் விரணவாதத் தீர்த்திடும் விளம்பினோமே. *(44)*

| (இ-ள்.) | சீரகம் | கருஞ்சீரகம் |
|---|---|---|
| | சுக்கு | திப்பிலி |
| | மிளகு | கருடங்கிழங்கு |
| | இசங்கு | சூரைவேர் |

இவைகளைச் சரியெடை எடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்றவைத்துக் கொள்ளவும். ரசபற்பத்தைத் தேன் விட்டுக் குழைத்துச் சாப்பிட்டுப் பின்னர் கஷாயத்தைப் பருகவும். விரண வாதங்கள் தீரும்.

### கடிவாதத்திற்கு

தீராதெனினுங் கடிவாதம் செப்புஞ் சிகிச்சை யனல்வாதம்
சார்வாமருந்தே யிதுதனக்குஞ் சாற்றுகின்றோ மிவையன்றி
வார்சேர் முலையாய்! பாதத்தில் வதியும்
நரம்பொன்றதுகண்டு
நீர்வாரிரத்தம் போக்கிடுகில் நீங்குஞ்சு டக்கு வாதமதே. *(45)*

*(இ-ள்.)* பொதுவாக இந்நோய் (இடுப்புப் பிடிப்பு) தீராது. அனல் வாதத்திற்கேற்பட்ட சிகிச்சையைச் செய்யவும். பாதத்தில் இருக்கும் நரம்பைக் கீறி இரத்தத்தை வெளியாக்கவும். சுடக்கு வாதமும் தீரும்.

### அண்டவாதம், குடல் வாதம், சுழல் வாதத்திற்கு மருந்து

கழல்மேனி வெள்ளையுள்ளி கடு திரி முருங்கைக்காயு
மழலினி லெட்டொன்றாக்கி யாமணக் கெண்ணெயோடும்
குழல் மொழி மானே! மாந்தர் கொண்டிடிலண்டவாத
மெழுகுடல் வாதமற்றக் கழல்வாத மேகுங்காணே. *(46)*

(இ-ள்.) கழற்சிக்காய்வித்து குப்பைமேனி
பூண்டு சுக்கு
திப்பிலி மிளகு
முருங்கைக்காய் வித்து

இவைகளைச் சரியெடை எடுத்து நசுக்கி, ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகும்வரை எரித்து வடிக்கட்டி ஆமணக்கெண்ணெய் விட்டு உட்கொள்ளவும். அண்டவாதம், குடல்வாதம், கழல்வாதம் முதலானவை தீரும்.

**வாதத்திற்கான மருந்து முறைகள்**

| | |
|---|---|
| சிந்தாமணி | வாயுகுடாரம் |
| இரசபற்பம் | விஷமுஷ்டித்தைலம் |
| காந்த பற்பம் | சிநேகப்பொட்டணம் |
| வாதராட்சசன் | குக்கில் சூரணம் |
| இராமபாணத்தைலம் | இங்குளம் |
| பஞ்சார்க்கத்தைலம் | நிம்பத்தைலம் |
| சிந்தூர பூஷணம் | கும்பசாகம் |
| நீலகண்டரசச் செந்தூரம் | பூதிகாதித்தைலம் |
| ரசதூமம் | கெந்தகச்சூரணம் |
| மதுஸ்னுஹிரசாயனம் | சருமபேனகிருதம் |
| லசுனகுக்கில் | ஏகாதசமூலவேது |
| அக்கினிகுமாரம் | வனகெந்தாதிச் சூரணம் |
| சொர்ணபற்பம் | பூதிகாதிகிருதம் |
| இரசச்செந்தூரம் | சொர்ணவைரவரசம் |

(இ-ள்.) இந்தப் பிரயோகமெல்லாம் இனி சாஸ்திரத்துடர்ச்சியிற் கண்டு அந்தந்த வாதகுண விபரீதங்களை அறிந்து இந்தப்படி வாதசிகிச்சை செய்யக்கடவன.

# பித்த சிகிச்சை

## பிரதான பித்தத்திற்கு மருந்து

*சீர்பெருமிஞ்சித் தோல்போக்கிச் சிறுகவே நறுக்கி நாழி*
*நீர்தனி லெட்டொன்றாக்கி நிட்க மொன்றிட்டுச் சீனி*
*யார்வமாய்க் கொள்ள வில்வ மூலலேகிய மருந்தச்*
*சார்பிரதான பித்தந் தணிந்திடுஞ் சுகமுண்டாமே.* *(1)*

(இ-ள்.) இஞ்சியின் தோலைச் சுரண்டிவிட்டுச் சிறு சிறு துண்டுகளாக நறுக்கி 1 படி சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்ற வைக்கவும். இதனுடன் 1¼ வராகனெடை சர்க்கரை சேர்த்துப் பருகவும். வில்வாதி லேகியமும் சாப்பிடவும். பிரதான பித்தங்கள் தணியும்.

## பக்குவாசய பித்தத்திற்கு

*இஞ்சியின் சாறு தன்னில் திரிகடு கிசைக்கத் தீரும்*
*இஞ்சியின் சாறுமிந்து மியல்புடன் கொள்ளத் தீரும்*
*இஞ்சிலேகியத்தைத் தானே யிதம் பெறக்கொள்ளத் தீரும்*
*இஞ்சியின் கஷாயத்தாலும் பக்குவாசயம்போமென்னே. (2)*

(இ-ள்.) இஞ்சிச் சாற்றுடன் சுக்கு, திப்பிலி, மிளகு இவற்றின் சூரணத்தையிட்டு உட்கொள்ளவும். அல்லது ஷை சாற்றுடன் இந்துப்பு சேர்த்துப்பருகவும், மூன்றாவதாக இஞ்சி லேகியத்தையுட்கொண்டாலும் குணமுண்டாகும். இஞ்சிக் கஷாயத்தை உட்கொண்டாலும் பக்குவாசய பித்தங்கள் தீரும்.

## ஆமாசய பித்தத்திற்கு

*சேர் திராட்சாதியான சூரணந் தேனிலுண்ணப்*
*பார்புகழ் கூவிளாதிக் கஷாயத்தைப் பருகமேலுஞ்*
*சார்பெரும் அச்வகந்த பலாலாட்சந் தைலந்தேய்க்க*
*வார்முலைமானே! ஆமா சயபித்தமாறுங்காணே.* *(3)*

*(இ-ள்.)* திராட்சாதி சூரணத்தைத் தேனில் குழைத்து உட்கொண்டாலும் வில்வாதி கஷாயத்தைப் பருகினாலும், அச்வகந்தி பலாலக்ஷா தைலத்தை உடலில் தேய்த்து முழுகினாலும் ஆமாசய பித்தங்கள் மாறும்.

**மலாசய பித்தத்திற்கு**

*கூறிய பாணபுங்க வில்வலே கியத்தைக் கொள்ள*
*மீறிய காளசாகவில் வாதிக் கஷாயங்கொள்ள*
*மாறிடுஞ் சொன்னோஞ் சொன்னோ மலாசயப் பித்தந்தேகம்*
*தேறிடும் பலமுண்டாகும் தேன் மொழித்திருவே நல்லாய்.*

*(இ-ள்.)* சரபுங்க வில்வாதி லேகியத்தை உட்கொண்டு இதனுடன் கருவேப்பிலை வில்வவேர் இவ்விரண்டையும் சேர்த்து இடித்துக் கஷாயமிட்டுப் பருகவும். மலாசய பித்தங்கள் தீரும்.

**சலாசயப் பித்தத்திற்கு மருந்து**

*மேவிய வில்வப்பிஞ்சு விளாம்பிஞ்சு கிளுவைப்பிஞ்சு*
*ஆவாரைப் பிஞ்சுப் பூவே ரதின்கொழுந் திலாமிச்சம் வேர்*
*தாவிய மதுரஞ் சீரஞ் சண்பகப் பூவோ டேலம்*
*பூவையே குடிநீர் கொள்ளச் சலாசயப் பித்தம் போமே. (5)*

| *(இ-ள்.)* | வில்வப்பிஞ்சு | விளாம்பிஞ்சு |
|---|---|---|
| | கிளுவைப்பிஞ்சு | ஆவரைப்பிஞ்சு |
| | ஆவரங்கொழுந்து | இலாமிச்சம்வேர் |
| | அதிமதுரம் | சீரகம் |
| | சண்பகப்பூ | ஏலக்காய் |

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டி உட்கொள்ளவும். சலாசயப் பித்த நோய்கள் தீரும்.

## இரத்தப் பித்தத்திற்கு

கேடல தவிரும் கூஷ்பாண்ட கிருதத்தைக் கொள்ளத்தீருந்
தோடுறு மரசாலித்தி யத்தியின் றொக்கிச் சீந்தில்
கூடிய கஷாயந் தன்னி லேலாதிக் கொள்ளத் தீரும்
ஈடுறு மிரத்தபித்த மென்னவே யியம்பினோமே. *(6)*

*(இ-ள்.) 1. கூஷ்மாண்ட கிருதத்தை உட்கொள்ளவும்.*
*2.அரசம்பட்டை ஆலம்பட்டை*
*அத்திப்பட்டை இத்திப்பட்டை*

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து எட்டிலொன்றாகக் காய்ச்சி வடிகட்டி உட்கொள்ளவும். ஏலாதிச் சூரணத்துடனும் குடிக்கலாம். இரத்தப் பித்தங்கள் தீரும்.

## மாங்கிஷ பித்தத்திற்கு

கூஷ்பாண்ட கிருதந்தன்னை மண்டலங்கொள்ளத்தீரும்
வாட்பூண்ட கண்ணின் மாதே! வாழையின் கிழங்கதாக்கு
நாட்பூண்ட கஷாயந்தன்னில் நல்லசர்க்கரையிட் டுண்ணச்
சேட்பூண்ட மாங்கிஷத்திற் சேர்ப்பித்தந் தீரு மென்னே. *(7)*

*(இ-ள்.)* 1. கூஷ்மாண்ட கிருதத்தை 45 நாட்களுக்கு உட்கொள்ளவும். 2. வாழைக்கிழங்கை நசுக்கிக் கஷாயம் செய்து நல்ல சர்க்கரை கூட்டி உட்கொள்ளவும். மாங்கிஷ பித்தங்கள் நீங்கும்.

## மேதோ பித்தம், அத்தி பித்தம் இரண்டிற்கும் மருந்து

பாங்குடன் சேர் தாளீசப் பத்திரி வடகமுண்ணத்
தீங்கறும் அசுவகந்தி பலாலாட்சாத்தைலந் தேய்க்க
வோங்கிய மேதோபித்த முறுதிசே ரத்திப்பித்தம்
வாங்கிடுஞ் சுகமுண்டாகும் யென முனி வகுத்தவாறே. *(8)*

*(இ-ள்.) 1.* தாளீசப்பத்திரி வடகத்தை உட்கொள்ளவும். 2. உடலிற்கு அச்வகந்தி பலாலாக்ஷா தைலம் தேய்த்துக்குளிக்கவும். மேதோ பித்தம், அத்தி பித்தம் இவ்விரண்டும் தீரும்.

**மஜ்ஜை பித்தத்திற்கும், சுக்கிலப் பித்தத்திற்கும் மருந்து**

*சொல்லுவோம் மஞ்சிட்டாதிக் கிருதத்திற் சொர்ணபற்பம்*
*புல்லவே சேர்த்தருந்த போய்விடும் மஜ்ஜைப்பித்த*
*மொல்லையில் வங்கஞ்சேர்த்து மஞ்சிட்டிக் கிருதமுண்ண*
*அல்லல் செய் சுக்கிலத்திற் பித்தம தகன்று போமே. (9)*

*(இ-ள்.)* மஜ்ஜை பித்தந்தீர மஞ்சிஷ்டாதிக் கிருதத்துடன் சொர்ண பற்பத்தைக் குழைத்துச் சாப்பிடவும். சுக்கில பித்தம் தீருவதற்கு மஞ்சிஷ்டாதி கிருதத்துடன் வங்கபற்பம் உட்கொள்ளவும்.

**சுரோணித பித்தத்திற்கு**

*புத்திர மஞ்சிட்டாதி கிருதத்தைப் பூவின் மானே!*
*பத்திருபது நாட்கொள்ளத் தீர்ந்திடும் வடத்தின் பாலுஞ்*
*சித்தமாங் கதலி வாழை பழமுஞ் சேர்த்துண்ணத் தீருஞ்*
*சுத்தமாங் சரீரந் தன்னிற் சுரோணிதப் பித்தம் போமே. (10)*

*(இ-ள்.) 1.* மஞ்சிஷ்டாதிக் கிருதத்தை *30* நாட்களுக்கு உட்கொள்ளவும். 2. வாழைக்கிழங்கை நசுக்கிச் கஷாயம் செய்து நல்ல சர்க்கரை கூட்டி உட்கொள்ளவும். மாங்கிஷ பித்தங்கள் நீங்கும்.

***குறிப்பு:-*** இது பெரும்பாலும் ஸ்திரீகளுக்கு ஏற்படும் நோயாகும்.

**சந்நிகத பித்தத்திற்கு மருந்து**

செப்பிள முலையாய்க் கேளாய்! திருந்து மார்த்திரகம் வில்வம்
கப்புறு சிறுகாஞ்சோறி கடுநெல்லி தான்றி கூட்டி

வெப்புறக் காய்ந்த நீரில் மிக்கசந் திரோதயத்தே
னொப்புறக் கொள்ளச்சந்தி கதபித்த மோடுமென்னே. *(11)*

| (இ-ள்.) | இஞ்சி | வில்வவேர் |
|---|---|---|
| | சிறுகாஞ்சோறிவேர் | கடுக்காய்த்தோல் |
| | நெல்லிவற்றல் | தான்றித்தோல் |

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி, எட்டிலொன்றாக வற்றவைத்துச் சந்திரோதயச் செந்தூரத்துடன் உட்கொள்ளவும். சந்நிகத பித்த நோய்கள் தீரும்.

## உதர பித்தத்திற்கு மருந்து

நெல்லியி னிலை கற்றாழை நிறைதிரி பலையே சுக்கும்
சொல்லிய நன்மருந்தே காய்ந்த நீர்கொள்ளத் தீரும்
புல்லிய புடோலேகாய்ந்து பொருந்தும்நீ ரருத்தத்தீரும்
நல்லிய லுதரபித்த மெனமுனி நவின்றவாறே. *(12)*

| (இ-ள்.) | நெல்லியிலை | கற்றாழை மடல் |
|---|---|---|
| | கடுக்காய்த்தோல் | நெல்லிவற்றல் |
| | தான்றித்தோல் | சுக்கு |

இவைகளை இடித்து ஒரு பானையிலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு எட்டிலொன்றாகும்வரை எரித்துப் பருகவும். அல்லது பேய்ப்புடல் கஷாயத்தையும் முன்கூறியபடி உட்கொள்ளவும்.

## வில்வாதி லேகியம்

காதிய வாதபித்தங் கபசி லேத் பனத்திற் பித்தம்
வாதலேத் பனத்திற் பித்தம் வகுத்திடும் பிராணபித்தம்
தாது சேருதானன் மற்ற வியானனற் சமானபான
னோதிய யெட்டும் வில்வ லேகியத் தொழியுமென்றே. *(13)*

*(இ-ள்.)* வில்வாதி லேகியத்தை உட்கொள்வதனால் வாதபித்தம், கப சிலேத்மபித்தம், வாதச்லேத்மனம், பிராண பித்தம், உதான, வ்யான, சமான இவைகளின் ஆவரண பித்தம் முதலான ரோகங்கள் தீரும்.

## அன்னபித்தம், ஆமபித்தம், குண்டலி பித்தம் மூன்றுக்கும் மருந்து

ஆமலகாதி யென்னும் லேகியமருந்தத்தீரும்
தாமலை வான வன்ன பித்தஞ் சாராம பித்தம்
பூமயினையாய்! குண்டலாதி லேகியம் புசிக்கச்
சேரு குண்டலியிற் பித்தந் தீர்ந்திடுந் தெரிந்து செய்யே. *(14)*

*(இ-ள்.)* ஆமபித்தம், அன்னபித்தம் இவைகள் தீர ஆமலகாதி லேகியத்தை உட்கொள்ளவும். குண்டலி பித்தத்திற்குக் குண்டலாதி லேகியத்தைச் சாப்பிடவும்.

## கபால பித்தம் அமிர்தபித்தம் நேத்திரபித்தம் இம்மூன்றுக்கும் மருந்து

தேசியின் பழங்குடைந்து சிறுகவே துரிசைவிட்டுக்
கூசிடாதுண்டு பித்தங் கொட்டில் மேற்குடிநீரிஞ்சி
மாசிலா முசுமுசுக்கை வளர் பொன்னாங்காணி சீரங்
காசணி முலையாய்! சீனி கலந்தது கொள்ள வேண்டும். *(15)*

*(இ-ள்.)* ஒரு சுத்தமான பெரும் எலுமிச்சம்பழத்தை எடுத்துக் குடைந்து அதனுள் துரிசையிட்டுச் சிறிது நேரஞ்சென்று பழத்தைப் பிழிந்து உட்கொள்ளவும். பித்தத்தை வெளியாக்கும்.

| | |
|---|---|
| 2. இஞ்சி | முசுமுசுக்கை |
| பொன்னாங்காணி | சீரகம் |

இவைகளை இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு எட்டிலொன்றாக வற்றவைத்துச் சீனி சேர்த்துப் பருகவும்.

## நேத்திர பித்தத்திற்கு மருந்து

சம்பீரத் தைலந்தன்னைத் தரித்தது முழுகவேண்டுங்
கொம்பாழும் நாழி கேரக் குழம்புகண் ணெழுதவேண்டும்
வம்பாருங் கபாலபித்தம் வளர்ந்திடு மமிரதபித்தஞ்
சொம்பார் நேத்திரத்திற் பித்தந் துலைந்திடு மறிகுவீரே. (16)

(இ-ள்.) சம்பீரத்தைலத்தைத் தலையில் தேய்த்துக் கொண்டு முழுகவும். நாரிகேளாஞ்சனத்தை (அதாவது நாழிகேரக்குழம்பை) ½ பயறளவு கண்களிலடவும். கபால பித்தம், அம்ருத பித்தம், நேத்திர பித்தம் இவை நீங்கும்.

## அரித்திரா பித்தத்திற்கு

ஆவினெய் படியரை யதிலறல்நீர் வாழிச் சாறுமுரி
கோவைத்தண்டு கொடுப்பையுடன் கூறுந்தாழை தென்னம்
பூவிற்சாறு வகைக்குழக்குப் புகட்டிச்சீரம் பொரிக்காரம்
தாவுசுக்கோ டிலவங்கஞ் சருமஞ் சண்பகம் லாமிச்சம். (17)

முத்தங் கொத்த மதிமதுரமுதிய கோட்டம் வகைக் கழஞ்சா
இத்திற்காரந்தனை நீக்கி யிசைய வரைத்துக் கொதித்திறக்கி
சுத்தக்காரம் பொடித்திட்டாற் சொல்வேர் சர்க்கரை முக்கழஞ்சாய்
மத்திலிட்டுக் குடித்திட்டா லிரித்திர பித்தமகன்றிடுமே. (18)

(இ-ள்.) பசுவின்நெய் ½ படி (2½ சேர்)

தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு½படி(சின்னப்படி)

| | |
|---|---|
| கோவைத்தண்டுச்சாறு | 1 உழக்கு |
| கையாந்தகரைச்சாறு | 1 உழக்கு |
| தாழைமட்டைச்சாறு | 1 உழக்கு |
| தென்னம்பூச்சாறு | 1 உழக்கு |

இவைகளை ஒன்று கலந்து வைத்துக்கொள்ளவும். இதனுடன்,

| | |
|---|---|
| சீரகம் | கிராம்பு |
| சுக்கு | இலாமிச்சம்வேர் |
| சண்பகப்பூ | கொத்தமல்லி விதை |
| கோரைக்கிழங்கு | கோஷ்டம் |
| அதிமதுரம் | |

இவைகளை 1¼ வராகனெடை வீதமெடுத்து, ஏதேனும் ஒரு சாறுவிட்டு நன்றாக அரைத்துச் சாறுகூட்டிய நெய்யுடனே குழப்பி அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி வடிகட்டிக்கொள்ளவும். இதனுடன் பொரிக்காரம் 1¼ வராகனெடை சேர்த்துச் சீனி 3¾ வராகனெடையும் சேர்த்துக்கலக்கி உட்கொண்டால் அரித்திரா பித்தம் (காமாலை) தீரும்.

## திக்த பித்தத்திற்கு

திருந்திய முசுமுசுக்கை சிறுபயறுடனே சீரம்
பொருந்திய வில்வமூலம் பேய்ப்புடல் பொரிமா நெல்லி
கருந்தோலி போக்குஞ் சுக்குங் காய்ந்திடுங் குடிநீர் தன்னை
அருந்திடில் திக்தபித்தம் அகன்றிடு மறிகுவீரே. (19)

| | |
|---|---|
| (இ-ள்.) முசுமுசுக்கை | சிறுபயறு |
| சீரகம் | வில்வமூலம் |
| பேய்ப்புடல் | மாம்பருப்பு |
| நெல்லிவற்றல் | தோல் போக்கிய சுக்கு |

இவைகளை வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக்காயவைத்துக் கல்லுரலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்து வைத்துக் கொள்ளவும். இதில் 1 பலம் தூள் எடுத்து 1 சேர் சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிகட்டி உட்கொள்ளவும். வாயில் கசப்புச்சுவையைத் தரும் பித்தங்கள் தீரும்.

### இக்குரச, ஆமில, லவண பித்தங்களுக்கு மருந்து

*காயில்லா பழுத்த தேற்றாங் கனிவெந்நீர் சுரைத்தருந்தி*
*வாயினாற் கக்கிப் பின்னை வாய்ந்த சீரகக் கஷாயம்*
*நேயமாய்க் கொள்ளத்தீரும் நிரம்பிக்கு ரசபித்தத்தோ*
*டாய தோர் லவணபித்த மாமில பித்தந்தானே.* (20)

(இ-ள்.) காய் முழுவதும் நன்றாகப் பழுத்த தேற்றாம் பழத்தைக்கொண்டு வந்து வெந்நீருடன் கரைத்துப் பருகவும். வாந்தியாகும். பின்னர் சீரகக்கஷாயம் உட்கொள்ளவும். கருப்பஞ்சாற்றைப்போல் தித்திப்புச் சுவையளிக்கும் பித்தம், உப்புச்சுவையைக் கொடுக்கும் பித்தம், புளிப்புச்சுவையைத் தரும் பித்தம் முதலானவை நீங்கும்.

***குறிப்பு:-*** இக்கு = இக்ஷு = கரும்பு

ஆமில = அம்லம் = புளிப்பு

### இருதய பித்தத்திற்கும், மூல பித்தத்திற்கும்

*வயம் பெரு வாந்தி செய்து வளர்வில்வக் கஷாயங் கொள்ள*
*இயம்பிய விருதயத்தி லெழும்பிய பித்தந்தீரும்*
*பயந்தனி விந்துப்போடா மணக்கெண்ணெப் பருகத்தீரும்*
*வியந்திடு மூலபித்த மென முனி விளம்பினாரே.* (21)

(இ-ள்.) முன்கூறிய முறையில் கூறப்பட்ட வாந்தியைச் செய்வித்து, வில்வக்கஷாயத்தையுட்கொள்ளவும். இருதய பித்தங்கள் தீரும். பசுவின் பாலுடன் சிறிது இந்துப்பு கூட்டி ஆமணக்கெண்ணைவிட்டுப் பருகவும். மூல பித்தங்கள் தீரும்.

### சருவாங்கப் பித்தம், உன்மத்தப் பித்தம், மோக பித்தம் இவைகளுக்கு

*தேசியின் பழநீர்க்காடி செப்பிய கொற்றான் சாறு*
*வீசிய துவாலை செய்து வில்வலே கியமுட்கொண்டு*

மாசறு குமாரியாதி தைலத்தை மூழ்க மாறும்
பேசிய சருவாங்கத்தோ டுன்மத்த மோகம் பெண்ணே! *(22)*

(இ-ள்.) மாதுலங்காதி நெய்யை உட்கொள்ளவும்.

| 2. | காட்டாத்திப்பூ | கிராம்பு |
|---|---|---|
| | தாளீசபத்திரி | சீரகம் |
| | சுக்கு | ஓமம் |
| | மாதளைப்பிஞ்சு | கோரைக்கிழங்கு |

இவைகளை இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகும்வரை வற்றவைத்துப் பருகவும். அதிசார பித்தங்கள் தீரும்.

### கரபாததாக பித்தத்திற்கு

ஆவிநெய் யதனைத்தானே யங்கைகா லதனிற் தேய்த்து
பாவகமாகவே கூட் பாண்ட நெய் பருகத்தீரும்
பூவியற் சந்தனாதித் தைலம் பூசிடவுந் தீரும்
காவியக்கண்ணே! பித்தங் கரபாத தாகம் போமே. *(24)*

(இ-ள்.) பசுவின் நெய்யைக் கை கால்களில் நன்றாய்த் தேய்க்கவும். உள்ளுக்குக் கூஷ்மாண்ட நெய்யைத் தினம் 2 வேளைகள் உட்கொள்ளவும். மேலுக்குச் சந்தனாதித் தைலத்தைத் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்யவும். பித்த நோய்கள் தீரும்.

### குண்டல பித்தத்திற்கு

ஆமணக்கெண்ணெ யிந்துப் பார்த்திரகத்தின் சாறுந்
தாமிகக் கொள்ளத்தீரும் தார்குழல் மயிலே கேளாய்!
தோமறு மவிபத்தியாதிச் சூரணம் பருகத் தீரும்
கோமளமாக நின்ற குண்டல பித்தம் போமே. *(25)*

(இ-ள்.) ஆமணக்கெண்ணெய், இந்துப்பு, இஞ்சிச்சாறு இம்மூன்றையும் குலுக்கி உட்கொள்ளவும். அவிபத்திச் சூரணத்தை உட்கொள்ளவும். பித்த நோய்கள் தீரும்.

**பித்தரோகத்திற்கான மருந்துகள்**

வில்வமூலாதி லேகியம்
ஆர்த்ரகாதி லேகியம்
ஆர்த்ரகாதிக் கஷாயம்
திராக்ஷாதிச் சூரணம்
கூவிளாதிக் கஷாயம்
அஸ்வகந்தி பலாலாக்ஷாதைலம்
பாணபுங்க வில்வாதி லேகியம்
காளசாக வில்வாதிக் கஷாயம்
கூஷ்மாண்டக்கிருதம்
ஏலாதி மாத்திரை
தாளீசபத்திரி வடகம்
மஞ்சிஷ்டாதிக்கிருதம்
சொர்ண பற்பம்
வங்க பற்பம்
சந்திரோதயம்
ஆமலகாதி லேகியம்
குண்டலாதி குழம்பு
குமார்யாதித் தைலம்
மாதுலுங்காதிக் கிருதம்
சந்தனாதித் தைலம்
அவிபத்தியாதிச் சூரணம்

இவைகளை ஷை பத்தியிலே கண்டுகொள்ளவும்.

**சிலேற்பன சிகிச்சை**

திருந்திய சிலேற்ப ரோக மிருபதுந் தீரவேண்டில்
மருந்தது சதசுலோகி நிகண்டினில் வகுத்தார் முன்னோ
ரிருந்திடுஞ் சிலேற்பனத்தி னினமறிந்தருந்துவீரேற்
பொருந்திய சிலேற்பரோகம் புகழுறத் தீருங்காணே.

(இ-ள்.) சிலேற்பன ரோகமிருபதின் பேதமுமறிந்து சதச்லோகியிலே கண்ட ஔஷதத்தை வியாதியினமறிந்து மருந்தைத் தங்களின் பலசுருதிகண்டு சிலேற்பநத்திற்குச் சாந்தமான ஔஷதங்கள் குணங்கண்டு கொடுக்கவும்.

## சுரசிகிச்சை

வாதத்தினால் ஜ்வரம் இருபது, பித்தத்தினால் ஜ்வரம் இருபத்துநான்கு, சிலேற்பனத்தினால் ஜ்வரம் இருபது. ஆக ஜ்வரங்கள் அறுபத்துநான்கு.

இவைகளுள் அசாத்ய வகைகள்: வாதசுரத்தில் எட்டு, பித்தத்தில் பத்து, ச்லேத்மத்தில் பத்து, ஆக ஜ்வரத்தில் இருபத்தெட்டு அசாத்யம். சாத்ய ஜ்வரம் முப்பத்தாறுந் தீரும்.

ஜ்வர நிதானமறிந்து லங்கணத்தினாலும், கற்கத்தினாலும், கஷாயத்தாலும், ஔஷதத்தினாலும், செபத்தாலும், தவத்தினாலும், தானத்தினாலும், அர்ச்சனையினாலும் தீர்க்கக் கடவன.

இதற்குச் செய்யுள்:

சுரமதே யாதியாகிற் சுகமிலங் கனமதாகும்
சுரமதே மத்தியாகிற் சுகந்தா னியக்கஷாயம்
சுரமதே யந்தமாகிற் சுகம...அவுஷதமாகுஞ்
சுரமதே விடுங்காலத்திற் சுகவிரே சனமதாமே. *(1)*

**வாதஜ்வரத்திற்குக் கஷாயம்**

திரிகடுக்காய் நொச்சி திகழ்கடு ரோணி தும்பை
மருவிய புனலிக்காய்வேர் வெள்ளுள்ளி வகையீதெல்லாந்
தருமிவை பலங் கால்கொண்டு தானரைத் தருந்தச் செய்யிற்
பொரு மயில் விழியாய்! வாதச் சுரங்குளிர் போகுமென்னே.

| (இ-ள்.) கடுக்காய்த்தோல் | நெல்லிவற்றல் |
|---|---|
| தான்றித்தோல் | நொச்சியிலை |
| கடுகரோகிணி | தும்பைவேர் |
| புனலிக்காய் வேர் | பூண்டு |

இவைகளை வகைக்கு ¼பலம் வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி இறக்கவும். இதனை உட்கொள்ளவும். வாதஜ்வரங்கள், குளிர்ஜ்வரங்கள் முதலானவை தீரும்.

**வாதஜ்வரத்திற்கு தேவதார்வாதிக் கஷாயம்**

திருந்திய தேவதாரந் திரிகடு காடாதோடை
பொருந்திய செவ்வியமூங்கி லிலைநான்குள்
புகழ்மஞ்சிட்டி

*தடுங்கடுகரோணி வேம்புச் சார்ந்திடுங் கஷாயந் தன்னை*
*அருந்திடில் வாதரோகச்சுரங்குளி ரகன்றுபோலே.* *(3)*

(இ-ள்.) தேவதாரம் சுக்கு
திப்பிலி மிளகு
ஆடாதோடைவேர் செவ்வியம்
மூங்கில் இலை மஞ்சிட்டி
கடுகரோகிணி வேப்பம்பட்டை

இவைகளை வகைக்கு ¼ பலம் வீதமெடுத்து இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு தண்ணீர் விட்டு, அடுப்பின் மேலேற்றி 1/8 எரித்து வடிகட்டவும். இதனையுட்கொள்ள வாதரோகம், வாதஜ்வரம், குளிர்ஜ்வரம் முதலானவை நீங்கும்.

## வாதஜ்வரத்திற்குச் சீந்தில் கஷாயம்

*சீந்தில் நன்னாரி முத்தஞ் செப்பிய சிறுகாஞ்சோறி*
*வாய்த்திடு செவ்வியஞ் சுக்கு திப்பிலி மரிசங்கோட்டம்*
*மேய்ந்த திப்பிலியின்மூல மிவைசமனாகக் கொண்டு*
*காய்ந்திடில் வாதச்சுரங் காயாது வோடுமென்றே.* *(4)*

(இ-ள்.) சீந்தில்கொடி நன்னாரிவேர்
கோரைக்கிழங்கு சிறுகாஞ்சோறிவேர்
செவ்வியம் சுக்கு
திப்பிலி மிளகு
கோஷ்டம் திப்பிலிமூலம்

இவைகளைச் சமனெடை எடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டி லொன்றாக்கி இறக்கி வடிகட்டிக்கொண்டு உட்கொள்ளவும். வாதஜ்வரங்கள் தீரும்.

## பித்த ஜ்வரத்திற்குக் கற்கம்

*கடுவிழி மானே! கற்கங் கடு கடுரோணி சுக்கு*
*வடுமிள குடனே கொத்த மல்லிதிப் பிலிமுருங்கைப்*
*படுமலர் வகையோரேழும் பரிந்துகாற் பலமரைத்து*
*விடுமெனிற் பித்தரோகச் சுரமது விடுமென்றோதே.* *(5)*

(இ-ள்.) கடுகரோகிணி — சுக்கு
மிளகு — கொத்தமல்லி
திப்பிலி — முருங்கைப்பூ
கடுக்காய்த்தோல்

இவைகளை வகைக்கு ¼ பலம் வீதமெடுத்து இடித்துத் தண்ணீர்விட்டு நன்றாகவரைத்துத் தண்ணீருடன் குழப்பி உட்கொள்ளவும். பித்தஜ்வரங்கள் அனைத்தும் தீரும்.

### திராக்ஷாதிக் கஷாயம்

கொய் முந்திரிகைப் பழங்கடுக்காய் கொன்றைக்கனியே
கடுரோணி
செய் சந்தனமி லாமிச்சுச் சீரகமுத்தம் பற்படக
முய்யுந் திரிகடு கிவைகாய்ந்த வுதகஞ்சீனி யிட்டுண்ண
மையுண் கண்ணின் மடமானே! மாறும்பித்த சுரமென்னே.

(இ-ள்.) திராக்ஷைப்பழம் — கடுக்காய்த்தோல்
சரக்கொன்றைப்புளி — கடுகுரோகிணி
சந்தனத்தூள் — இலாமிச்சைவேர்
சீரகம் — கோரைக்கிழங்கு
பற்பாடகம் — சுக்கு
திப்பிலி — மிளகு

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து பத்திரப்படுத்தவும். வேண்டும்போது இதில் 1 பலம் அளவு தூளெடுத்து 1 சேர் தண்ணீர் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைக்கவும். இக்கஷாயத்தைச் சீனி சேர்த்துப் பருகிவரப் பித்த ஜ்வரங்கள் அனைத்துந்தீரும்.

### பித்த ஜ்வரசிகிச்சை மதுகாதி கஷாயம்

இனியமதுரஞ் சீந்திற்றண் டிருவேலியின் வேரிலாமிச்சுக்
கனிமுந்திரிகைச்சித்த முட்டிக் கல்லும் வில்வவேர் சுக்கு
வனையுஞ் சந்தம் நன்னாரி வாய்ந்த கஷாயங்
காய்ந்துண்ணிற்
புனித மதிய நுதல் மானே! பித்த சுரத்தைப் போக்கிடுமே. (7)

(இ-ள்.) அதிமதுரம் — சீந்தில்தண்டு
வெட்டிவேர் — இலாமிச்சைவேர்
திராக்ஷைப்பழம் — சித்தாமுட்டிவேர்
வில்வவேர் — சுக்கு
சந்தனத்தூள் — நன்னாரிவேர்

இவை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து வைத்துக்கொண்டு, வேளைக்கு 1 பலம் தூளையெடுத்து 1 சேர் சுத்தஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிகட்டிப் பருகவும். பித்த ஜ்வரங்கள் தீரும்.

## சிலேஷ்ம ஜ்வர சிகிச்சை கபஜ்வரத்திற்கு திரிகடுக்கற்கம்

உரைதிரிகடுகு வெள்ளை யுள்ளிநிற்குன்றி கையான்
புரையறு கடுக்காய் தான்றி புனலிவேர்க் கடுகுரோணி
சரி யிவை யரைத்துக் கற்கம் தானது நுகருவீரேல்
விரைதரு சிலேற்ப ரோகச் சுரமது தவிருமென்றே. (8)

(இ-ள்.) சுக்கு — திப்பிலி
மிளகு — வெள்ளைப்பூண்டு
கருநொச்சி — கையாந்தகரை
கடுக்காய்த்தோல் — தான்றிக்காய்த்தோல்
புனலிவேர் — கடுகரோகிணி

இவைகளை வகைக்கு அரை வராகனெடை வீதமெடுத்துத் தண்ணீர்விட்டு நன்றாக அரைத்துத் தண்ணீரில் கலந்து அருந்தவும். கபச்சுரங்கள் தீரும்.

## ஜ்வரத்திற்கு முத்தாதிக்கற்கம்

முத்தங் கடுக்காய்த் திப்பிலியின் மூலங்கடுகு ரோணிசுக்குத்
தெத்தும் படோலம் பற்படகஞ் சீந்தியாடா தோடையிலை
யொத்தகஷாய மெட்டொன்றா யூறிக்காய்ந்து கொள்வீரேற்
கத்துச் லேத்ம சுரந் தீருங் காசச் சுவாச மகன்றிடுமே. (9)

(இ-ள்.) கோரைக்கிழங்கு — கடுக்காய்த்தோல்
கண்டத்திப்பிலி — கடுகரோகிணி

| | |
|---|---|
| சுக்கு | பேய்ப்புடல் |
| பற்பாடகம் | சீந்தில்கொடி |
| ஆடாதோடையிலை | |

இவைகளைச் சமனெடுத்து இடித்து (1 வராகனெடை வீதம்) ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு ஜலம் விட்டு எட்டிலொன்றாக வற்றவைத்து வடிகட்டிக்கொள்ளவும். கபச்சுரங்கள் நீங்கும். மேலும் காசம், ச்வாசம் இவைகளுந் தீரும்.

**வாதபித்தசுரத்திற்குக் கற்கம் கலந்துகொடுக்கக் கஷாயம்**

பேய்ப்புடல் முத்தக்காசு பெருங்குமிழ் வேர் வெப்புத்தோல்
வாய்ப்புறு மாடாதோடை வருதிரிகடுபடாகங்
காய்ப்புறு திராக்ஷஞ்சந்தந் (காய்ச்சி நீர) ரந்துவீரேற்
பாய்ப்படு நோவாம் வாதப் பயித்தியச் சுரம்போமென்னே.

| | |
|---|---|
| (இ-ள்.) பேய்ப்புடல் | கோரைக்கிழங்கு |
| பெருங்குமிழ்வேர் | ஆடாதோடைஇலை |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | பற்பாடகம் |
| திராக்ஷை | சந்தனத்தூள் |

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்துப் பத்திரப்படுத்தவும். வேண்டும்போது 1 பலம் தூளெடுத்து 1சேர் சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1/8 ஆகக் காய்ச்சி வடிகட்டி உட்கொள்ளவும். வாதபித்த ஜ்வரங்கள் தீரும்.

**வாதச்லேஷ்ம ஜ்வரத்திற்கு**

முத்தம் படகம் நிர்குன்றி முதிர்பொற் கொன்றைச்சிறுமூலம்
கைத்த கடுரோகணிகடுக்காய் கருஞ்சீரகம்சீ ரகமரத்தை
யொத்த திரிகடு கிவைசமன்கொண் டூறிக் காய்ந்து நுகர்வீரேற்
றேத்தும் வாதச் லேத்மசுரந் தீருஞ் சரீரந் திருந்திடுமே. (11)

(இ-ள்.) கோரைக்கிழங்கு பற்பாடகம்
நொச்சியிலை கொன்றைவேர்
கடுகரோகிணி கடுக்காய்த்தோல்
கருஞ்சீரகம் சீரகம்
சிற்றரத்தை சுக்கு
திப்பிலி மிளகு

இவைகளை 1 பலம் வீதமெடுததுக் கல்லுரிலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்துப் பத்திரப்படுத்தவும். வேண்டும்போது இத்தூள் 1 பலம் எடுத்து 1 சேர் சுத்த ஜலம் விட்டு, அடுப்பின்மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து வடிகட்டிப் பருகவும். வாத கப ஜ்வரங்கள் தீரும்.

## பித்த சிலேத்ம ஜ்வரத்திற்கு

கொத்தமல்லி கடுதான்றி கோட்டம் கொன்றை
வேர்க்கொம்பு
சித்தமுட்டி பொன்முசுட்டை சீந்திற் தண்டு சீரகமு
மொத்தகடுரோ கணிமதுர மூறிக்காய்ந்து கொள்வீரேற்
பித்தச்லேத்ம ஜ்வரந்தீரும் பிதற்றல் தாகம் பெயர்ந்திடுமே.

(இ-ள்.) கொத்தமல்லிவிதை கடுக்காய்த்தோல்
தான்றித்தோல் கோஷ்டம்
கொன்றைவேர் சுக்கு
சித்தாமுட்டிவேர் பொன்முசுட்டைவேர்
சீந்திற்கொடி சீரகம்
கடுகரோகிணி அதிமதுரம்

இவைகளை இடித்து (1 வராகனெடை) ஒரு பாத்திரத்திலிட்டு எட்டு மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து, எட்டிலொன்றாக்கி வடிகட்டி உட்கொள்ளவும். பித்த சிலேத்ம ஜ்வரங்கள் தீரும்.

## சந்நிவாத ஜ்வரத்திற்கு

அரவிந்தவளையம் வேப்பீர்க் கம்புதம் தேவதாரம்
வருசந்தங் கடுகுரோணி வளர்திரி கடுகடுக்காய்த்

தருமிந்த மருந்தெட்டொன்றாய் காய்ந்தநீர்
தன்னையுண்ணில்
சுரமந்தச் சந்நிவாதச் சுரமிவை யேகுமென்றே. (13)

(இ-ள்.) தாமரையிலையினுட்சுருள் வேப்பீர்க்கு
தாமரைமணி தேவதாரு
சந்தனத்தூள் கடுகரோகிணி
சுக்கு திப்பிலி
மிளகு கடுக்காய்த்தூள்

இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை வீதம் எடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு எட்டு மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி 1/8 பாகம் ஆகும் வரை வற்றவைத்து, வடிகட்டிப் பருகிவரச் சந்நிவாத ஜ்வரங்கள் தீரும்.

## குளிர் ஜ்வரத்திற்கு

கல்லு நெருஞ்சி நீர்முள்ளி கடுக்காயிஞ்சிச் சாறணைவேர்
வல்ல முருக்கி னிலைதேவ தாரம் வகையொன்
றொருகழஞ்சு
சொல்லு மிரண்டு படிநீரிற் றுலங்கக் காய்ச்சிக் கொள்வீரேல்
விலகக் குளிருஞ் சுரமுமென்ன வியம்பும் பொதிகைக்
குருமுனியே. (14)

(இ-ள்.) நெருஞ்சில்வேர் நீர்முள்ளிவிதை
கடுக்காய்த்தோல் இஞ்சி
சாரணைவேர் முருங்கை இலை
தேவதாரம்

இவைகளை வகைக்கு 1 கழஞ்சு வீதமெடுத்து இடித்து ஒருபாத்திரத்திலிட்டு சுத்தஜலம் 2 படிவிட்டு அடுப்பின்மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து உட்கொள்ளவும். குளிர் ஜ்வரங்கள் தீரும்.

### திரிதோஷத்திற்குக் குடிநீர்

விரும்பிய சுக்குசிற்றா முட்டிவேர் வில்வவேரும்
பொருந்திய கஷாயந்தன்னில் நெற்பொரி புகரில் சீரந்
திருந்துதிப் பிலியுந் தூளாய் சேர்ந்ததிற் றேன்விட்டுண்ண
விருந்திடுந் திரிதோஷத்தில் சுரஞ்சத்தி யேகுமென்னே. (15)

(இ-ள்.) சுக்கு, சித்தாமுட்டிவேர், வில்வவேர் இவைகளை 1 வராகனெடை வீதமெடுத்து, இடித்து 8 மடங்கு தண்ணீர்விட்டு, அடுப்பின்மேலேற்றி எட்டிலொன்றாகும் வரை எரித்து, வடிகட்டிக்கொள்ளவும். இக்கஷாயத்துடன் நெற்பொரி, சீரகம், திப்பிலி முதலானவைகளின் சூரணம் ஒரு குன்றியளவு போட்டுத் தேன் சிறிது விட்டுப் பருகவும். திரிதோஷ ஜ்வரங்கள் தீரும்.

### குளிர் ஜ்வரத்திற்குச் சிறுகாஞ்சோறிக் கஷாயம்

சிறுகாஞ்சோறி குருந்தோட்டிச் சிவதைச்சுக்குச் சீந்திலொடு
மறுகாதாட தோடையிலை மன்னும் வேப்பமீர்க்கினுடன்
தறுகாப்பற்படாகமிவை தன்னிலொக்கக் கொண்டிடித்துக்
குறுகாதெட்டொன் றாற்காயிற் குளிரும் வெதுப்புங்
குலைந்திடுமே. (16)

| (இ-ள்.) சிறுகாஞ்சோறிவேர் | சித்தாமுட்டிவேர் |
|---|---|
| சிவதைவேர் | சுக்கு |
| சீந்தில்கொடி | ஆடாதோடையிலை |
| வேப்பம்ஈர்க்கு | பற்பாடகம் |

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்துப் பத்திரப் படுத்தவும். இதில் 1 பலம் சூரணம் எடுத்து 1 சேர் தண்ணீர் விட்டு அடுப்பின்மேலேற்றி 1/8 ஆக வற்றக் காய்ச்சவும். இதனை உட்கொண்டுவரக் குளிர் ஜ்வரங்கள் தீரும்.

### காங்கைக்கு பூசினித்தண்டுக் கஷாயம்

வேசமற்றிடைவிடாத வெதுப்பிற்கு நீயஞ்சாதே
பூசினித்தண்டு சுக்கு புகழ்பொன்னாங் காணிகூட்டி
நேசமுற் றெட்டொன்றான நீர்தனைப் பருகுவீரேல்
நாசமுற்றிடும் வெதுப்பு நாடுவிட்டோடுமென்னே. (17)

(இ-ள்.) பூசினித்தண்டு, சுக்கு, பொன்னாங்காணிவேர் இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாகச் செய்து வடிகட்டி உட்கொள்ளவும். அஸ்தி காங்கைகள் தீரும்.

### தலைநோய் சந்திக்கு வாஸாதிக் கஷாயம்

ஆடாதோடை வேப்பந்தோல் அரியசுக்குப் பற்பாடகம்
கோடார்ச் சந்தம் நன்னாரி குலவுமுத்தம் லாமிச்சு
வாடாதிவை யெட்டொன்றாய் மாலைகாலை நுகர்வீரேல்
நாடாவெதுப்புத் தலைநோவு நண்ணுஞ் சந்தியு
மாறுமென்றே. (18)

(இ-ள்.) ஆடாதோடைவேர் — வேப்பம்பட்டை
சுக்கு — பற்பாடகம்
சந்தனத்தூள் — நன்னாரிவேர்
கோரைக்கிழங்கு — இலாமிச்சைவேர்

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி இறக்கவும். இதனை வடிகட்டி உட்கொள்ளவும். தினம் 2 வேளை உட்கொள்ளக் காங்கை தலைநோய், சந்தி முதலான நோய்கள் தீரும்.

### சீத ஜ்வரத்திற்குத் திரிகடாதிக் கஷாயம்

திரிகடு சுசமதாகத் திராக்கஞ்சிற் றாமணக்குக்
குறியுடனிட வெட்டொன்றாய் குறுகும் நீர்க்கொள்வீராகி

*லிறுதிப்பிலி யமன்போல வெய்திவே தனைகள் செய்யு*
*முறுதுயரான சீதஞ் சுரமிவை யோடுங்காணே. (19)*

| *(இ-ள்.)* | *சுக்கு* | *திப்பிலி* |
|---|---|---|
| | *மிளகு* | *ஓமம்* |
| | *திராக்ஷை* | *சிற்றாமணக்கம்வேர்* |

இவைகளை வகைக்கு ½ பலம் வீதமெடுத்து, இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து 1/8 ஆக வற்றவைத்து இறக்கி வடிக்கட்டி உட்கொள்ளவும். யமனைப்போல் வருத்தத்தைத் தரும் குளிர் ஜ்வரங்கள் தீரும்.

## ஜ்வரங்களுக்கு கொன்றைத்தோல் கஷாயம்

*கொன்றைத் தோலிரு வேலிமஞ்சள் குலவுமதுர மரமஞ்ச*
*ளின்றிச் சுக்குங் காய்ந்தெட்டொன் றாக்கித்திப்பிலி தேனுடனே*
*யொன்றித் தருந்த வேதனைசெய் துடற்றுஞ்சுரங்க ளவையெல்லாங்*
*கன்றைப் பிரிந்த பசுபோலக் கதறியோடுங் கண்டீரே. (20)*

| *(இ-ள்.)* *கொன்னைத்தோல்* | *வெட்டிவேர்* |
|---|---|
| *மஞ்சள்* | *அதிமதுரம்* |
| *மரமஞ்சள்* | *சுக்கு* |

இவைகளை வகைக்கு ½ பலம் வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்தில் போட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து உட்கொள்ளவும். இதனுடன் திப்பிலிச் சூரணம் சேர்த்துப் பருகவும். ஜ்வரங்கள் தீரும்.

## உள்நடுக்கு ஜ்வரத்திற்கு வில்வாதிக் கஷாயம்

*பேசுங் கூவளைப் பாதிரிவேர் பெரியகுமிழ்வேர் கடகசிங்கி*
*மாசுசிறிய வழுதலைவேர் வளருங் கண்டங் கத்திரிவேர்*

ஆசில்திரிகடு கெட்டெட்டொன் றாகக் காய்ந்து
கொள்வீரேல்
வீசுசுரமு முள்நடுக்கும் வெருவியோடுங் கண்டீரே. (21)

(இ-ள்.) வில்வவேர் பாதிரிவேர்
பெருங்குமிழ்வேர் கற்கடசிங்கி
சிறுகத்திரிவேர் கண்டங்கத்திரிவேர்
சுக்கு மிளகு
திப்பிலி

இவைகளை ½ பலம் வீதமெடுத்து இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டுச் சுத்தஜலம் எட்டு மடங்கு விட்டு, அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி இறக்கவும். இக்கஷாயத்தை பருகிவரச் சுரம், உள்நடுக்கம் முதலானவை நீங்கும்.

### சுரத்திற்குக் கோஷ்டாதிக் கஷாயம்

பற்றாங் கோட்டங் கடுத்திரயம் பகரும் பெருங்குமிழ்
வேப்பலகு
சற்றாந்தேவ தாரமுந்தந் தான்றிக் கடுக்காய் கடுரோணி
கற்றார் கற்ற பெருங்குரும்பை கைக்கும்
புடோலோடதிவிடையம்
மற்றார் கீழ்க்காய்க் காஞ்சோறி மருந்தைக் காணிற்
சுரம்போமே. (22)

(இ-ள்.) கோஷ்டம் சுக்கு
திப்பிலி மிளகு
பெருங்குமிழ் வேப்பீர்க்கு
தேவதாரம் கோரைக்கிழங்கு
தான்றித்தோல் கடுக்காய்த்தோல்
கடுகுரோகிணி பெருங்குரும்பை
பேய்ப்புடல் அதிவிடயம்
கீழாநெல்லி காஞ்சோறிவேர்

முதலான சரக்குகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்துப் பத்திரப் படுத்தவும். வேண்டும்போது 1 பலம்

தூளெடுத்து , எட்டுமடங்கு சுத்த ஜலம் சேர்த்து, அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்றவைத்து வடிக்கட்டிப் பருகவும். ஜ்வரங்கள் அனைத்தும் தீரும்.

### மேகஜ்வரம் சீதத்திற்குச் சுக்காதிக் குடிநீர்

குடிநீர் சுக்கின் மிளகினுடன் கோரைக்கிழங்குச்
சாறணைவேர்
நெடுவேப் பந்தோல் சீந்தில்கடு நெல்லிக்காய்ந்தெட்
டொன்றாக்கி
பொடிமேற் றிப்பிலிப் போட்டுண்ணப் போக்குஞ் சுரத்தைப்
பொடியினுட
னிடவேசிவதை மலமுங் கழறு மேகஞ்சுரமுஞ் சீதமுமே.

(இ-ள்.) சுக்கு மிளகு
கோரைக்கிழங்கு சாறணைவேர்
வேப்பம்பட்டை சீந்தில்கொடி
கடுக்காய்த்தோல் நெல்லிவற்றல்

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து இடித்து வைத்துக்கொண்டு, வேண்டும்போது 1 பலம் தூளெடுத்துத் தண்ணீர் 1 சேர் விட்டு 1/8 ஆக வற்றவைத்து வடிக்கட்டித் திப்பிலிச் சூரணம் போட்டு உட்கொள்ளவும். சிவதைவேர்ச் சூரணமிட்டுப் பருக மேகஜ்வரம், சீதஜ்வரம் இவை தீரும்.

### ஜ்வரத்திற்கு சிவதைக் கஷாயம்

வாய்ந்தசிவதைச் சீந்தில்சுக்கு வளருங்கண்டங் கத்திரிவேர்
ஆய்ந்தசிறுகாஞ் சோறியின்வே ராடாதோடை வேப்பலகு
காந்தக்குடிநீர் தனையிறுத்துக் கற்கந்திப்பிலியிட்டுண்ணத்
தேய்ந்துபோகுஞ் சுரமுடம்பு திருந்துமருந்து செய்வீரே. (24)

(இ-ள்.) பாலில் சுத்திசெய்த சிவதைவேர் சீந்தில்கொடி
சுக்கு கண்டங்கத்திரிவேர்
சிறுகாஞ்சோறிவேர் ஆடாதோடைவேர்
வேப்பீர்க்கு

இவைகளை வகை 1 வராகனெடை வீதமெடுத்து இடித்து ஒருபாத்திரத்திலிட்டுச் சுத்த ஜலம் 8 மடங்கு விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாகும்வரை வற்றவைக்கவும். இதனை வடிகட்டித் திப்பிலிச் சூரணமிட்டுப் பருகவும். சுரம், உடம்புவலி முதலானவை தீரும்.

**ஜ்வரத்திற்கு -வாஸாதிக்கஷாயம்**

திண்ணம் பெறு மாடாதோடை சீந்தில் சிறிய
வழுதிலைவேர்
நண்ணுஞ்சுக்கு வகையொன்று நாடிக்கொள்ளு முக்கழஞ்சு
வண்ணம் புதிய நீரிலிட்டு வற்றக் காய்ந்தெட்டொன்றாக்கி
தண்ணந் திப்பிலி மேற்றூவித் தாழாதுண்ணச் சுரம்போமே.

*(இ-ள்.)* ஆடாதேடை — சீந்தில்கொடி
சிறுகத்திரிவேர் — சுக்கு

இவைகளை 3 ¾ வராகனெடைவீதம் எடுத்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்ற வைக்கவும். இத்துடன் திப்பிலிச் சூரணம் மூவிரல் கொள்ளுமளவெடுத்துக் கலந்து உட்கொள்ளவும். ஜ்வரங்கள் தீரும்.

**சுரத்திற்கு - அமிருதாதிக் கஷாயம்**

சீந்தில் தண்டுங் கடுக்காயும் சிவதைவேருங் களிப்பாக்குங்
காய்ந்த சுக்கு முரோகணியுங் கவின்சேர்
விட்டுணுக்கிராந்தியு
மேந்து முலையாய்! நீரினிலிட்டெடன்டொன்றாக்கிக்
குடிப்பீரேல்
மாந்தமான சுரந்தீரும் வயிறுங் கழியுங் கண்டீரே. *(26)*

*(இ-ள்.)* சீந்தில்கொடி — கடுக்காய்த்தோல்
சுத்திசெய்த சிவதைவேர் — களிப்பாக்கு
சுக்கு — விஷ்ணுகிரந்தி

இவைகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி வடிகட்டிப் பருகவும். மாந்த ஜ்வரம் தீரும். வயிறும் கழியும்.

### தீபனத்திற்குச் சுண்டியாதிக் கஷாயம்

சுக்குஞ் சீந்தில் சாரணைவேர் துய்யகடுக்காய் கருவேம்பு
ஒக்குஞ்சிறிய வழுதலைவேர் வொக்கக்கொண்டு
தகர்த்திட்டுப்
பக்குவத்தினிலிட் டெட்டொன்றாய்ப் பரிவாய்க் காய்ச்சிப்
பருகுவீரேல்
மிக்கவெதுப்பு விட்டோடு மிகுத்த தீபன முண்டாமே. (27)

(இ-ள்.) சுக்கு — சீந்தில்கொடி
சாரணைவேர் — கடுக்காய்த்தோல்
கருவேப்பிலை — சிறுவழுதலைவேர்

இவைகளைச் சரியளவெடுத்து இடித்து (1 பலம்) தூளெடுத்து 1 சேர் தண்ணீர் விட்டு எட்டிலொன்றாக வற்றக் காய்ச்சி வடிகட்டி உட்கொள்ளவும். சுரம் நீங்கும், பசியும் கொடுக்கும்.

### சுரத்திற்கு இலாமிச்சைக் கஷாயம்

இலாமிச்சு சந்த மிருவேலி முத்தம்
பலாமிக்கப் பற்படகம் சீந்தி-லெலாமிட்டுத்
தண்ணீரும் விட்டுக் குடிநீர் தானக்காற்
கண்ணீர் சுரம் வீழ்த்துங்காண். (28)

(இ-ள்.) இலாமிச்சைவேர் — சந்தனத்தூள்
வெட்டிவேர் — கோரைக்கிழங்கு
பற்பாடகம் — சீந்தில்கொடி

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்று ஆகும்வரை வற்றவைத்து வடிக்கட்டி உட்கொண்டுவரவும். சுரங்கள் தீரும்.

## பார்ங்கியாதிக் கஷாயம்

*சீர்பெறு பார்ங்கி சுக்குத் திப்பிலி சிறுகாஞ்சோறி*
*பேர்பெறு படகம் கோஷ்டம் பெருநில வேம்புச் சீந்தில்*
*வார்பெறு முலையாய்! முத்தம் வழுதலை வேரீரைந்தும்*
*நேர்பெறு வகைகழஞ்சு நீர்படி யொன்றிக் காய்ந்தே. (29)*

(இ-ள்.) சிறுதேக்கு — சுக்கு
திப்பிலி — சிறுகாஞ்சோறிவேர்
பற்பாடகம் — கோஷ்டம்
நிலவேம்பு — சீந்தில்கொடி
கோரைக்கிழங்கு — சிறுகத்திரிவேர்

இவைகளை வகைக்கு *1 ¼* வராகனெடை வீதமெடுத்து இடித்துச் சுத்த ஜலம் *8* மடங்கு விட்டு, அடுப்பின்மேலேற்றி எரித்து, எட்டிலொன்றாக்கி வடிக்கட்டி உட்கொள்ளவும்.

## இதுவுமது

*காய்ந்திடும் பார்ங்கியாதிக் கஷாயத்தைக் கலவாதுண்ண*
*வாய்ந்திடு மசீரணத்தில் வருசுர மேகாதீதம்*
*மேய்ந்திடுந் துயவாதீத மிகவதிரியாகீங்கள்*
*பாய்ந்திடுஞ் சுரதோஷங்கள் பறந்திடு மறிந்திடீரே. (30)*

(இ-ள்.) பார்ங்கியாதி கஷாயத்தை உட்கொள்ள அசீர்ணஜ்வரம், ஏகாதீத ஜ்வரம், துயவாதீத, திரீகீக ஜ்வரம், (ஒரு நாட்கொருதடவை 2 நாட்களுக்கொரு தடவை 3நாட்களுக்கொருதடவை வரும் முறை ஜ்வரங்கள்) தீரும்.

## பாரங்கியாதிக் கஷாயம் (வேறு)

*சொல்லும் பார்ங்கி கடகசிங்கி சுக்கு திப்பிலி வாய்விளங்கம்*
*நல்ல திரிபலை முருங்கைப்பூ நவிலுமிலாமிச்சிருவேலி*
*கல்லுஞ் சீந்தில் செந்தொட்டி கசக்கும் புடலம் புதஞ்செவ்வியம்*
*வல்லசிறுமூ லகங்குடிநீர் மருவச் சுரங்கள் வாராதே. (31)*

| (இ-ள்.) சிறுதேக்கு | கர்க்கடசிங்கி |
|---|---|
| சுக்கு | கோரைக்கிழங்கு |
| வாயுவிடங்கம் | கடுக்காய்த்தோல் |
| நெல்லிவற்றல் | தான்றித்தோல் |
| முருங்கைப்பூ | இலாமிச்சைவேர் |
| வெட்டிவேர் | சீந்தில்கொடி |
| செந்தொட்டிவேர் | பேய்ப்புடல் |
| தாமரைக்கிழங்கு | செவ்வியம் |
| திப்பிலி | |

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து, இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து, எட்டிலொன்றாக வற்றவைத்து, வடிக்கட்டிப் பருகவும். எவ்வித ஜ்வரங்களுந் தீரும்.

## வேணுபத்திரிக் கஷாயம்

வேணுப்பத் திரிமஞ்சிட்டி விட்டுணுக்கி ராந்திமுந்தந்
தோணும்வட் டத்திருப்பி துளசிவே ராடாதோடைக்
காணுகர் ஜுரஞ்சந்தங் கடுத்திரு கொத்தமல்லி
பூணதி மதுரமத்தப் புளியாரைச் சிற்றாமுட்டி. (32)

சித்தமாங் கண்டகாரி திரிபலை கடுகரோணி
பத்திரெண் டொன்றதாகப் பகர்மருந் தூறிக்காய்ந்த
வத்தினிற் சீனிதேனிட் டளவியே யுண்பீராகிற்
எடுத்திடுஞ் சீதமூன்று துடர்ச்சியிற் சுரமும் போமே. (33)

| (இ-ள்.) மூங்கிலிலை | மஞ்சிட்டிக்கிழங்கு |
|---|---|
| விஷ்ணுக்ராந்தி | கோரைக்கிழங்கு |
| வட்டத்திருப்பிவேர் | துளசிவேர் |
| ஆடாதோடைவேர் | பேரீச்சங்காய் |
| சந்தனத்தூள் | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| கொத்துமல்லிவிதை | அதிமதுரம் |
| புளியாரை | சிற்றாமுட்டிவேர் |

கண்டங்கத்திரிவேர் கடுக்காய்த்தோல்
நெல்லிவற்றல் தான்றித்தோல்
கடுகரோகிணி

இவைகளை வகைக்கு 1 ¼ வராகனெடை வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பாதியாக வற்றவைத்து, இறக்கி வடிக்கட்டிக் கொள்ளவும். இக்கஷாயத்துடன் சீனி, தேன் இவைகளைச் சேர்த்து உட்கொள்ளவும். சீத ஜ்வரங்களும், விடாத ஜ்வரங்களும் தீரும்.

**சந்தனாதிக் கஷயாம்**

சந்தனஞ் சிற்றாமுட்டி சாரிபா மதுரமுத்தம்
நந்திலில் வெள்ளிலோத்திர நாககேஸரமுங் கூட்டி
வெந்திடுஞ் சந்தனாதிக் கஷாயந்தேன் விட்டுக் கொள்ளில்
வந்திடுமே தாகமோகம் வளர்பித்தச் சுரமும்போமே. *(34)*

(இ-ள்.) சந்தனத்தூள் சிற்றாமுட்டிவேர்
நன்னாரிவேர் அதிமதுரம்
கோரைக்கிழங்கு வெள்ளிலோத்திரப்பட்டை
நாககேஸரம்

இவைகளை வகைக்கு 1 ¼ வராகனெடை வீதமெடுத்து இடித்து ஒருபாத்திரத்திலிட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்றக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். இக்கஷாயத்துடன் தேன் சேர்த்துப் பருகவும். தாக ஜ்வரம், மயக்கத்துடன் கூடிய ஜ்வரம், பித்த ஜ்வரம் முதலான ஜ்வரங்கள் தீரும்.

**படோலாதிக் கஷாயம்**

சிறந்தபேய்ப் புடல்வேப்பீர்க்குத் திரிபலை தேவதாரம்
அறைந்திடுங் கோட்டங் கொன்றை அகத்திய மிரதவல்லி
நிறைந்தநீர் கொள்ளப் பித்தச் சுரஞ்சேற்பச் சுரமும் நீங்கும்
பிறந்திடும் பெயரிதற்குப் படோலாதி யென்னப் பேசே. *(35)*

(இ-ள்.) பேய்ப்புடல் வேப்பீர்க்கு
கடுக்காய்த்தோல் நெல்லிவற்றல்
தான்றித்தோல் தேவதாரு
கோஷ்டம் கொன்றை
அகத்திவேர் சீந்தில்கொடி

இவைகளைச் சரியெடை (1பலம்) எடுத்து இடித்து, பத்திரப்படுத்திக் கொள்ளவும். வேண்டும்போது இதில் 1பலம் அளவு சூரணம் எடுத்து, ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு தண்ணீர்விட்டூறவைத்து 8ல் 1 பாகமாக வற்றவைத்து, வடிக்கட்டி உட்கொள்ளவும். பித்த ஜ்வரம், கப ஜ்வரம் முதலான ஜ்வரங்கள் நீங்கும்.

## பூநிம்பாதிக் கஷாயம்

நிலநிம்பஞ் சித்தாமுட்டி நெருஞ்சிவேர் படகமுத்தம்
நலமிஞ்சு சுக்குக் கூட்டி நையவே வெந்து கொள்ளிற்
பலமிஞ்சு வாத பித்த ச்லேற்பன பேதந்தன்னிற்
சொல்லந்தச் சுரங்கள் தீருஞ் சுகம்பூ நிம் பாதியாமே. (36)

(இ-ள்.) நிலவேம்பு சிற்றாமுட்டி
நெருஞ்சில் பற்பாடகம்
கோரைக்கிழங்கு சுக்கு

இவைகளை வகைக்கு 1 ¼ வராகனெடை வீதமெடுத்து, இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி 1/8ஆக வற்றக்காய்ச்சி, வடிக்கட்டி உட்கொள்ளவும். வாதபித்த, கபஜ்வரங்கள் நீங்கும். இதன் பெயர் பூனிம்பாதிக் கஷாயமாகும்.

## பற்படாதிக் கஷாயம்

படகந்திப்பிலி கொத்தமல்லி பார்ங்கி தேவ தாரமுடன்
கடகஞ் சுக்கு வகைக் கிரண்டு கழஞ்சுக் குடிநீர்
காய்ந்தருந்தில்

விடமம் வாதசிலேத்ம ஜ்வரம் விட்டுப்போகுந்
தேன்விட்டுச்
சுடவுங் கொள்ளி லிழைப்பகலுஞ் சொல்லும்
பற்படகாதியிதே. (37)

(இ-ள்.) பற்பாடகம் திப்பிலி
கொத்தமல்லிவிதை கண்டுபார்ங்கி
தேவதாரம் சுக்கு

இவைகளை வகைக்கு 2½ வராகனெடை வீதமெடுத்து இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்றவைத்து வடிகட்டித் தேன்விட்டுச் சூட்டுடனே பருகவும். இளைப்பு(சுவாசம்) விஷஜ்வரம், வாதகப ஜ்வரங்கள் முதலானவை நீங்கும்.

### மிருத்வீகாதிக் கஷாயம்

பகர்முந் திரிகைப் பழம் கடுக்காய் படகங்கோரைக்
கிழங்குசுக்கு
நிகழும் கடுகு ரோகிணியாறும் நீரிற்காய்ந்
தெட்டொன்றாக்கி
நுகரிற் பித்த சிலேத்ம சுரம் நொய்யயிருமலதுதீரு
மிகவும் சரீர சுகமுண்டா மிருத்வீகாதிக் கஷாயமிதே. (38)

(இ-ள்.) திராக்ஷைப்பழம் கடுக்காய்த்தோல்
பற்பாடகம் கோரைக்கிழங்கு
சுக்கு கடுகரோகிணி

இவைகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்து, இடித்து 8 மடங்கு தண்ணீர்விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து, வடிகட்டிப் பருகவும். பித்த கப ஜ்வரங்கள், இருமல் முதலானவை தீரும். சரீரத்திற்கு ஹிதமானது.

## அம்புதாதிக் கஷாயம்

கல்லிடு முத்தந் தாரங் கடுரோணி கடுக்காய் சுக்கு
வல்லிசேர் சீந்தில் கொத்த மல்லிபா ரங்கிசீரஞ்
சொல்லியபடகமாடா தோடைதிப் பிலைகாய்ந் துண்ணிற்
புல்லிய சுரங்களெல்லாம் போக்குமம் புகாதியாமே. *(39)*

| | |
|---|---|
| (இ-ள்.) கோரைக்கிழங்கு | தேவதாரம் |
| கடுகரோகிணி | கடுக்காய்த்தோல் |
| சுக்கு | சீந்தில்கொடி |
| கொத்தமல்லிவிதை | கண்டுபாரங்கி |
| சீரகம் | பற்பாடகம் |
| ஆடாதோடைவேர் | திப்பிலி |

இவைகளை வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை வீதமெடுத்து, ஒன்றிரண்டாக இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து 1/8 பாகமாகும் வரை எரித்து, வடிகட்டிப் பருகவும். சுரங்கள் அனைத்தும் தீரும்.

## முர்வாதிக் கஷாயம்

மூறுவந் தேவதார முதிருஞ்சந் தனமே சுக்குத்
தாறுவி யைந்துங் காய்ந்த லலிலமே பருகுவீரேல்
மாறிடும் பிரலாபங்கள் மற்றுள ஜ்வரங்கள் தோஷ
மீறிடும் விடமசீதம் விடுமூறு வாதி யென்னே. *(40)*

| | |
|---|---|
| (இ-ள்.) மருள்வேர் | தேவதாரு |
| சந்தனத்தூள் | சுக்கு |
| மரமஞ்சள் | |

இவைகளைவகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டுச் சுத்த ஜலம் 8 மடங்கு விட்டு, அடுப்பின் மேலேற்றி, எரித்து எட்டிலொன்றாக்கி வடிக்கட்டிப் பருகவும். பிரலாபச் சுரங்கள் தீரும். விஷமசீத ஜ்வரமும் நிற்கும்.

## தசமூலாதிக் கஷாயம்

தசமூலம் விடயம் சீந்தில் திப்பிலி படகஞ்சுக்கு
நிசமூலந் துவராலாபம் நேடிய முத்தம் பத்தெட்
டிசைமூல மிவை காய்ந்துண்ணில் விக்கல்சந்தி வாதவெப்பு
விஷமேவு சுரங்கள் தீருந் தசமூலக் கஷாய மின்னே. (41)

(இ-ள்.) வில்வவேர் — பெருங்குமிழ்
சிறுகுமிழ் — வாகை
பாதிரிவேர் — கத்திரிவேர்
முள்ளுக்கத்திரி வேர் — கண்டங்கத்திரி வேர்
முன்னைவேர் — நெருஞ்சில்
அதிவிடயம் — சீந்தில்கொடி
திப்பிலி — பற்பாடகம்
சுக்கு — காஞ்சோறிவேர்
கோரைக்கிழங்கு — மஞ்சள்

இவைகளையும் வகைக்கு 1 பலம் வீதமெடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டு, ஒன்றிரண்டாக இடித்து வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது இதில் 1 பலம் தூள் எடுத்து 1 சேர் சுத்த ஜலம் விட்டூறவைத்து, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்துப் பருகவும். விக்கல், சந்நிபாதம், காய்கை, விஷஜ்வரம் முதலானவை தீரும்.

## வியோஷாதிக் கஷாயம்

திரிகடு முத்தம் வட்டத் திருப்பித்திப் பிலியின் மூலந்
திரிபலை குடசப்பாலை திகழ்நில வேம்பி தெல்லாஞ்
சரிபடவூறிக்காய்ந்த சலிலமே யுண்பீ ராகில்
றிரிவிதச் சுரங்கள் தீருந் திகழ்வியோ ஷாதியென்னே. (42)

(இ-ள்.) சுக்கு — திப்பிலி
மிளகு — கோரைக்கிழங்கு
வட்டத்திருப்பி — திப்பிலிமூலம்
கடுக்காய்த்தோல் — நெல்லிவற்றல்

தான்றித்தோல் வெட்பாலையரிசி
நிலவேம்பு

இவைகளை வகைக்கு 1 ¼ வராகனெடை அளவெடுத்து இடித்து, 8 மடங்கு ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து, எட்டிலொன்றாக்கிப் பருகவும். திரிதோஷச் சுரங்கள் தீரும்.

## வத்ஸகாதிக் கஷாயம்

குடசநீர் வாரி சந்தங் கோரையின் கிழங்கு கோஷ்டம்
படகங் காஞ் சோறி சுக்கு பார்நிம்ப மிலுப்பையின்பூ
புடவஞ் சாரிபமே சீந்தில் பொருந்துநீ ரருந்துவீரே
லடரும் வாதச்சுரம் போகு மருள வத்ஸகாதியாமே. (43)

(இ-ள்.) வெட்பாலையரிசி சந்தனத்தூள்
கோரைக்கிழங்கு கோஷ்டம்
பற்பாடகம் காஞ்சோறிவேர்
சுக்கு வேப்பம்பட்டை
இலுப்பைப்பூ நன்னாரிவேர்
சீந்தில்கொடி

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து, ஒன்றிரண்டாக இடித்து 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து எட்டில் ஒன்றாக்கி வடிகட்டி உட்கொள்ளவும். வாதச்சுரங்கள் தீரும்.

## அமிர்தாதிக் கஷாயம்

சீந்தில் வடயம் பற்பாடகம் திராக்கஞ் சாரிபஞ் சுக்கு
சார்ந்த துளசி கர்ச்சூரந் தனிகமதுரங் கற்பூரஞ்
சேர்ந்த நெல்லி மிருதாளந் திகழும் நெய்தல் சித்தமட்டி
யாய்ந்த வெட்டி தாகசுரம் அகலும் பெயரமிர் தாதியதே. (44)

(இ-ள்.) சீந்தில்கொடி அதிவிடயம்
பற்பாடகம் திராக்ஷை
நன்னாரிவேர் சுக்கு

| | |
|---|---|
| துளசி | பேரீச்சங்காய் |
| தானிக்காய் | அதிமதுரம் |
| கர்ப்பூரம் | நெல்லிவற்றல் |
| தாமரைக்கிழங்கு | நெய்தல் கிழங்கு |
| சித்தாமுட்டிவேர் | வெட்டிவேர் |

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து, இடித்து 8 மடங்கு தண்ணீர்விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து, வடிக்கட்டி உட்கொள்ளவும். தாகச்சுரம் தீரும்.

### பதரீபத்ராதிக் கஷாயம்

*காட்டிலிலந்தை யிலைதுளசி கச்சநாரத் திலைசுக்குக்*
*கூட்டு மெலிசெவி பாதிரிவேர் குமரிச்சருகு குடிநீரா*
*யூட்டிற் சீதச்சுரமேகு முற்றபூதச்சுரமும் போம்*
*பாட்டிற் கவிஞர் பகர்ந்தமுறை பதரீபத்தி ராதியிதே. (45)*

| | |
|---|---|
| (இ-ள்.) காட்டிலந்தையிலை | துளசி |
| நாரத்தையிலை | சுக்கு |
| எலிச்செவிப்பூண்டு | பாதிரிவேர் |
| கற்றாழைச்சாறு | |

இவைகளை இடித்து (வகைக்கு 1 வராகனெடை) ஒரு பாத்திரத்திலிட்டு, 8 மடங்கு தண்ணீர் சேர்த்துக் கொதிக்க வைத்து, எட்டிலொன்றாக்கி இறக்கி வடிக்கட்டி உட்கொள்ளவும். சீதஜ்வரம், பூதஜ்வரம் முதலான சுரவகைகள் தீரும்.

### அருளுவாதிக் கஷாயம்

*அருளுத்தொக்கு மலைதாங்கி யதிவிடயம் வில்வப்பிஞ்*
*சுருளு மாதளையின் பிஞ்சோ டுற்ற குடசப்பாலை சுக்கு*
*விரவிக் கஷாய மெட்டொன்றாய் விழுங்கச் சுரங்க ளதிஸாரங்*
*குருவைப் பணிந்தோர் பாவம்போல் குலையும் பெயரருளாதியிதே. (46)*

(இ-ள்.) வெட்பாலைப்பட்டை மலைதாங்கி (ஆடுதீண்டாப்பாளைவேர்)
அதிவிடயம் வில்வப்பிஞ்சு
மாதளைப்பிஞ்சு வெட்பாலை விதை
சுக்கு

இவைகளைச் சமனெடை எடுத்துக் கல்லுரலிலிட்டிடித்து வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது ஒருபலம் சூரணம் எடுத்து, ஒரு பாத்திரத்திலிட்டு ஒருசேர் ஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி 1/8 ஆக வற்றவைத்து உட்கொள்ளவும். அதிசார ஜ்வரங்கள் நிற்கும்.

**குளிர் ஜ்வரத்திற்குப் படோலாதிக் கஷாயம்**

இப்பினார் தம்மினாணை யிடுபுடடோல் முத்தக்காசு
பற்பாடஞ் சீந்திற்றண்டு பையவே நைய்ய வெந்த
அப்பினார் தேனினாரை யளாவினாரென்னக்கேட்டு
வெப்பினார் குளிரினாரை வினவினார்
விடைகொண்டோரே. (47)

சுக்கினார் தொலியினார்போய்ச் சுறுக்கினார் தேனினொடும்
கொக்கினார் பெயரினாருங் கூடினார் விருத்தப்பாகஞ்
சிக்கினார் சிறுகினார் கையில் வாரி .... ..... .....
நக்கினார் தேனினோடும் நழுவினார் குளிரினாரே. (48)

(இ-ள்.) பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, பற்பாடகம், சீந்தில்கொடி இவைகளைச் சமனெடுத்து இடித்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி 1/8 ஆக வற்றவைத்து, வடிகட்டித் தேன்கூட்டி உட்கொள்ளவும். குளிர் காய்ச்சல் தீரும்.

தோல் நீக்கிய சுக்கையிடித்துச் சூரணம் செய்து, தேன்விட்டுக் குழைத்துக் கொண்டாலும் குளிர் நீங்கும்.

**ஏரண்டாதிக் கஷாயம்**

சொல்லுஞ்சிற் றாமணக்குத் தான்சிற்றா மல்லிகண்டங்
வல்லசுக் கிவையோரொன்று வகைமூன்று கழஞ்சுகொண்டு
நல்லிரு நாழிநீரில் நாலிரண் டொந்றாய்க் காய்ந்தா
லில்லையென் றாணைசொல்லி யேகிடுஞ் சுரங்கள்தானே.

*(இ-ள்.)* சிற்றாமணக்கம்வேர், சிறுமல்லி, கண்டங்கத்திரி, சுக்கு இவைகளை 3¾ வராகனெடை எடுத்து, ஒருபாத்திரத்திலிட்டுச் சுத்தஜலம் சின்னபடி ½ விட்டு, அடுப்பின் மேலேற்றி ½ பாகமாகுமளவு வற்றவைத்துப் பகவானை நினைத்துப் பருகவும். ஜ்வரங்கள் தீரும்.

**கபச்சுரத்திற்கு அதிவிஷாதிக் கஷாயம்**

விடையங் கோட்டம் கடுரோணி வேலிப்பருத்திப்
பெருங்குமிழ்வேர்
படருஞ் சீந்தில் கருச்செயின் வேர் பகர்செந் தொட்டி
வேப்பலகு
துடருமுத்தம் பெருங்குரும்பை சுக்கு கீழ்காய் நெல்லிபுட-
லடருங் கஷாய மிந்துப்பிட் டருந்துச் சிலேற்பச் சுரம்
போமே. *(50)*

*(இ-ள்.)* அதிவிடயம் கோட்டம்
கடுகரோகிணி வேலிப்பருத்திவேர்
பெருங்குமிழ்வேர் சீந்தில்கொடி
முருங்கைவேர் செந்தொட்டிவேர்
வேப்பீர்க்கு கோரைக்கிழங்கு
பெருங்குறும்பை(மருள்) சுக்கு
கீழாநெல்லி புடலம்வேர்

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டுச் சுத்தஜலம் *8* மடங்கு விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து, இந்துப்புச் சேர்த்து உட்கொள்ளவும். கபச்சுரம் தீரும்.

## ஜ்வரத்திற்குச் சுண்ட்யாதிக் கஷாயம்

*அறிவீர்சுண்டி சீந்திலுட னானசேவகன் பூடுமனஞ்*
*செறியுமிலாமிச் சதிமதுர சேரவிருகழஞ் சோறொன்று*
*குறியா திருபடி தண்ணீரிற் கூடக் காய்ந்தெட்*
*டொன்றாக்கிப்*
*பொறியார்திப்பிலி மேற்றூவிப் போற்றிக்குடிக்கச்சுரம்*
*போமே. (51)*

*(இ-ள்.)* சுக்கு சீந்தில்
சேவகன் பூண்டு விலாமிச்சைவேர்
அதிமதுரம்

இவைகளை வகைக்கு 2 ½ வராகனெடை வீதமெடுத்து இடித்து, ஒரு பாத்திரத்திலிட்டு 2 படி சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி, எரித்து எட்டில் ஒன்றாக வற்றவைத்து வடிக்கட்டித் திப்பிலிச் சூரணம் போட்டுப் பருகவும். ஜ்வரங்கள் தீரும்.

## படோலாதிக் கஷாயம்

*போமே திரிகடு கிலவங்கம் போற்றுங் கடுக்காய்*
*கொன்றைத்தோல்*
*தாமே வகைக்கொன் றரைக் கழஞ்சு சலிலத் திட்டெட்*
*டொன்றாக்கி*
*யாமே திப்பிலி மேற்றூவி யருந்து வெதுப்புங் குளிரும்*
*போம்*
*போமே யதனிற் புடோல் கூடிற் பித்தச் சுரங்கள்*
*போய்விடுமே. (52)*

*(இ-ள்.)* சுக்கு திப்பிலி
மிளகு கிராம்பு
கடுக்காய்த்தோல் கொன்றைத்தோல்

இவைகளை வகைக்கு 20 குன்றிநிறை எடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்து, எட்டிலொன்றாக்கி வடிக்கட்டிக்கொண்டு திப்பிலிச் சூரணம் இட்டுப் பருகவும்.

குளிர், வெதுப்பு (காங்கை) முதலானவை தீரும். இதனுடனே பேய்ப்புடல் கூட்டிக் கஷாயமிட்டுப் பருகினால் பித்த ஜ்வரங்கள் தீரும்.

**சுரத்திற்கு இலுப்பைப்பூக் கஷாயம்**

செய்ய விலுப்பைப் பூவுடனே சேருந்திரிகடு கதிமதுரம்
பொய்யதாகும் நன்னாரி போற்றுந் தாமரை யல்லியுடன்
பைய யெட்டொன் றாய்க்காய்ச்சிப் பகருந் திப்பிலி பொடி
தூவிக்
கையா லெடுத்துக் குடிப்பீரேல் காணீர் சுரத்தைக் காணீரே.

(இ-ள்.) இலுப்பைப்பூ — சுக்கு
திப்பிலி — மிளகு
அதிமதுரம் — நன்னாரிவேர்
தாமரைக்கிழங்கு — அல்லிக்கிழங்கு

இவைகளை வகைக்கு 1 கழஞ்செடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி, எட்டிலொன்றாக வற்றவைத்துத் திப்பிலிச் சூரணம் இட்டுக் குடிக்கவும். சுரங்கள் தீரும்.

**கணச்சுரங்களுக்குக் குடூச்யாதிக் கஷாயம்**

சீந்தில்தூ தளை கடுக்காய் சீரக மதுரமுத்தம்
வாய்ந்தவிட் டுணுக்கிராந்தி வளர்வில்வத்
திலைவேர்குல்லை
சாந்தஞ்செஞ் சாந்தமேலந் தருமந் தொருபன் மூன்றுங்
காய்ந்தநீர ருந்தச் செய்யிற் கணரோகச்சுரங்கள் போமே. *(54)*

(இ-ள்.) சீந்தில்கொடி — தூதுவேளைவேர்
கடுக்காய்த்தோல் — சீரகம்
அதிமதுரம் — கோரைக்கிழங்கு
விஷ்ணுக்கிராந்தி — வில்வவேர்
வில்வஇலை — சந்தனத்தூள்
செஞ்சனத்தூள் — ஏலக்காய், துளசி

இச்சரக்குகளை வகைக்கு 1¼ வராகனெடை வீதமெடுத்து, இடித்துக் கஷாயம் வைத்து உட்கொள்ளவும். கணைச்சுரங்கள் தீரும்.

### ரத்தத்தில் பற்றிய ஜ்வரம் தீரப் புளியீர்க்குக் கஷாயம்

புளியீர்க்கு வேம்பினீர்க்கு புகரறுநெல்லி யீர்க்கு
கிளியீர்க்குக் கொன்றையீர்க்குக் கிளருமா விலையினீர்க்கு
நளிவீர்க்கு மகத்தியீர்க்கு நல்லவிட் டுணுக்கிராந்தி
யொளிவீர்க்குங் கஷாயமுண்ண வுதிரயிற்
சுரம்போமென்னே. (55)

(இ-ள்.) புளியீர்க்கு வேம்பின்ஈர்க்கு
அறுநெல்லியீர்க்கு கொன்றையீர்க்கு
மாவிலையீர்க்கு அகத்தியீர்க்கு
விஷ்ணுக்கிராந்தி

இவைகளைச் சரியெடை எடுத்து இடித்து 8 மடங்கு சுத்தஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி 8ல் ஒன்றாக வற்றவைத்து வடிகட்டி உட்கொள்ளவும். ரத்தத்தில் பற்றிய ஜ்வரம் தீரும்.

### மசூரி ஜ்வரத்திற்குக் கூவிளைக் கஷாயம்

கூவிளத் தளிர்கஷாயம் கோரோசனை கூட்டிக்கொள்ளத்
தாவிள நீரன்னீரிற் சந்தனங் காய்ந்து கொள்ள
மேவிய மசூரி தன்னில் வேகமாஞ் சுரங்கள் தீருங்
காவியங் கண்ணின் மானே! கருத்தினி லறிந்து செய்யே. (56)

(இ-ள்.) வில்வத் துளிரைக்கொண்டு வந்து நசுக்கி 8 மடங்கு தண்ணீர் சேர்த்து 1/8 ஆக வற்றவைத்த கஷாயத்தை வடிக்கட்டி, கோரோசனை, சந்தனம் இவைகளை வகைக்கு ¼வராகனெடை கூட்டி உட்கொள்ளவும். அம்மை ஜ்வரத்திற்கு நல்லது.

**சுரத்திற்கு நஸ்யமும், வேதும்**

*நாரத்தையிலையும் விளாவிலையும் நாடிக்காடி வேதிட்டால்*
*ஆரூக் குஞ்சுர முங்குளிரு மகன்று போகு மிதுவன்றி*
*வாரொக்கு முலையாய்க் கேளாய்! வளர்த்த சங்கங்குப்பியுட*
*நாரத்திலையும் விளாவிலையும் நசியம் புழிய நன்றாமே.*

*(இ-ள்.)நாரத்தையிலை, விளாவிலை இம்மூன்றையும் இடித்து ஒரு துணியில் பொட்டணமாகக் கட்டி அனலில் சூடு பண்ணி ஒற்றடம் இடவும்.*

*சங்கங்குப்பியிலை, நாரத்தையிலை, விளாவிலை இம்மூன்றையும் கசக்கிச் சாறுபிழிந்து மூக்கில் நஸ்யமிடவும். ஜ்வரங்கள் தீரும்.*

**மலச்சிக்கலோடு கூடிய ஜ்வரத்திற்குச் சீரகாதிக் கஷாயம்**

*சீரக மோமம் கல்நார் திப்பிலிச் சாத்திரக்கல்*
*லோர்துடி யொன்றுபாள மிரண்டுசா ரணைவேர்சுக்குப்*
*பேரொரு மூன்றுந் தூளாய் பின்கொத்த மல்லி வறுத்துச்*
*சோரிள நீர்விட் டுண்ணச்சுரந்தீரு மலஞ்சேராதே.* *(58)*

*(இ-ள்.) சீரகம் ஓமம்*
*கல்நார் திப்பிலி*
*சகஸ்ரவேதிகல்*

*இவைகள் 1 வராகனெடை*

| | |
|---|---|
| *போளம்* | *2 வராகனெடை* |
| *சாறணைவேர்* | *3 வராகனெடை* |
| *சுக்கு* | *3 வராகனெடை* |

*இவைகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். கொத்தமல்லியை வறுத்து அதில் இளநீரை விட்டுக் காய்ச்சி முன்சொன்ன பொடியில் ஒரு காசளவெடுத்து உட்கொள்ளவும். ஜ்வரங்கள் தீரும். மலச்சிக்கலும் தீரும்.*

*குறிப்பு:-* கோரோசனை வராகனெடை 1 கூட்டிக் கொள்ளவும் என்று உரையில் காணப்படுகிறது.

## ஜ்வரசிந்தாமணி ரசம்

சுத்திசெய்த கெந்தகம் சுத்திசெய்த தாளகம்
சுத்திசெய்த மனோசிலை சுத்தி செய்த ரசம்
ராவிய செம்புத்தூள்

இவைகளைக் கல்வத்திலிட்டுக் கொம்பு பாகற்காய்ச் சாறுவிட்டு அரைத்துக்கொள்ளவும். ஒரு குழிவான சிறிய செப்புக்கிண்ணியில் முன் விழுதைக் கனமாகப் பூசி, ஒரு புதிய சட்டி கொண்டுவந்து அந்த சட்டி நடுவே மருந்து பூசின கிண்ணியைக் கவிழ்த்துக் கடுக்காயும் மண்ணுமரைத்துச் சீலைமண் செய்து பக்கத்திலே நிறைய மணலைச் சேர்த்து, செம்மிட்டுக் கிண்ணித்தூற் தெரியவைத்து, அடுப்பின் மேலேற்றி ஒருசாமம் தீபாக்கினியாக எரியிட்டு, அதற்குமேல் கனமாக எரியிடவும். கிண்ணித் தூறிலே நாலஞ்சு நெல்லு வைத்துக்கொண்டு எரியிடவும். அந்த நெல் பொரியும், அது பதம். அப்போதிறக்கி ஆறவிட்டுக் கிண்ணியை எடுத்து அதற்குள்ளே இருக்கிற மருந்தைச் சுரண்டியெடுத்துப் பொடிசெய்து, ஒரு பணவெடை பற்பமும் மிளகுப் பொடியுமாக வெற்றிலையில் வைத்து மென்று உள்ளுக்குக்கொண்டு சற்றே வெந்நீருங்கொள்ளப் பத்தியம். உப்புத் தவிர்க்க, சந்தயங்களாய் அஸ்தத்தினாலே தீராதிருக்கிற சுரங்கள் தீரும். சீதஜ்வரம் தீரும். மாரல் ஜ்வரம் தீரும். சதுர்த்தி ஜ்வரம் தீரும்.

## குளிர் ஜ்வரத்திற்கு நாபி மாத்திரை

வச்சநாபி யரைக்கழஞ்சு மணிவெங்கார மொருகழஞ்சு
கச்சவிரத மொருமுக்கால் கௌரிமுக்கால் துத்தங்கால்
மெச்சவூமத் திலைச்சாற்றில் மிகவாயரைத்துப் பயறளவா
யெச்சங்கிளையா தோருண்டை யெடுப்பீர்
குளிரைவிடுப்பீரே. (59)

| | |
|---|---|
| *(இ-ள்.) சுத்திசெய்த வத்ஸநாபி* | *20 குன்றி நிறை* |
| *பொரித்த வெங்காரம்* | *40 குன்றிநிறை* |
| *சுத்திசெய்த பாதரசம்* | *30 குன்றிநிறை* |
| *சுத்திசெய்த கௌரீபாஷாணம் 30* | *,,* |
| *சுத்திசெய்த துத்தம்* | *10 குன்றி நிறை* |

*இவைகளை ஒரு சுத்தமான கல்வத்திலிட்டு, ஊமத்தையிலைச் சாறுவிட்டு, நன்றாக அரைத்துப் (1 நாள்) பயறளவுள்ளமாத்திரைகளாக உருட்டி நிழலில் உலரவைக்கவும். இதில் ஒரு உருண்டை எடுத்து வெந்நீருடன் உட்கொள்ளவும். குளிர் ஜ்வரங்கள் தீரும்.*

**குளிர் ஜ்வரத்திற்குக் கௌரீக்குளிகை**

*கௌரீ துத்த மரிதாரம் கிளரு மிரதம் ரோகிணியும்*
*அவுரி மத்தஞ் சாற்றிலரைத் தரைத்தவுண்டை பயறளவாய்*
*குவளை நறுக்கிக் குடிநீரிற் கோதை முலைப்பா லிஞ்சியினி*
*லுவரிப் புளிவிட் டுண்பீரே லோடுங் குளிருஞ்*
*சுரமுமென்னே. (60)*

*(இ-ள்.) சுத்திசெய்த கௌரீ பாஷாணம், சுத்திசெய்த துத்தம், சுத்திசெய்த அரிதாரம், சுத்திசெய்த பாதரசம், கடுகரோகிணி இவைகளைச் சமனெடுத்துக் கல்வத்திலிட்டு, அவுரிச்சாறு, ஊமத்தஞ்சாறு இவைகளைத் தனித்தனியே விட்டு ஒவ்வொரு நாள் அரைக்கவும். இதனைப் பயறளவுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தவும். இம்மாத்திரையிலொன்றையெடுத்து முலைப்பால், இஞ்சிச்சாறு, கஷாயம் முதலானவைகளுடன் உட்கொள்ளவும். உப்பு, புளி நீக்கவும். குளிர்ஜ்வரம் நிற்கும்.*

**ஜ்வரத்திற்குப் பிரதாப லங்கேச்வரக் குளிகை**

*எண்ணும் பிரதாப லிங்கேசு ரந்தனையே*
*பண்ணுமருந்து பகரக்கேள்-நண்ணுகின்ற*
*சூதமொரு கழஞ்சு சுத்த வெள்ளைப் பாஷாண*
*மோதுகின்ற தாளகமொவ் வோர்கழஞ்சு-மாதுநல்லீர்*

*துத்தமரைக்கழஞ்சு துரிசு மதிற்பாதி*
*இத்தனையும் வெவ்வே ரியல்புடனே-சுத்திசெய்து*
*மாதர்முலைப்பாலி லரைத்து மற்ற நாளு மரைத்*
*தோதுசிறுபயறு போலுருட்டி - நாதமுற*
*மைசேர் நிழலுலர்த்தி நெல்லிலொரு மாதம் வைத்து*
*பையவோ ருண்டை முலைப் பாலிலிடத்- தைய நல்லீர்*
*கள்ளக் குளிர் காய்ச்சல் காணாது பித்தசுரந்*
*தள்ளப்பசுவின் தயிரிலிடத் - துள்ளிசேர்*
*மாறலுக் காவெண்ணே தனில் வாய்ந்த மருந்தைக்*
*கொடுக்கப் பொறாது சொல்லாதோடிப்போம்.* *(61)*

| | | |
|---|---|---|
| *(இ-ள்.)* | *சுத்திசெய்த பதரசம்* | *40 குன்றிநிறை* |
| | *சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம்* | ,, |
| | *சுத்திசெய்த தாளகம்* | ,, |
| | *சுத்திசெய்த துத்தம்* | *20 குன்றிநிறை* |
| | *சுத்திசெய்த துரிசு* | *10 குன்றிநிறை* |

*இவைகளைக் கல்வத்திலிட்டுத் தாய்ப்பால் விட்டு நன்றாக 2நாட்கள் விடாமல் அரைக்கவும் பின்பு இதனைச் சிறு பயறளவுள்ள மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்தவும். ஒரு குப்பியில் இட்டு ஒரு மாதம் நெல்லிற்குள் புதைத்து வைக்கவும்.*

*இதில் ஒரு மாத்திரையெடுத்து முலைப்பாலில் இழைத்து உட்கொள்ளவும். குளிர்க்காய்ச்சல் தீரும். பித்த ஜ்வரத்திற்குப் பசுவின் தயிரில் கொடுக்கவும். பசுவின் வெண்ணெயில் கொடுத்தால் விட்டு விட்டு வரும் காய்ச்சலில் நீங்கும்.*

### மாறல் ஜ்வரத்திற்கு மாத்திரை

*பாரதங் கெளரி வெள்ளைப் பாஷாணந் துரிசு துத்தஞ்*
*சாரரிதாரங் கெந்தகம் மனோசிலைச்சாதி லிங்கம்*
*வோரொரு கழஞ்சு பாள மிருகழஞ் சொக்கவிஞ்சி*
*வார்தரு சாற்றரைத்து வருசிறு பயறுபோலே.* *(62)*

போலுமாத் திரையை யிஞ்சிச் சாற்றுடன் புகட்டியாவின்
பாலினிற் கஞ்சி வைத்துப் பருகிடக் குளிர் சுரங்கள்
நாலுநா ளையினில் மாறல் நவையறத் தீரும் பின்னுங்
கோலமாங் கஷாயமொன்று குடித்திட வேணுங் காணே. (63)

| (இ-ள்.) சுத்திசெய்த | பாதரசம் |
|---|---|
| ,, | கௌரீபாஷாணம் |
| ,, | வெள்ளைப்பாஷாணம் |
| ,, | துரிசு |
| ,, | துத்தம் |
| ,, | அரிதாரம் |
| ,, | கெந்தகம் |
| ,, | மனோசிலை |
| ,, | லிங்கம் |

இவைகள் வகைக்கு 1¼ வராகனெடை

சுத்திசெய்த நேர்வாளம் 2½ வராகனெடை

இவைகளை கல்வத்திலிட்டு இஞ்சிச்சாறு விட்டு, நன்றாக இரண்டு நாட்கள் அரைத்துப் பயறளவுள்ள மாத்திரைகளாக உருட்டவும். ஒரு மாத்திரையை இஞ்சிச்சாற்றுடன் கொடுக்கவும். பசுவின்பால் விட்டுக் கஞ்சி உட்கொள்ளவும். குளிர் ஜ்வரம் 4 நாட்களுக்கொருமுறை வரும் மாறல் ஜ்வரம் முதலானவை தீரும். கூடச் சாப்பிட வேண்டிய கஷாயம்.

| | |
|---|---|
| தாமரைவளையம் | கோரைக்கிழங்கு |
| சீந்தில்கொடி | சித்தாமுட்டிவேர் |
| பேராமுட்டி | நன்னாரிவேர் |
| பொன்மெழுகு | சடாமாஞ்சில் |
| கோஷ்டம் | சிற்றரத்தை |
| தேவதாரு | கிராம்பு |
| சாதிக்காய் | தான்றிக்காய் |
| கடுக்காய்த்தோல் | கடுகரோகிணி |
| செவ்வல்லிக்கொடி | செவ்வியம் |
| பற்பாடகம் | சிறுதேக்கு |
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |

| | |
|---|---|
| அதிமதுரம் | சிறுபயற்றம்பருப்பு |
| சுக்கு | கொத்தமல்லிவிதை |

இவைகளைச் சமனெடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு, 8மடங்கு தண்ணீர் சேர்த்து எட்டிலொன்றாக வற்றவைத்து வடிக்கட்டி உட்கொள்ளவும்.

## சீத ஜ்வரத்திற்கு

வெள்ளைப்பாஷாணம், கௌரீபாஷாணம் இது இரண்டும் பசுவின் பாலில் சுத்திசெய்து, பசுவின் மோர் முறித்து வடிக்கட்டி அந்தத் தண்ணீரிலொரு உருண்டை கொடுக்கவும். இவ்வாறு 3 நாட்கள் கொடுக்கவும். உப்பில்லாமல் கஞ்சி வைத்துத் தெளிவையுட்கொள்ளச் சீதஜ்வரம் தீரும்.

## சர்வ ஜ்வரத்திற்கும் பாஷாண மாத்திரை

வெள்ளைப்பாஷாணம், சுண்ணாம்புத் தண்ணீரிலும், பசுவின் பாலிலும் சுத்திசெய்து ஒன்றுக்கு இரண்டு சாதிலிங்கங்கூட்டி, ஊமத்தையிலைச் சாற்றில் அரைத்துச் சிறுபயறளவு மாத்திரை செய்து இந்த மாத்திரையை இஞ்சிச்சாற்றில் இடக் குளிர் ஜ்வரந்தீரும். பனை வெல்லத்திலிடச்சர்வ ஜ்வரமுந்தீரும். பத்தியம் பசுவின்பால் கூட்டவும்.

## சீதஜ்வரத்திற்குப் பாஷாண மாத்திரை

வெள்ளைப் பாஷாணத்தைச் சிறுக நறுக்கி எருக்கம் பாலிலெட்டு நாட்கள் நனையவைத்து, ஒன்பதாவது நாள் பால்போகக் கழுவிப்போட்டு, முற்றின வேப்பம்பட்டைச் சாற்றிலரைத்துக் கடுகளவு மாத்திரை செய்து வெந்நீரிற் கொடுக்கப் பசுவின்பால் கஞ்சிவைத்துக் கொடுக்கச்சீத ஜ்வரம் தாகஜ்வரம் தீரும்.

## கப ஜ்வரத்திற்கு

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த | நாபி | சுத்திசெய்த இருவி |
| ,, | கெந்தகம் | ,, கௌரீ பாஷாணம் |
| ,, | பாதரசம் | |

இவைகளைச் சரியளவெடுத்துத் (தனித்தனியே சுத்திசெய்து) எருக்கம்பால் விட்டரைத்துக் கடுகுப் பிரமாணம் மாத்திரை செய்து முலைப்பாலில் கொடுக்கவும். உப்பில்லாக் கஞ்சி கொள்ளவும். முருங்கையிலைச் சாறு பண்ணிக்கொள்ளச் சர்வஜ்வரமும் தீரும்.

## ஜ்வரத்திற்கு மாத்திரை

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த | வத்ஸநாபி | 1பங்கு |
| ,, | லிங்கம் | 2 பங்கு |
| ,, | மனோசிலை | 4 பங்கு |
| ,, | நேர்வாளம் | 1½ பங்கு |
| | திப்பிலி | 3 பங்கு |

இவைகளைக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நன்றாகவரைத்து மிளகுப்பிரமாணமுள்ள மாத்திரைகளாக உருட்டி வைத்துக்கொண்டு, வாத ஜ்வரத்திற்கு இஞ்சிச் சாற்றிலிடவும். பித்த ஜ்வரத்திற்குச் சீரகக் கஷாயத்திலிடவும். சிலேத்ம ஜ்வரங்களுக்கு மிளகு கஷாயத்திலிடவும். ஜ்வரங்கள் தீரும்.

## தாபஜ்வர மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த வத்ஸாபி | சுத்திசெய்த சாதிலிங்கம் |
| பொரித்த வெங்காரம் | திப்பிலி |
| மிளகு | |

இவைகளைச் சமனெடுத்துக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம் பழச்சாறுவிட்டு நன்றாக அரைத்து உளுந்தளவுள்ள மாத்திரைகளாக உருட்டி வைத்துக்கொள்ளவும். தாபஜ்வரத்திற்கு முலைப்பாலிடவும். சிலேற்பன ஜ்வரத்திற்கு ஆடாதோடை இலைச் சாற்றிலிடவும்.

வாதஜ்வரமெனில் இசங்கிலை, தூதுவேளை, இம்புரல் வேர் இந்தக் கஷாயத்திலிடவும். சந்நிவாத ஜ்வரத்திற்கு இஞ்சிச் சாற்றிலிடவும். முலைப்பாலிழைத்துக் கண்களிலும் அஞ்ஜனமிடவும்.

### பாஷாண மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம் | 1 வராகன் |
| ,, நாபி | ½ வராகன் |
| கடுகரோகிணி | 1 வராகன் |
| சுத்திசெய்த நேர்வாளம் | 6 வராகன் |

இவைகளைக் கல்வத்திலிட்டுக் குப்பைமேனிச்சாறுவிட்டு நன்றாகவரைத்து உளுந்துப் பிரமாணமுள்ள மாத்திரைகளாக உருட்டிவைத்துக்கொண்டு, வாத ஜ்வரத்திற்கு கச்சந்திராய்ச் சாற்றில் கொடுக்கவும். பித்த ஜ்வரத்திற்கு முலைப்பாலில் கொடுக்கவும். குளிருக்கு மோர் காய்ச்சின நீருடன் கொடுக்கத் தீரும்.

### கௌரீபாஷாண மாத்திரை

சுத்திசெய்த கௌரீபாஷாணம், சுத்திசெய்த அரிதாரம், சுண்ணாம்புக்கல் இவைகளைச் சரியளவெடுத்துக் கல்வத்திலிட்டு, வேலிப்பருத்திச்சாறு விட்டு நன்றாக அரைத்து, உளுந்தளவுள்ள மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்திச் சிமிழில் இட்டு, நெற்பானையில் வைத்துப் பூமியில் 90 நாட்கள் இருக்கும்படி புதைக்கவும். இதில் 1 மாத்திரை எடுத்து வெற்றிலையுடன் உட்கொள்ளவும். பசுவின்பால் கஞ்சி சாப்பிடவும். கைப்பு, புளிப்பு, உப்பு இவைகளை நீக்கவும். சர்வ ஜ்வரமும் தீரும்.

### கௌரிபாஷாண மருந்து

கௌரீபாஷாணத்தை நன்றாய்ச் சுத்திசெய்து பொடிசெய்து வைத்துக்கொண்டு, 1 பணவெடை (3 குன்றி நிறை) வெற்றிலையிலே வைத்துச் சுருட்டிக்கொண்டு,

20 மிளகை வாயிலிட்டு மென்றுதின்று, அதன்மேல் சுருட்டின மருந்தைத் தின்று ஒரு சிறங்கை குளிர்ந்த தண்ணீர் குடிக்கவும். உப்பில்லாக்கஞ்சி உட்கொள்ளவும்.

**சுரத்திற்கு அர்த்தநாரீச்சுவரக் குளிகை**

சுத்திசெய்த பாதரசம் — சுத்திசெய்த சாதிலிங்கம்
,, தாளகம் — ,, அப்ரகம்
,, நாபி — ,, காரீயம்
,, மனோசிலை — ,, எருக்கம்விதை
,, பொரித்த வெங்காரம்

இவைகளைச் சமன்கூட்டிப் பாகலிலைச் சாற்றில் அரைத்துக் குகையிலிட்டுச் சீலைமண் செய்து லகுபுடமாக 1 புடம் போட்டு அதையெடுத்துச் சதுரக்கள்ளிப் பாலில் 3 நாள் அரைத்துக்கொள்ளவும். பின்பு,

சிவதைவேர், கடுகு, கடுகரோகிணி இம்மூன்றையும் சமனெடுத்து இடித்துக் கஷாயம் வைத்து, அதைவிட்டு நன்றாக 3 நாட்கள் அரைக்கவும். இதைக் குன்றி நிகர் மாத்திரையாக உருட்டி நிழலில் உலர்த்திக்கொண்டு, குளிர்ந்த தண்ணீருடன் கொடுக்கத் தாபஜ்வரம், இடது பாரிசத்திலுள்ள ஜ்வரம் முதலானவை தீரும்.

**திரிபுராந்தக ரசம்**

சுத்திசெய்த பாதரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த அப்ரகம் ஆக மூன்றும் சமபாகங்கொண்டு, கையாந்தகரைச்சாறு விட்டு நன்றாக அரைத்துக் குன்றி நிகர் குளிகை (வில்லை) செய்து உலர்த்திக் குகையிலிட்டுக் குக்குடபுடம் (1 முழநீள அகலமுள்ள புடம்) போட்டு ஆறவைத்தெடுத்து, மீன் பித்து , வெள்ளாட்டுப்பித்து, காட்டுப்பன்றிப்பித்து இவைகளில் வகைக்கு 1 ஜாமம் வீதமரைத்துக் குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்து இஞ்சிச்சாற்றிலிடச் சுரம் தீரும். மோர் சாதம் சாப்பிடவும்.

### சாம்பவீ ரசம்

சுத்தி பண்ணின ரசம்
சுத்தி செய்த கெந்தகம்
பொரிக்காரம்
ஆமணக்கம்வேர்
சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு
சுத்திசெய்த கௌரீபாஷாணம்
கடுக்காய்த்தோல்

இவைகளை சமனெடுத்துக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்றாக அரைத்து (3 நாட்கள்) உலைமூடியிலிட்டுச் சட்டிகொண்டு மூடிச்சீலைமண் செய்து குக்குட புடமிட்டு, ஆறினாலெடுத்து ஆமணக்கெண்ணெய் விட்டரைத்து, இம்மருந்திற்கு பத்திற்கொன்று மிளகு கூட்டி, மிளகு கண்டிடைக்குப் பாதி சுத்திசெய்த நாபி சேர்த்து அரைத்துப் பத்திரப்படுத்தவும். அனுபான விசேஷத்தில் கொடுக்கச் சர்வ ஜ்வரமுந் தீரும். தயிர் சோறு பத்தியம் பண்ணவும்.

### பிரதாப மார்த்தாண்ட ரசம்

| | |
|---|---|
| சுத்திசெய்த இரசம் | 1 வராகனெடை |
| சுத்திசெய்த நேர்வாளம் | 4 வராகனெடை |
| சுத்திசெய்த கெந்தகம் | 2 வராகனெடை |
| சுத்திசெய்த லிங்கம் | 8 வராகனெடை |

எருக்கம்பால் விட்டரைத்துக் குன்றிப்பிரமாணம் உருண்டை செய்து அனுபான பேதங்களில் கொடுக்கவும். சர்வ ஜ்வரமும் தீரும்.

### சுரக்குளிகை

| | |
|---|---|
| சுத்திசெய்த கௌரீபாஷாணம் | 1 வராகன் |
| சுத்திசெய்த லிங்கம் | 3 வராகன் |

இதனுடன் கௌரியைச் சுண்ணாம்பு நீரில் சுத்திசெய்து, கொம்புப்பாகல் இலைச்சாற்றிலரைத்துப் பயறளவு உருண்டை செய்து, நிழலில் உலர்த்திவைத்துக்கொள்ளவும். வெந்நீர், சுக்குக்கஷாயம், இஞ்சிச்சாறு, முலைப்பால்

இவைகளில் ஏதேனும் ஒன்றில் தக்கபடி கொடுக்க, மாறல் ஜ்வரம், தாப ஜ்வரம், சீதஜ்வரம் முதலானவை தீரும்.

### ஜ்வரத்திற்குப் பூச, வெருகங்கிழங்கெண்ணை

| | |
|---|---|
| வெருகங்கிழங்கு, தண்டு, இலை | பலம் 12 |
| குருந்தோட்டி வேர் (சித்தாமுட்டி) | பலம் 6 |

இவ்விரண்டையும் இடித்து 2 மரக்கால் சுத்தத் தண்ணீர்விட்டு, ஒரு படியாகக் காய்ச்சி,

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | படி 1 |
| பசுவின்பால் | படி 2 கூட்டிச் |
| சிறுதேக்கு | இலந்தை |
| மெழுகு | அதிமதுரம் |
| கடுகரோகிணி | பெருங்குரும்பை |

ஆக இவை 1 பலம்

| | |
|---|---|
| நன்னாரிவேர் | முத்தக்காசு (கோரைக்கிழங்கு) |
| சீதேவிச்செங்கழுநீர்(சகதேவி) | அமுக்கிராக்கிழங்கு |
| சந்தனத்தூள் | இவை 2 பலம் |

இவைகளை அரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து ஆறிச் சரீரத்தில் பூசச்சுரங்கள் தீரும்.

### சத்ததோஷச் சிகிச்சை

சுரமாதியில் நடுவில் கிரமத்தினால் அபத்தியத்தினால் ஏழுவிதமான தோஷமுண்டாம். இதில் சாத்யம் அசாத்யம் விசாரித்துக்கொண்டு, உபரிரோகானு சாரிகளும் பார்த்து விக்ருதி வேகங்களும் பார்த்து அவுஷதம் செய்யக்கடவன்.

### இதற்கு வில்வாதிக் கஷாயம்

திருந்திய வில்வமூலஞ் சிறுமூலஞ் சித்தாமுட்டி
வருந்திரி கடுகரத்தை மஞ்சிஷ்டி தேவதாரம்
பொருந்து வேப்பீர்க்குங் கண்டங் கத்திரி புதரில் கோட்ட
மருந்திவை காய்ந்த நீரால் மாறிடுந் தோஷந்தானே. (1)

(இ-ள்.) வில்வவேரா — திப்பிலிமூலம்
சித்தாமுட்டி — சுக்கு
திப்பிலி — மிளகு
சித்தரத்தை — மஞ்சிஷ்டி
தேவதாரு — வேப்பீர்க்கு
கண்டங்கத்திரிவேர் — கோஷ்டம்

இவைகளை இடித்து (வகைக்கு 1 வராகனெடை) ஒருபாத்திரத்திலிட்டு 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு அடுப்பின்மேலேற்றி எரித்து எட்டிலொன்றாக்கி வடிகட்டி உட்கொள்ளவும். தோஷ ஜ்வரங்கள் தீரும்.

### திரிகடுகாதிக் கஷாயம்

திரிகடு காடாதோடை செவ்வியஞ் சித்தாமுட்டி
வருநில வேம்பு நாங்குள் மரமஞ்சள் கடுகுரோணி
தருசிறு குறிஞ்சிவீழி செந்தொட்டிச் சாரணைத்தூ
ரெரியிடுங் கஷாயந்தன்னி லேகிடுந் தோஷந்தானே. (2)

(இ-ள்.)
திரிகடு (சுக்கு, திப்பிலி, மிளகு) — ஆடாதோடைவேர்
செவ்வியம் — சித்தாமுட்டிவேர்
நிலவேம்பு — நாங்கூழ்ப்பூச்சி
மரமஞ்சள் — கடுகுரோகிணி
சிறுகுறிஞ்சி — வீழிவேர்
செந்தொட்டிவேர் — சாறணைவேர்

இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டு 8 மடங்கு தண்ணீர்விட்டு அடுப்பின் மேலேற்றி 1/3ஆக வற்றக்காய்ச்சி, வடிகட்டிப் பருகவும். தோஷங்கள் தீரும்.

### சுரசம்

[illegible]தளை யாடாதோடை துளசிசெம்முள்ளி யிஞ்சி
தூதளை நொச்சி கண்டங்கத்திரி தானோரேழும்
போதளை சுரசந்தன்னிற் திப்பிலி பொடிதேன் சேரிற்
றீதளை சீதரோகந் தீர்ந்திடுஞ் செய்குவீரே. (3)

(இ-ள்.) தூதுவேளை இலை ஆடாதோடையிலை
துளசி செம்முள்ளி
இஞ்சி கண்டங்கத்திரி
நொச்சி

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்துச் சாறுபிழிந்து, அதனுடன் திப்பிலித்தூள், தேன் இவைகளைச் சேர்த்துப் பருகவும். சீதங்கள் தீரும்.

**கண்டாவுமுதம்**

ஆடகம் பவழங் கோஷ்டம் அக்கிராத் தேற்றாங்கொட்டை
நீடுவால் மிளகு முத்து நிம்பத்தின் விரை திராட்சம்
தேடிய யிரயில் காண்ட மிருகத்தின் சிருங்காஞ் சுக்குச்
சூடிய வெள்ளி கோரோ சனைவில்வத் தூர் திராய் வேர். (4)

வேரதிமதுர மேலம் வியன்றரு முத்திராட்சம்
சேர்தரு கிராம்பரத்தைத் திப்பிலி குங்குமப்பூ
வார்பெறு முலைப்பால் தேனில் மத்தித்து நாவில் பூச
பேர்தரு தோஷமேழும் சந்நியும் பெயர்ந்து போமே. (5)

(இ-ள்.) ஆடகத்தங்கப்பொடி பவழம்
உயர்ந்த கோஷ்டம் அக்கிராக்காரம்
தேற்றாம் வித்து வால்மிளகு
தூளையிடாத முத்து வேப்பங்கொட்டை
திராக்ஷைப்பழம் காண்டாமிருகக்கொம்பு
சுக்கு வெள்ளிப்பொடி
கோரோசனை வில்வவேர்
திராய்வேர் அதிமதுரம்
ஏலக்காய் உத்திராக்ஷம்
கிராம்பு சிற்றரத்தை
திப்பிலி குங்குமப்பூ

இவைகளைச் சமனெடுத்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டு நன்றாக 1 நாள் முழுவதும் அரைத்து நீண்ட மாத்திரையாக உருட்டி

வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது ஒரு மாத்திரை எடுத்து முலைப்பாலிலோ அல்லது தேனிலோ இழைத்து நாக்கில் பூசவும். சந்நியும் எழுவகைத் தோஷங்களும் தீரும்.

***குறிப்பு:***- காண்டாமிருகக் கொழும்பு கிடைக்கவில்லையானால் மான்கொம்பை உபயோகிக்கவும்.

### தோஷந்தீர முசுறுமுட்டைத் தைலம்

துன்பந் தோஷந் தீர்வதற்குச் சூரியிந்து சங்கினிவேர்
வம்பாமஞ்சள் கருஞ்சீரகம் வசம்பு மண்மேல்
முசுறுமுட்டை-
யன்பாங்கழஞ்சி வேப்பெண்ணெய் யாடாதோடைச்
சாறுடனே
பொன்போல்காய்ச்சி மெய்யிலிடப் பொருந்துந்தோஷம்
போய்விடுமோ. (6)

(இ-ள்.) நத்தைச்சூரி இந்துப்பு
சங்கம்வேர் மஞ்சள்
கருஞ்சீரகம் வசம்பு
முசுறுமுட்டை
இவைகள் வகைக்கு 40 குன்றிநிறை எடுத்துத் தூள்செய்து,

ஆடாதோடைச்சாறு 1 சேரும்
வேப்பெண்ணெய் 1 சேரும்
சேர்த்து ஒன்றாக்கி அடுப்பின்மேலேற்றி எரித்து பொன்னிறத்தில் இறக்கவும். இதனை உடலில் பூசத் தோஷங்கள் நீங்கும். இதுவன்றித் தைலம், நசியம், அஞ்சனம், தூபம், அவுஷதம் முதலிய பிரயோகங்கள் ஔஷதத் தொகுதியில் காண்க.

### சிரரோகக் கபால ரோகத்திற்குச் சிகிச்சை

சிரோ ரோகம்19, கபாலரோகம் 18, ஆகநோய் 37. இதில் சாத்யா சாத்யம் அறிந்து அனுசரிரோகம் வலுவறிந்து சிகிச்சை செய்யவும்.

### ஆக்கிராணத்தூள்

தாக்குஞ் சாதிக்கிராம்பு சைந்தவஞ்
சூக்க வோமந் துடியொடு பத்திரி
ஆக்கிராண மதாகக் கொடுத்திடில்
போக்குமே சிர ரோகத்தைப் போக்குமே. (1)

| (இ-ள்.) | சாதிக்காய் | கிராம்பு |
|---|---|---|
| | இந்துப்பு | ஓமம் |
| | லவங்கப்பத்திரி | |

இவைகளை வகைக்கு ஒரு வராகனெடை எடுத்து (இளவறுப்பாக வறுத்து) தூள் செய்து, மூக்கிலிட்டு ஊதவும்.

### நசியம்

சாறணைக் கிழங் கோடு சைந்தவம்
காரணக் கரில்சுக்குக் கடற்பழம்
பூரணப் பய்ய மூக்கிற் பிழிந்திடத்
தாரணிச் சிர ரோகந் தவிருமே. (2)

| (இ-ள்.) | சாறணைக்கிழங்கு | இந்துப்பு |
|---|---|---|
| | மிளகு | சுக்கு |
| | சமுத்திராப்பழம் | |

இவைகளைச் சிறிது தண்ணீர் சேர்த்து நசுக்கி வெள்ளைத் துணியில் வைத்து மூக்கில் பிழியவும். சிரோவியாதிகள் தீரும்.

### பீனசத்திற்கு ஆடாதோடை எண்ணெய்

ஆடாதோடைப் பசுமஞ்சளகத்தி நொச்சியிலைச்சாறு
வாடாக் கடுகு வெள்ளுள்ளி மரிசஞ்சுக்கு பிடலவணம்
நாடா மோருங் கலந்தெரித்த நல்வேப்பெண்ணெய் நசியம் விடக்
காடுபோடும் பீனிசமும் கதித்தக் கபால ரோகமுமே. (3)

(இ-ள்.) ஆடாதோடைச்சாறு அகத்திக்கீரைச்சாறு
பசுமஞ்சள் சாறு நொச்சிச்சாறு
இவைகளை ஒன்றுகலந்து (வகைக்கு 1 சேர்)

கடுகு பூண்டு
மிளகு சுக்கு
கறியுப்பு

இவைகளை வகைக்கு (½ பலம்) வீதமெடுத்து இடித்து மோர்விட்டு நன்றாகவரைத்து, இவைகளுடன் வேப்பெண்ணெய் 5 சேரும் விட்டு, அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கி வடிக்கட்டி பத்திரப்படுத்தவும். இதில் 2 துளிகள் எடுத்து மூக்கில் நஸ்யமிடவும். பீனிசம், கபாலரோகம் முதலானவை நீங்கும்.

### கபாலரோகம், மண்டைச்சூலைக்கு நஸ்யம்

ஆநெய படிகா லீரவள்ளி யதிமதுரம் புளிவிரைத்தோல்
தானே துருசு கருஞ்சீரகம் சாற்றுஞ் சீரகம் வகை கழஞ்சு
காணே குழலாய் முதிர்ந்த பதங் கண்டு வடித்து நஸ்யம்
விடத்
தானே கபால ரோக மண்டைச் சூலை தீருங் கண்டீரே. (4)

(இ-ள்.) பசுவின்நெய் ¼ படியுடன்
பூண்டு அதிமதுரம்
புளியங்கொட்டைத்தோல் துருசு
கருஞ்சீரகம் சீரகம்

இவைகளை வகைக்கு 40 குன்றி நிறையெடுத்துத்தூள் செய்து குழப்பி, அடுப்பின்மேலேற்றி எரித்துப் பதத்தில் வடிக்கவும். இதனால் நஸ்யமிட்டுவரக் கபால ரோகம், மண்டைசூலை இவை தீரும்.

### சடாத்தலை நஸ்யம்

இரதங் கெந்தகஞ் சாதிலிங்க மினியரி தாரஞ் சங்குமுடி
வருகுந் திருக்கம் பாஷாண மருவீர் வூளிப் பட்டி விட்டுச்

சரசமிதுவே திரியாக்கித் தறுகா நெய்ய தனில்வடித்து
விரஸம் பெறவே நாசிதன்னில் விடவேப் பீனிசம்
வேரறுமே. (5)

(இ-ள்.) சுத்திசெய்த பாதரசம் சுத்திசெய்த கெந்தகம்
சுத்திசெய்த லிங்கம் சுத்திசெய்த தாளகம்
பொரித்த சங்கு குந்திருக்கம்
சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம்

இவைகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்து, ஒரு பாட்டில் ஒரே சீராகப்பரப்பி, திரியாகச் செய்து, பசுவின் நெய்யில் தோய்த்துக் கொளுத்தவும். திரி எரிய எரிய மேலும் மேலும் நெய்விட்டுச் சுடரிலிருந்து சொட்டும் நெய்யைப் பத்திரப்படுத்தவும். இந்நெய்யை நசியமிடப் பீனிசங்கள் அடியோடு தீரும்.

### நஸ்யம்

தேங்காநெய்யிற் றிரள்பச்சைக் கர்ப்பூரம்
பாங்காய்ப் பொடித்திட்டுப் பாத்திரமாய் - பூங்குயிலே
சுடப்பண்ணி மூன்று நாள் துண்ட மதனோடு
விடக் கபால பிணி போமென். (6)

(இ-ள்.) தேங்காயெண்ணையுடன் பச்சைக்கர்ப்பூரம் பொடித்துப்போட்டு வைக்கவும். வேண்டும்போது இதில் ஒரு சிறு கரண்டியளவெடுத்துச் சுடப்பண்ணி மூக்கிலிட்டு ஊதவும். கபாலப்பிணிகள் தீரும்.

### கபாலரோகத்திற்கும் மண்டைச்சூலைக்கும் மருந்து

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 2 படி |
| நறுநெய் | 2 படி |
| ஆமணக்கெண்ணெய் | 2 படி |
| தேங்காயெண்ணெய் | 2 படி |

இவைகளை ஒன்றுகலந்து,

| | |
|---|---|
| வெந்தயம் | திப்பிலி |
| சீரகம் | கருஞ்சீரகம் |
| அதிமதுரம் | |

இவைகள் வகைக்கு பலம் 1½ வீதமெடுத்து நுணுக்கிப் பதத்தில் வடித்து நாசியில், காதிலிட, முழுக, மண்டைச்சூலை, கபாலரோகம் முதலியவைவை தீரும்.

### நஸ்யம்

| | |
|---|---|
| நறுநெய் | ½ படி |
| கம்பு துளைக்கிற வண்டு (இறகு நீக்கவும்) | 3 |
| எலுமிச்சம்பழச்சாறு | ½ படி |

இவைகளைக் கம்பிப் பதமாய்க் காய்ச்சி நசியமிட மண்டை வியாதி தீரும்.

### புகை

| | |
|---|---|
| சாதிலிங்கம் | பலம் 1 |
| துத்தம் | பலம் 1 |
| துருசு | பலம் ¼ |
| வெள்ளைக்குந்துருக்கம் | பலம் 1 |

இவைகளையெல்லாம் பழச்சாறுவிட்டு அரைத்துச் சீலையிலூரட்டி உலர்த்தி உப்பு, புளி தவிர்த்து 9 பொழுது புகை நாசியிலொக்கப் பீனிசம், கபால ரோகந் தீரும்.

### குறுந்தோட்டித் தைலம்

| | |
|---|---|
| குறுந்தோட்டி (சிற்றாமுட்டி) வேர் | 4 பலம் |
| வேங்கைச்சிறாய் | 3 பலம் |
| வில்வவேர் | 3 பலம் |
| சீந்திற்றண்டு | 3 பலம் |
| கடுக்காய் | 2 பலம் |
| நெல்லிப்பருப்பு | 2 பலம் |
| தான்றிக்காய் | 2 பலம் |
| நன்னாரிவேர் | 1 பலம் |

இதுவெல்லாம் 20 படி தண்ணீரில் கஷாயமிறக்கி 3 படியானால் ஒருபடி நல்லெண்ணெயிலிட்டுக்

| | |
|---|---|
| கையாந்தகரைச்சாறு | படி ¼ |
| செருப்படிச்சாறு | ,, |
| அவுரிச்சாறு | ,, |
| மேனிச்சாறு | ,, |
| பழச்சாறு | ,, |
| இளநீர் | படி 1¼ கூட விட்டு, |

அதற்குமேல் கற்கம்,

| | |
|---|---|
| ஏலம் | இலவங்கம் |
| வெட்பாலையரிசி | தேவதாரு |
| கருஞ்சீரகம் | |

வகைக்கு வராகனெடை 1 நல்லசந்தணம் பலம் 1

இதுவெல்லாமரைத்துக் கரைத்துக் காய்ச்சி இறுகின பதத்தில் வடித்து முழுகப் பீனிசம், கபாலக்கரப்பான், மண்டைச்சூலை, நீர்ப்பாய்ச்சல் தீரும்.

## கையாந்தகரை எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| கையான்சாறு | 1படி | நத்தைச்சூரிச்சாறு | படி 1 |
| வேப்பம்பட்டைச்சாறு | ,, | குறுந்தோட்டிச்சாறு | படி ½ |
| பூலாத்திச்சாறு | படி½ | நல்லெண்ணெய் | படி 2 |
| பசுவின்பால் | படி 2 | | |

இதற்குக்கல்கம்.

| | |
|---|---|
| பச்சிலை | கச்சோலம் |
| இலாமிச்சம்வேர் | வெட்டிவேர் |
| சந்தனத்தூள் | ஏலக்காய் |
| இலவங்கப்பத்திரி | கிராம்பு |
| செண்பகமொட்டு | குந்திருக்கம் |

இவைகளை வகைக்கு வராகனெடை 3 எடுத்து, அரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து முழுகத் தலை வியாதி, தலைவலி, தலைகனப்பு, தலைநோக்காடு இவையெல்லாந் தீரும்.

### கபால குஷ்டத்திற்குக் கையாந்தகரை எண்ணெய்

கையாந்தகரை
தூதுவேளை
அவுரி
வல்லாரை
புளியிலை
வேப்பிலை
பேய்ப்பீர்க்கிலை
சங்கிலை
நத்தைச்சூரி
சீந்திலிலை
இலைக்கள்ளியிலை

இவைகளின் சாறு வகைக்கு ¾ உழக்கு

நல்லெண்ணெய் 2 படி
பசுவின்பால் 2 படி
மிளகு ¼ படி
கடுகு ¼ படி
கடுக்காய் 20
தகரைவிரை ¼ படி
விளாவரிசி
அதிமதுரம்
கார்போகவரிசி
கோஷ்டம்
நன்னாரிவேர்
மஞ்சள்
குந்துருக்கம் இவையோரொன்றுக்கு பலம் 2

இவைகளையரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்து இந்த எண்ணெயைத் தலையில் வார்த்து 4 நாழிகை கிடக்கவிட்டு முழுகவும். இதனையே உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் உபயோகிக்கவும். நஸ்யம் பண்ணவும். கபாலகுஷ்டம் தீரும்.

### பிருங்காமலகத் தைலம்

நல்லெண்ணெய் 2 படி
பசுவின்பால் 2 படி
நெல்லிக்காய்ச்சாறு 2 படி
முருங்கையிலைச்சாறு 1 படி
கையாந்தகரைச்சாறு 1 படி
கற்றழைச்சாறு 1 படி

இதற்குக் கற்கம்

சுக்கு 1 பலம்
வெந்தயம் ½ பலம்
மிளகு ½ பலம்
சந்தனம் ½ பலம்
செஞ்சந்தனம் 1 பலம்
அதிமதுரம் 1 பலம்
செங்கதாரிப்பட்டை மாங்காயளவு

இதுவெல்லாம் அரைத்துக் கரைத்துப் பதத்தில் வடித்திறக்கி 3 நாளைக்கு ஒருக்கால் முழுகவும். உப்பு, புளி தவிர்க்கவும். மண்டைநோய் தீரும்.

**அரளித்தைலம்**

துத்தம் ¼ பலம் — துரிசு ¼ பலம்
கெந்தகம் ¼ பலம் — வெள்ளைப்பாஷாணம் ¼ பலம்
இரதம் பலம் — அரளிவேர்
அரளிப்பழுப்பு — அரளிக்கொழுந்து
அரளி அரும்பு
இவையோரொன்று நெல்லிக்காயளவு

இதற்கு எண்ணெய் 1 படி

இதற்குக் கற்கம் பொடித்துப்போட்டு மெழுகுபதத்தில் வடித்திறக்கவும். எண்ணெய் தேய்த்து 4 நாழிகை கிடக்கப்பண்ணி முழுகவும். 8 நாட்களுக்கு 2 தடவை முழுகவும். உப்பு, புளி தவிர்க்கவும். மண்டைச்சூலை, மண்டைக்கரப்பான், காபலகுஷ்டம் முதலான வியாதிகள் தீரும்.

**பாலாகுடூசித் தைலம்**

சித்தாமுட்டிவேர் — வில்வவேர்
வேங்கைச்சிராய் — சீந்திற்கொடி

இவை 10 பலம். இவைகளையிடித்து எட்டுமரக்கால் தண்ணீர்விட்டுக் காய்ச்சி 8 படியானால் அதில் நல்லெண்ணைய் 1 படி. பசுவின் பால் படி 4 எண்ணெயில் விடவும். இதற்குக் கற்கம்.

ஏலம் — லவங்கம்
அதிமதுரம் — கோஷ்டம்
லவங்கப்பத்திரி — அரத்தை
கடுக்காய்த்தோல் — தான்றிக்காய்
நெல்லிக்காய் — சடாமாஞ்சில்

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | சந்தனச்சிராய் |
| அகில்சிராய் | தேவதாரு |
| கூகைநீர் | திராக்ஷைப்பழம் |
| பேரீச்சம்பழம் | |

இவை ஒவ்வொன்று 4 வராகனெடை நிறுத்துப் பொடிசெய்து அரைத்துக் கரைத்துக் காய்ச்சிப் பதத்தில் வடித்துக்கொண்டு தலையில் தேய்த்து ஒருசாமம் இருக்கவிட்டு முழுகவும். இதில் உழக்கெண்ணெய் எடுத்து இந்த எண்ணெயில் குங்குமப்பூவுங் கர்ப்பூரமும் கலந்து நாசியில் நசியம்விட நாசியில் சிராய் விழுகிறது நிற்கும்.

லவங்காதித் தைலம்

| | |
|---|---|
| கிராம்பு | 1 வராகனெடை |
| பச்சைக்கற்பூரம் | ½ வராகனெடை |
| சிறுதேக்கு | ,, |
| சந்தனத்தூள் | ,, |
| நெல்லிப்பருப்பு | செண்பகமொட்டு |
| இலாமிச்சம்வேர் | கையாந்தகரைவேர் |
| சிறுகீரைவேர் | வட்டத்துத்திவேர் |
| குறுந்தோட்டிவேர் | காட்டுப்பசளைவேர் |

}வைகளும் வகைக்கு ½ வராகனெடை வீதமெடுத்து இடித்து எலுமிச்சம்பழச்சாறு முலைப்பால் இவைகளை விட்டரைத்துப் பசுவின் நெய்யாகிலும், நல்லெண்ணெயாகிலும் வகைக்கு 1 படி எடுத்துப் பதத்தில் காய்ச்சி வடித்துக்கொண்டு தலையிலும் வார்த்து நாசியிலும் நிறுத்துத் தலைநோவு, மண்டைவியாதி மாறும்.

**குறிப்பு:-** நசியமிட நெய்யையும், தலைக்குத் தேய்க்க எண்ணெயையும் உபயோகிக்கலாம்.

## திருமேனியாதித் தைலம்

குப்பைமேனி பருத்தியிலை கூறுமிளநீர்ச் சாறு நாழிக்
கைக்குள் ளடங்கும் பால் தேசிப் பழத்தின் சாறு படியுந்தான்
வைக்குஞ் செந்நெல் வயல் நண்டு வாகாயிருபத்
தொன்றதுவு
மொக்கவிடித்துக் கஷாயமதா யொருநாளூறப்
போடுவதே. (1)

போடேதார மரிதாரம் போற்றுங் காந்தந் துரிசு துத்தம்
கோடா வசம்பு வேம்பாடல் கூட்டுமிரத மிலிங்கமுடன்
நாடாக்காகம் வெந்தயமும் மாதளையுடனே திப்பிலியும்
வாடாக் கௌரி வசுவாசி மாயக்கிராம்பு சாதியுடன். (2)

உடனே பூலாச் செஞ்சந்த மோதுகடுக்காய் மரிசு கோட்டம்
அடவே யோரொன்றொரு கழஞ்சா யதிலோர் நாழி
நல்லெண்ணெய்
திடனாய் வடித்து முழுகிடிற் றீரு மண்டைச் சூலையுடன்
அடலார் பீனிசஞ் சிராய் வீழ்தல் அதிகநோவு நின்றிடுமே. (3)

(இ-ள்.) குப்பைமேனியிலைச்சாறு    பருத்தியிலைச்சாறு
இளநீர்    எலுமிச்சம்பழச்சாறு
இவைகள் வகைக்கு 1 படி

வயல் நண்டு 21 இடித்து எடுத்தச் சாற்றையும் சேர்த்து ஒருநாள் வைக்கவும் இதனுடன்

| | |
|---|---|
| ராவியவெள்ளி | சுத்திசெய்த தாளகம் |
| சுத்திசெய்த காந்தம் | சுத்திசெய்த துரிசு |
| சுத்திசெய்த துத்தம் | சுத்திசெய்த வசம்பு |
| வேம்பாரம்பட்டை | சுத்திசெய்த லிங்கம் |
| மாதுளையோடு | அக்கராக்காரம் |
| வெந்தயம் | சுத்திசெய்த கௌரீபாஷாணம் |
| திப்பிலி | கிராம்பு |
| இலவங்கப்பத்திரி | பூலாவேர் |
| சாதிக்காய் | கடுக்காய்த்தோல் |

செஞ்சந்தணம் கோஷ்டம்
மிளகு

இவைகளை வகைக்கு 40 குன்றி நிறையெடுத்து இடித்து ஏதேனும் ஒரு சாறுவிட்டு நன்றாகவரைத்து, நல்லெண்ணெய் 1 படியும் விட்டு, ஒன்று கலந்து எரித்துப் பதத்தில் இறக்கி வடிகட்டிக்கொண்டு, தலைமுழுகிவர, மண்டைச்சூலை, பீனிசம், சிராய் வீழ்தல், நாசிவலி முதலானவை தீரும்.

# ★நேத்திர ரோக சிகிச்சை

## இரத்னாதி மாத்திரை

நவமணி யேழுலோகம் நற்கோடு சோகி பீங்கா
ணிவுளியின் பல்லு மாவி னினியபல் நாயின்பல்லுங்
கவையடி மேதிப்பல்லுங் கமடத்தினோடு பன்றி
முவையுரு கோடு நன்னீர் முதலையொட் டகையின்
பல்லே. (1)

கலையின் கொம்பு ருத்ராட்சங் காளைப்பல்
கழுதைப்பல்லும்
நலமுறு பீதரோணி நறுந்துத்தந் துரிசு நன்றாங்
குலவிய சந்தந்தாரங் கோட்டங் கோரோசனையிந்து
இலகிய சீனக்கார மினியமுக் கடுகு கோட்டம். (2)

திரிபலை தேற்றாங்கொட்டை சீரமோரிதழின் மூல
முறுவது சமனாய்க்கூட்டி யொன்றதாய்க் கையான்சாறு
இரு மெலுமிச்சஞ் சாற்றி லேழுநாளூறவைத்து
மறுபடி கோழிமுட்டைச்சலத்தை வார்த்தரைத்துக்
கொள்ளே. (3)

கொண்டதோர் மருந்து நன்றாய் குறுகி நீண்டிடாத வண்ண
உண்டை செய் திருமருங்குஞ் சுழிவிழ வுறந்திரட்டி

---

★இங்கு கூறப்படும் நேத்திரரோக சிகிச்சை முறைகள் நாகமுனிவர் நயனவிதி இருநூறு என்ன புத்தகத்தில் உள்ளன.

*மண்டலம் நிழலுலர்த்தி வளர்கையான் பொன்னாங்காணி*
*ஒண்டொடி முலைப்பால் நெய்தே னிவையினி*
*லுரைத்துப்போடே. (4)*

*(இ-ள்.)*

| | |
|---|---|
| நவரத்தினங்கள் | ஏழுவகை உலோகங்கள் |
| நல்லகோடுடைய சங்கு | பீங்கான் துண்டு |
| குதிரைப்பல் | மாட்டுப்பல் |
| நாயின்பல் | எருமைப்பல் |
| ஆமையின் ஓடு | பன்றிப்பல் |
| முதலைப்பல் | ஒட்டகப்பல் |
| மான்கொம்பு | ருத்ராக்ஷம் |
| காளைமாட்டுப்பல் | கழுதைப்பல் |
| பீதரோகிணி | துத்தம் |
| துருசு | சந்தனத்தூள் |
| தேவதாரம் | கோஷ்டம் |
| கோரோசனை | இந்துப்பு |
| சீனாக்காரம் | திரிகடுகு |
| கோஷ்டம் (வெள்ளை) | திரிபலா |
| தேற்றாங்கொட்டை | சீரகம் |
| ஓரிலைத்தாமரை வேர் | |

இவைகளைத் தனித்தனியே சரியெடை எடுத்து இடித்து ஒரு பாத்திரத்திலிட்டுக் கையாந்தகரைச் சாற்றில் 7 நாட்களும், எலும்பிச்சைச் சாற்றில் 7 நாட்களும் ஊறவைத்துக் கல்வத்திலிட்டு, கோழி முட்டை வெள்ளைக்கருவை விட்டு நன்றாக அரைக்கவும்.

விழுதைக் கையிலெடுத்துத் தண்ணீர் விட்டுத் தேய்த்தால் திப்பியாக வரக்கூடாது. அவ்வளவு மிருதுவாக அரைக்கவும். பின்னர் அதிக நீளமாக இல்லாமலும், குட்டையாக இல்லாமலும், நடுத்தர அளவில் உருட்டி இரு நுனிகளும் குழைவுள்ளதாகச் செய்து 45 நாட்கள் நிழலில் உலரவைக்கவும்.

கண்ணோய்களுக்குக் கையாந்தகரை, பொன்னாங் காணி, முலைப்பால், தேன், நெய் இவைகள் ஏதேனும் ஒன்றில் உரைத்துப் பயறளவு கண்களிலிடவும். கண்ணோய்கள் தீரும்.

குறிப்பு:- நவரத்னங்களாவன:- நீலம், வைடூரியம், கோமேதகம், புஷ்பராகம், வைரம், முத்து, பவழம், பச்சை, சிவப்பு (மாணிக்கம்) என்பன. ஏழு உலோகங்களாவன: தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், வெங்கலம், பித்தளை என்பன.

**நேந்திர காசம், படலத்திற்குச் சங்காதி மாத்திரை**

சங்கு சுக் கொடு மிளகு திப்பிலி தார மோடதி மதுரமும்
புங்கம் வித்தொடு ரோகிணி புதிய துத்த மனோசிலை
யங்கரைப்பது நந்தி பத்திரிச் சாறு தேனில வாவியே
கங்குல் பற்றிய விழியி லெழுதிடக் காசமே படலம் நாசமே.

| | |
|---|---|
| (இ-ள்.) பொரித்த சங்கு | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| ராவியவெள்ளி | அதிமதுரம் |
| புங்கம்விதை | பீதரோகிணி |
| துத்தம் | மனோசிலை |

இவைகளைச் சமனெடுத்து இடித்துக் கல்வத்திலிட்டு, நந்தியாவட்டைப் பூச்சாறு விட்டு நன்றாக அரைத்து நீண்ட மாத்திரைகளாகத் திரட்டி வைத்துக்கொள்ளவும். வேண்டும்போது தேனில் இழைத்து ஒரு பயறளவு வீதம் இருகண்களிலும் இடவும். இருண்ட கண்கள், காசம், படலம் முதலானவை நீங்கும்.

**கண்ணோய்களுக்குக் கையாந்தகரைக் குழம்பு**

கையாந்தகரை நெல்லிக்காய் கமலவளையங் காணியுடல்
தொய்யில்பூளை சீதேவி துலங்குஞ் சாறொன்
றொருபடிகேள்

நெய்யார் சத்த மகில்தாரம் நெல்லிதான்றி கடுதேற்றான்
உய்யும் வெட்டி லாமிச்சு ஒக்கச் சமன்கொண்
டொன்றாக்கே. (6)

இனியசுரசத் துடன்கலந்து இளநீர் மடல்நீர் சரிகூட்டிக்
கனியக்காய்ச்சிட் டுளாயுமதிற் கருதும் பீதரோ கணிதுத்த
முனியுஞ் சீனிக் காரமுடன் முனியுந் துரிசொன் றோர்கழஞ்சு
நனிசேர் தேனிவிட் டுளாவியபின் நவிலும்பொடியை
மேல்தூவே. (7)

தூவிப்பரணி தனிலிட்டுச் சொன்னான் விழியலெழுதிவரக்
கோவித்தெழுத்த காயமுடன் கூடும்புகைச்ச லுட்டணமுங்
காவிப் பிணைக்கண் மடமானே! கண்ணி லுளதோ ஷந்தீரும்
பாவித் திதனைச் செய்யுமென்று பகர்ந்தார் மறையை
யுணர்ந்தோரே. (8)

(இ-ள்.) கையாந்தகரைச்சாறு நெல்லிக்காய்ச்சாறு
தாமரையிலைச்சாறு பொன்னாங்காணிச்சாறு
புடலையிலைச்சாறு சிறுபூளைச்சாறு
சீதேவிச்செங்கழுநீர்ச்சாறு

இவைகள் வகைக்கு ஒரு படி எடுத்துக் கலந்து

| | |
|---|---|
| சந்தனத்தூள் | அகில்கட்டை |
| தேவதாரம் | நெல்லிவற்றல் |
| தான்றித்தோல் | கடுக்காய்த்தோல் |
| தேற்றான்வித்து | வெட்டிவேர் |
| இலாமிச்சம்வேர் | |

இவைகளை (வகைக்கு 1 பலம்) வீதமெடுத்து இடித்து, முன் சாற்றுடன் கலந்து, இதற்குச் சரியளவு இளநீர், தென்னை மட்டைச்சாறு இவைகளையும் கூட்டி அடுப்பின் மேலேற்றி, நன்றாக வற்றிக் குழம்பு பதமாக வரும்போது,

| | |
|---|---|
| பீதரோகிணி | சுத்திசெய்த துத்தம் |
| சீனக்காரம் | சுத்திசெய்த துருசு |

இவைகளையும் (வகைக்கு 1 வராகனெடை வீதம்) தூள்செய்து குழம்பிலிட்டு ஆறியபின் தேன் வேண்டிய அளவு சேர்த்துக் குழப்பி வைத்துக்கொள்ளவும். இதனையொரு பீங்கான் சாடியில் பத்திரப்படுத்திக் கண்களில் பயற்றம் பருப்பளவு இட்டுவரக் கண் புகைச்சல், உஷ்ணம் முதாலன தோஷங்கள் தீரும்.

## படோலாதிக் கிருதம்

சொல்லும் பேய்ப் புடல்கொடுப்பை தூயவல்லாரை காணி
நல்லபூ சனிக்காய் வேளம் கரியநீர் வள்ளித் தாழை
வல்லவென் ளெரிக்காய்நல்ல மாதளம் பழச்சம் பீரம்
வெல்லவே யொன்றுநாழிச் சாறது விறைவக் கூட்டே. (9)

குமரிவேர் சிற்றாமுட்டிக் கோவையின் றண்டு முத்தங்
கமுகுவேர் வனசவேருங் கருந்துளாய் தேவிவேரும்
நமதுசெங் கழுநீர்மூலம் நன்னாரி சீந்தில் வேலி
அமரவோ ரொன்றுபத்துப் பலமெட் டொன்
றாகக்காய்ச்சே. (10)

காய்ச்சுமன் னீருஞ் சாறுங் கலந்துநெய் நாழிவிட்டுப்
பீச்சிடும் ஆவின்பால்நால் படிவிட்டுப் பேசக்கேளாய்
வாச்சநற் சந்தந்தாரம் மதுரஞ்செங் கழுநீர் கோஷ்டம்
கூச்சநற் கூகைநீறும் குலவிய கிராம்பு சாதி. (11)

சாதிப்பத் திரியேயேலஞ் சண்பகம் குங்குமப்பூப்
பேதித்தச் சிவதை ரோணி பேசுங்கற் பூரம்பத்திரி
தாதுற்ற மகரப்பூவுஞ் சாற்றும்பே ரீந்துமுந்திரி
மூதுற்ற கழஞ்சோறொன்று யிவைவெந்துச் சீனிதூவே. (12)

காலமே கடுகினோடு கரண்டிநாற் பதுநாட்கொள்ளச்
சாலவே பித்தரோகந் தலைகிறு கிறுப்பினோடு
மூலவுட் டினங்கண்ணோவு மொழிந்திடுங்காய மாறு
மேலுநீர்ப் பாய்ச்சல் கண்ணிலநேகநோய்
விரைந்துபோமே.(13)

தன்-2 வந்திரி-20

(இ-ள்.) பேய்ப்புடல்சாறு கரிசலாங்கண்ணிச்சாறு
வல்லாரைச்சாறு பொன்னாங்கண்ணிச்சாறு
பூசினிக்காய்ச்சாறு தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு
தாழைமட்டைச்சாறு வெள்ளொரிக்காய்ச்சாறு
மாதளம்பழச்சாறு எலுமிச்சம்பழச்சாறு

இவைகள் வகைக்கு ஒரு படி

கத்தாழைவேர் சிற்றாமுட்டிவேர்
கோவைத்தண்டு கோரைக்கிழங்கு
பாக்கின்வேர் தாமரைக்கிழங்கு
கருந்துளசி சகதேவிவேர்
செங்கழுநீர்க்கிழங்கு நன்னாரிவேர்
சீந்தில்கொடி வேலிப்பருத்திவேர்

இவைகளை வகைக்கு 10 பலம் வீதமெடுத்து இடித்து ஒரு மூடாவிலிட்டு, 8 மடங்கு சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்றவைத்து முன் சாற்றுடன் கலந்து,

பசுவின்நெய் 5 சேரும் (1 படி)
பசுவின் பால் 20 சேரும் (4 படி)

விட்டு அடுப்பில் வைத்து கொதிக்கும்போது,

சந்தனத்தூள் தேவதாரம்
அதிமதுரம் செங்கழுநீர்க்கிழங்கு
கோஷ்டம் கூகைநீர்
கிராம்பு சாதிக்காய்
சாதிப்பத்திரி ஏலக்காய்
சண்பகமொட்டு குங்குமப்பூ
சிவதைவேர் கடுகரோகிணி
பச்சைக்கர்ப்பூரம் லவங்கப்பத்திரி
திராக்ஷைப்பழம் பேரீச்சங்காய்

இவைகளை வகைக்கு 40 குன்றியெடை எடுத்து, அதனுடன் போட்டுப் பக்குவப்படுத்தி இறக்கவும். பின்னர்

இந்நெய்யுடன் வேண்டிய அளவு சீனி சேர்த்துக்கொள்ளவும். தினந்தோறும் காலை நேரங்களில் இந்த நெய்யைக் கடுகுடனே உட்கொள்ளவும். பித்தரோகம், கிறுகிறுப்பு, மூலச்சூடுகள், கண்ணோய்கள், கண்ணீர் பாய்ச்சல் முதலானவைகள் 4 நாட்களுள் தீரும். உடம்பும் பலப்படும்.

### பிருங்காலகத் தைலம்

*சொல்லும் நெல்லிக் காய்ச்சாறு கையான்சாறு*
*சல்லிசேர் கமலவேரின் சாறுடன் கொடுப்பைச்சாறும்*
*புல்லுபேய்ப் புடலின்சாறும் பொருந்துநற் கோவைச்சாறு*
*நல்லெலு மிச்சஞ்சாறு நவிலும்பா விளநீரெண்ணெய். (14)*

*இவையிங்க னுரைத்ததெல்லா மெண்ணெய்க்கு நாலுகூட்டி*
*நவையில்லா மதுரந்தாரம் நாகணங் கோட்ட மேலஞ்*
*சவையுள பேரீந்துமுந்திரி சந்தனந் தகரம்பச்சை*
*நவையுறச் சமனாங்கூட்டி நலம்பெற*
*வடித்துக்கொள்ளே. (15)*

*கொண்டதோர் தைலமூன்று நாழிகைக் குறைந்திடாதே*
*மண்டலஞ் சிரசிற்றப்பி மாலையில் முழுகுவோர்க்குப்*
*பண்டைநோய் கண்ணினுள்ளே பகர்ந்திடுங் காயம்போக்கு*
*மண்டரு மறியச் சொன்னோ மருமறை நூலையாய்ந்தே. (16)*

*(இ-ள்.)*

| | |
|---|---|
| *நெல்லிக்காய்ச்சாறு* | *கையாந்தகரைச்சாறு* |
| *தாமரைக்கிழங்குச்சாறு* | *பொன்னாங்காணிச்சாறு* |
| *பேய்ப்புடல்சாறு* | *கோவையிலைச்சாறு* |
| *எலுமிச்சம்பழச்சாறு* | *பால்* |
| *இளநீர்* | |

இவைகள் வகைக்கு 4 படியும், சுத்தமான நல்லெண்ணெய் 1படியும் சேர்த்து ஒன்றாக்கி,

| | |
|---|---|
| அதிமதுரம் | தேவதாரம் |
| நாகணம் (புலிநகம்) | கோஷ்டம் |

ஏலக்காய் பேரீச்சம்பழம்
திராக்ஷைப்பழம் சந்தனத்தூள்
தகரைவிரை

இவைகளை வகைக்கு (½ பலம்) வீதம் எடுத்து அரைத்துச் சாறுகூட்டிய எண்ணெயுடன் குழப்பி எரித்துப் பதத்தில் இறக்கி வடிகட்டிக்கொள்ளவும். பின்னர் இதனுடன் பச்சைக் கற்பூரம் கூட்டிப் பத்திரப் படுத்தவும். இந்த எண்ணெயைத் தலையில் தேய்த்துக்கொண்டு 3 நாழிகை (சுமார் 1¼ மணி நேரம்) ஊறவைத்துச் சாயங்கால வேளையில் ஸ்நானம் செய்யவும். கண்ணோய்கள் பலவுந்தீரும்.

அஸன வில்வாதித் தைலம்

வில்லைவே ரிருவேலி யமுக்கிராவேர்
வேங்கையின்றன் வயிரம் வெட்டி
நல்லகுறுந் தோட்டியின்வேர் குமரிவேரும்
நன்னாரி வேர்வனச வளையம்பத்துச்
சொல்லிலொன்று பலம்பத்துத் தண்ணீர்தூணித்
தூளாகத் தரித்திடித்துச் சுருளக்காய்ச்சி
முல்லைநகை மானேகேள்! குறுணியானால்
மூலிகைபொன் னாங்காணி இளநீர்பாலே. (17)

ஆம்பலுடன் செங்கழுநீர்க் கிழங்குநெய்த
லாமலகக் கனிதாழை விழுதினொடு
நாம்புகன்றோம் சம்பீரப் பழத்தினோடு
நாழிச்சா றிவையொன்று யெண்ணெய்நாழி
சோம்புபடா திவைகூட்டித் தேவதாரந்
துலங்குகோட்ட மாஞ்சிட்டி சொல்கிராம்பு
காம்புரளகைமானே! மஞ்சட்டிசாதி
கன்னார்சண் பகமொட்டுக் கருதிக்கொள்ளே. (18)

இலவங்கந் திரிகடுகு திப்பிலிகற்
பூரமிசைந்த மகரப்பூப் புழுகுசட்டங்
குலவுகிளி யூரல்பட்டை கஸ்தூரிமஞ்சள்
குங்குமம் அதிவிடையங் கூடவொன்று

பலமொன்று சமன்கூட நாழியெண்ணெய்
　　பரிந்தவோர்பலமரைத்துப் பாங்காய்க்காய்ச்சி
நலமுறவே முழுகிவரக் கண்ணிற் றோன்றும்
　　நாலிரண்டு காசமது நாசங்காணே. (19)

(இ-ள்.) வில்வவேர் வெட்டிவேர்
அமுக்கிராக்கிழங்கு வேங்கைமரவயிரம்
இலாமிச்சம்வேர் குறுந்தோட்டிவேர்
கற்றாழைவேர் நன்னாரிவேர்
தாமரையிலைச்சுருள்

இவைகளை வகைக்கு 10 பலம் வீதமெடுத்து நறுக்கி, ஒரு பாத்திரத்திலிட்டு 4 மரக்கால் சுத்த ஜலம் விட்டு, அடுப்பின் மேல் வைத்து 1 மரக்காலாக வற்றவைக்கவும். இதனையிறுத்து,

பொன்னாங்காணிச்சாறு ஆம்பல்சாறு
இளநீர் செங்கழுநீர் கிழங்குச்சாறு
பசுவின்பால் நெய்தல் கிழங்குச்சாறு
நெல்லிக்காய்ச்சாறு தாழை விழுதுச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு

இவைகள் வகைக்கு ஒருபடியும், நல்லெண்ணெய் ஒருபடியும் விட்டுத்

தேவதாரம் கோஷ்டம்
சடாமாஞ்சில் கிராம்பு
மஞ்சிஷ்டா சாதிக்காய்
சண்பகமொட்டு இலவங்கப்பத்திரி
சுக்கு மிளகு
திப்பிலி பச்சைக்கற்பூரம்
குங்குமப்பூ புனுகுச்சட்டம்
கஸ்தூரி மஞ்சள் கிளியூரம்பட்டை
அதிவிடயம்

இவைகளை வகைக்கு 1 பலம் வீதமெடுத்து நன்றாக அரைத்து எண்ணெயுடனே குழப்பிப் பதத்தில் இறக்கவும். இந்த

எண்ணெயினால் தலை முழுகிவரக் கண்ணோய்கள், எட்டுவகைக் காசரோகங்கள் முதலானவை தீரும்.

***குறிப்பு:-*** குங்குமப்பூ, புனுகுச் சட்டம், பச்சைக்கற்பூரம் முதலானவைகளை ஒரு மூட்டையாகக்கட்டி தைலம் காய்ச்சியபின் அதில் போட்டு வைப்பதுதான் பழக்கமாகும்.

### சந்தனாதித்தைலம்

நல்லசந்த மகில்வில்வம் நாரிதேவி லாமிச்சு
சொல்லுந் திரிபலையிருவேலி தூயவெட்டி
மிளுகுகோஷ்டம்
புல்லுஞ்சீரக முடன்தேற்றான் பொன்னாவரைவேர்
மலைதாங்கி
முல்லைநகையீ! ரிவையொன்று முன்னேபலம்
பத்தாய்க்கொள்ளே. *(20)*

கொள்ளாய்தூணி நீர்விட்டுக் கொதிக்கக் காய்ச்சிக்
குறுணிகொண்டு
நள்ளேயனைய ஆவின்பால் நாட்டிலிளநீர் முலைப்பாலுந்
தள்ளாதெண்ணெ யுடன்விட்டுத் தண்ணீர்மீட்டான்
வல்லாரை
வள்ளைப் பசளைச்சிறுகீரை வனசவளையங்
காணிநெய்தல். *(21)*

மாதளம்பழநீர் போந்தை மடல்தெங்கு நெல்லிதான்றி
தாதவி ழெலுமிச்சோடு தளைமுன்னை முசுட்டைவீழி
கோதையே யொன்றுநாழிச் சாறிவைக் கூட்டிக்கொண்டு
ஏதமில் கற்கமேல மின்னெரி யரிசிப்பாலே. *(22)*

பச்சைக்கற் பூரந்தாளிச பத்திரி பச்சைகன்னார்
நச்சிடும் புழுகுகோரோசனைநல்ல மதுரந்தாரஞ்
சச்சந்தங் கிராம்புகோட்டஞ் சாதிப்பத் திரிசாதிக்காய்
மிச்சமாய்க் கூட்டியெண்ணெய் வெந்துநீர்
வடித்துக்கொள்ளே. *(23)*

(இ-ள்.) சந்தனத்தூள் அகில்கட்டை
வில்வவேர் நன்னாரிவேர்
விலாமிச்சைவேர் கடுக்காய்த்தோல்
தான்றித்தோல் நெல்லிமுள்ளி
வெட்டிவேர் மிளகு
கோஷ்டம் சீரகம்
தேற்றாங்கொட்டை பொன்னாவரைவேர்
மலைதாங்கி (பொன்முசுட்டை)

இவைகள் வகைக்கு 10 பலம் எடுத்து இடித்து ஒரு பாத்திரத்தில் போட்டு 4 மரக்கால் சுத்த ஜலம் விட்டு ஒரு மரக்காலாக வற்றவைக்கவும்.

பசுவின்பால் இளநீர்
முலைப்பால் தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு
வல்லாரைச்சாறு வள்ளைக்கீரைச்சாறு
பசளைக்கீரைச்சாறு சிறுகீரைச்சாறு
தாமரையிலைச்சுருள்சாறு பொன்னாங்காணிச்சாறு
நெய்தல் கிழங்குச்சாறு மாதளம்பழச்சாறு
பனைமட்டைச்சாறு தென்னைமட்டைச்சாறு
நெல்லிக்காய்ச்சாறு தான்றிச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு முன்னைச்சாறு
முசுட்டைச்சாறு வீழிச்சாறு

இவைகள் வகைக்கு 1 படி வீதம் எடுத்துக்கொண்டு,

ஏலக்காய் நெரியரிசிப்பால்
பச்சைக்கற்பூரம் தாளீசபத்திரி
புனுகு கோரோசனை
அதிமதுரம் தேவதாரம்
சந்தனத்தூள் கிராம்பு
கோஷ்டம் சாதிப்பத்திரி
சாதிக்காய்

இவைகள் வகைக்கு ½ பலம் வீதம் எடுத்து இடித்து முன் சாற்றுடன் கலந்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கவும்.

## காசங்குத்துநிற நிதானம்

தோன்றிய காசம்ரண்டு[1] தூய்விழி சூட்சத்துள்ளே
ஊன்றியே துளிபோல்நின்று ஒண்விழி யடைத்துக்கன்றி
நன்றிமை நீக்கிப்பார்த்தால் அகன்றுபின் னடுவேநிற்குற்
றேன்றுளிக் குழலாய்! காசங் குத்துமிச் செய்கைகொள்ளே.

கூரிய கருவிநீளம் நான்விர லாகக்கொண்டு
நேரிய முனையதாக அகலநெல் வடிவதாகச்
சீர்பெறு கடைக்கண்ணுக்கு தெளிகரு விழிக்குமத்திச்
சாறவே யூன்றுந்தாழ்வு சணல்விரை யளவதாமே. (25)

குத்திய கருவிவாங்கிக் கோதையே செம்பினாலே
மத்துநால் விரலிநீளம் வடிவமாய் முனைநெல் நீளம்
முத்திய விரலிக்காய்போல் முனையில்முப் பட்டமாக
வுத்திடு முருட்சி மாடத் தளவதாய்[2] மொழியக்கொள்ளே.

புளியிலை கொண்டுதேய்த்து புழைவளி கரத்தைச்சாய்த்து
நழுவிடா தேத்தினாக்கால் நல்விழி நடுவேவிட்டுக்
கொழுவிய சலாகைகொண்டு குறித்ததில் வலமேசுற்றி
இளகிய நீரைமெல்ல வழித்திடிற் காசம்போமே. (27)

நடுவிழி யதனில்நின்ற காசம்நீர் நாடாதோடிற்
கடுகவே முன்னந்தோன்றும் பதார்த்தமே காணலாகு
முடனுறக் காணாதாகி லே(ழுச்சி)ஞ்சநீர்த் தங்கிநிற்கு
மடவிலே யாய்ந்துநோக்கி அவ்விச நீரைமாற்றே. (28)

சோதினை[3] மற்றம்பூவி னடுவல்லித் தண்டுசோரி
வேதனை வரவேயூன்றுங் கோல்மு(வி)னை மிகுந்திடாமல்
லோதின் வெள்ளரியின்வித்தின் கனமேய தனின்நீளந்
தீதில்லா வெள்ளைபோலச் செய்திடுங் கருவிகொள்ளே.

---

1. தோன்றிய நாலாமாண்டு என்றும் பாடபேதம்.

2. ஒத்திடு முருட்சிமத்தின் வடிவமா மொழியக்கேளே என்றும் பாடபேதம்.

3. வாதினை மத்தம் பூவில் என்றும் பாடபேதம்.

*மேவிய விஷநீர்மாற்றி வேதனை மிகுந்திடாம*
*லோவிய மனையாய்! கண்ணி லொழுக்கிடு மருந்துநீகேள்*
*ஆவினெய் யதனில்துத்தம் அவின்சீனாக் காரம்கூட்டிக்*
*கூவியே வலிக்குங்கண்ணி லூற்றியே குழைத்துப்பூசே. (30)*

*பூசியே1 பஞ்சைத்தட்டிப் பொருமிடை மையத்தாக்கிக்*
*கூசிடா திமையின்மீதே கூறிய் வெள்ளைச்சீலை*
*மாசுறா ததனைக்கட்டி மறுபடி மூன்றுநாளும்*
*வீசிடு மொளிகன்றாம லனல்காட்டி விழிக்கச்சொல்லே. (31)*

*விழித்திடும் போதுகுத்தி வேதனை கொண்டபோது*
*கழித்திடு மெட்டுநாளுங் கண்ணிலே ஒழுக்கநெய்கேள்*
*தெளித்திடு மதுரந்தாரம் சிப்பிநீ ரவின்சீர்கூட்டித்*
*துளிப்பட ஒழுக்கும்போது விழிவலி துலங்கிப்போமே. (32)*

## நேத்ர காச நோய்க் குறிகள்

இரு விழிகளிலும் நடுவில் சூட்சமான பாகத்தில் துளியைப்போல் இந்நோயின் நீர் நின்று பார்வையைக் குறைக்கும். இமையை நீக்கி பார்க்கக் கண்விழி விரிந்து சுருங்கும். (Celiary Muscles)

கூர்மையாக 4 விரற்கெடை நீளமுள்ள கம்பியின் முனையைத் தட்டிக்கொள்ளவும். கடைக்கண்ணுக்கும் கருவிழிக்கும் நடுவே சணல் விரையளவுள்ளதுவாரம் செய்து இதனை கடைக்கண் வெளிப்புறத்திலிருந்து கருவிழியை நோக்கிச்சாய்த்துக் குத்தவும்.

குத்திய கருவியை வெளியே இழுத்துவிட்டுச் செம்பினால் செய்யப்பட்ட 4 விரல் நீளமுள்ளதும் முனையில் நெல்லுப்பிரமாணம் இருக்கும்படியாகவும் விரலிக்காய் போல் நுனியில் முப்பட்டையாகவும் செய்த கருவியின் மேல் புளியிலையைத் தேய்த்து, முன்னே செய்யப்பட்ட

1. பூசியே நெட்டி மீது புதியவெண் பஞ்சைக்கட்டி என்றும் பாடபேதம்.

துவாரத்தின் வழியாக கையைச்சாய்த்து நழுவிவிடாமல் பிடித்து விழியின் நடுவுவரை விட்டு சலாகையை வலப்புறமாகச் சுழட்டி கண் பாப்பாவில் (Lens) தேங்கியிருக்கும் நீரை மெல்ல வடியச்செய்யவும். சரியானபடி நீர் வெளியானால் கண்ணுக்கு முன்னாலிருக்கும் வஸ்துக்கள் தெரியும்.

சரியாகத் தெரியவில்லையெனில் இன்னும் சிறிது விஷநீர் விழியில் தங்கியிருக்கிறதென்று தெரிந்து கொள்ளவும்.

ஊன்றுகோலின் லக்ஷணம்:- ஊமத்தம்பூவின் நடுவிலிருக்கும் தண்டைப்போல வெள்ளரி விதையின் கனத்தில் 4 விரற்கடை நீளத்தில் வெள்ளியில் செய்துகொள்ளவும். இதனைப் பிரயோகித்து விஷநீரை வெளியாக்கவும்.

கண்ணுக்குள் விடும் மருந்து:- பசுவின் நெய்யுடன் துத்தம், அபின், சீனாக்காரம் இவைகளைக் குழைத்துக் கண்களில் போட்டு மேலும் குழைத்துப் பூசவும். பின்னர் பஞ்சைத் தட்டையாகச் செய்து கண்ணின் மேல்வைத்துச் சுத்தமான வெள்ளைத் துணியினால் கட்டிவிடவும். மூன்றுநாட்களும் விழி கன்றிவிடாமல் அனல்காட்டிப் பிரிக்கவும். பிற்பாடும் குத்துவலி இருந்தால் 8 நாட்களுக்குக் கீழ்கண்ட மருந்தைப் போடவும்.

அதிமதுரம், வெள்ளி, அபின் இவைகளைச் சிப்பி நீருடன் அரைத்துக் கண்களில் விடவும். விழிகளும் பார்வையும் சுத்தமாகும்.

குறிப்பு:- இந்தவகை ஆபரேசன் காசம் (Cataract) பழுப்பதற்கு முன் லென்சைக் கீறிவிட்டு லென்சின் நீர் தானாகவே தேகத்தில் இழுத்துக்கொள்ளுவதற்குச் செய்யப்படுவது. இதற்கு (Discission) எனப்பெயர். இம்மாதிரி 2 அல்லது 3 முறைகளும் செய்தால்தான் பலன்

தெரியும். தற்காலத்தில் மேல்சொன்ன முறையைத் தவிர்த்து, லென்ஸ் முற்றியவுடன் அதனை வெளியே எடுக்கும் முறைதான் (Linear Extraction of Lens) அதிகமாகக் கையாளப்படுகிறது.

அஷ்டாங்க ஹ்ருதயம், ஸுஸ்ருதஸம்ஹிதா முதலான கிரந்தங்களில் இந்நோய் லிங்கநாசம் என்ற வகையைச் சேர்ந்ததாகவும், அதற்குச் செய்யவேண்டிய சஸ்திர ப்ரயோகத்தைக் கீழ்க்கண்டவாறும் கூறப்பட்டுள்ளது.

நோயாளி சாதரண (சம சீதோஷ்ண) காலத்தில் ஸ்நேக ஸ்வேதங்களை (எண்ணெய் தேய்த்து வெந்நீர் ஸ்னானம் ) செய்துகொண்டபின் பிரகாசமுள்ள இடத்தில் காலை நேரத்தில் முழங்கால் உயரமுள்ள ஒரு ஆசனத்தில் உட்காரவைக்கவும். அசையாமல் அவனைப் பிடித்துக் கொண்டு, வாயினால் ஊதிச் சூடு செய்யப்பட்ட வஸ்திரப் பந்தினால் கண்களுக்கு ஒத்தடம் கொடுத்துக் கட்டை விரலால் கண்களைத் தேய்க்கவும். இவ்விதம் செய்வதால் வெளியேற்றவேண்டிய மலம் என்னும் தோஷங்கள் வெளியேறத்தக்கவாறு ஓரிடத்தில் ஒன்று சேரும். இந்நிலையில் நோயாளியின் தலையை அசையாமல் பிடித்துக்கொண்டு அவனது மூக்கின் நுனியையே பார்க்கச் சொல்லவும். பிறகு கருவிழியிலிருந்து ½ அங்குலமும், கடைவிழியிலிருந்து 1/8 அங்குலமும் விட்டு எஞ்சியுள்ள பாகத்தில் இயற்கையாகவே அமைந்துள்ள "தெய்வச்சித்ரம்" என்ற துவாரத்தில் பக்கவாட்டமாக மேல்நோக்கிக் கடைவதுபோலச் சலாகையைச் செருகவும். வலது கண்ணை இடது கையினாலும், இடது கண்ணை வலது கையினாலும் குத்துதல் வேண்டும். நல்லமுறையில் குத்தப்படுமானால் ஒரு சப்தம் உண்டாவதுடன் வலியின்மையும் நீர்த்துளிகள் வடிவதையும் காணலாம். அப்போது நோயாளிக்கு ஆறுதல் கூறிக் கண்விழிகளில் முலைப்பால் விட்டுக்கழுவவும். பிறகு சலாகையின் நுனியால் நேத்ர மண்டலத்திற்குக் கெடுதி விளையாதவாறு அவ்விடத்தைச் சுரண்டவும்.

இம்முறையால் திரவித்த தோஷங்களை மூக்கினாலும் வாயினாலும் வெளிப்படுத்தவும். இவ்விதம் தோஷங்கள் வெளியேற்றப்பட்டு உருவங்கள் நன்கு புலப்படும். இதன் பின்னர் சலாகையை வெளியில் எடுக்கவும். பின்னர் நெய்யில் துவைத்த துணியை வைத்துக்கட்டி, குத்தப்பட்ட கண்ணின் பக்கத்திற்கு எதிர்ப்பக்கமாக நோயாளியைப் படுக்க வைக்கவும். இரண்டு கண்களும் குத்தப்படுமானால் நோயாளியை நேராகப் படுக்கவைக்கவும்.

### படலத்திற்குச் சிகிச்சை

*சீனாக்கார மொருகழஞ்சு சிவந்தகாவி யரைக்கழஞ்சு*
*மானேஅவினும் பணவெடைகொள் வறுத்துமத்தித்*
*திப்பொடியைத்*
*தேனார்முலைப்பால் தனிற்கலக்கித் தீயில்*
*வெதுப்பிவிழிக்கொழுக்கப்*
*போனார்படலம் விழிதனில்நோய் பொருந்தாதோடிப்*
*போய்விடுமே. (33)*

*(இ-ள்.) சீனாக்காரம் 40 குன்றி, பூங்காவி 20 குன்றி, அபின் 3 1/3 குன்றி இவைகளை வறுத்துப் பொடி செய்துகொள்ளவும். இதனை முலைப்பாலில் கலக்கிச் சிறிது சூடாக்கி விழியில் விடவும். படல நோய்கள் நீங்கும்.*

### படலங்களுக்குப் புறவளையம்

*அரிதாகி யட்டிசந்தம் அகில்வில்வ[1] மிரத்தசந்த*
*முரியதோர் சீனக்கார முடன்றாரங் கரியின்பல்லு*
*அரிவையர் முலைப்பால்தன்னி லரைத்தவின்*
*கூடப்போட்டு*
*விரைவினிற் கலந்துகாய்ச்சி விழிசுற்றிப் பூசிடாயே. (34)*

(இ-ள்.) கடுக்காய்த்தோல் சந்தனத்தூள்
அகில்கட்டை வில்வம்

1. மகில் வில்வ மரத்தோடு பாடபேதம்.

| செஞ்சந்தனம் | சீனாக்காரம் |
| --- | --- |
| தேவதாரம் | யானைப்பல் |

இவைகளைச் சரியெடுத்துத் தாய்ப்பாலில் அரைத்து அபின்கூட்டி ஒரு கரண்டியிலிட்டுக் கொதிக்கவைத்துக் கண்களைச் சுற்றிலும் புறவளையம் இடவும். படல நோய்கள் தீரும்

## இரட்சை நிதானம்

இவையது தனக்கு ரட்சை யியல்மொழி மடங்கலென்னும்
நவையறு கருவியாலோ நடுநரம் பறிந்து கொண்டு
குவையிரண் டதனின் மீதுங் கொதித்தெழு மிரட்சைசெய்யச்
சவையுறு முனிவன் சொன்ன தாரணை
யறிந்துகொள்ளே. *(35)*

அறிவுசெய் தேழுநாளு மழுந்தவே புண்ணதாக்கிக்
குறியற முன்புசொன்ன மருந்ததே தாரைகொண்ணீ
மறுவிலா விழியினுள்ளே வந்துறும் படலம்போக்கும்
நறைகமழ் குழலினாளே! நாடி நீயறிந்துகொள்ளே. *(36)*

*(இ-ள்.)* மேற்கூறிய புறவளையத்தினால் படலரோகம் குணமாகவில்லை என்றால் மொழி மடங்கல் (விழி மடங்கல்) என்னும் கருவியினால் கண்களுக்கு வரும் நடுநரம்பைக் கத்தரிக்கவும். 7 நாட்கள் அந்த இடத்தின் புண்ணாறாமல் வைத்திருந்து, கண்களுக்கு முன் சொன்ன மருந்தை இட்டுவரவும். விழிப்படலங்கள் தீரும்.

***குறிப்பு:-*** பொதுவாக கண்களுக்குச் செல்லும் புருவ மத்தியில் உள்ள நரம்பைப் புண்ணாக்கவேண்டுமெனச் சொல்கிறார் என்று தோன்றுகிறது.

## குமுதங்களுக்குக் கோதந்தாதிக் குளிகை

ஆவின்பல் லதனைநன்றா யாம்பல்பூ நீரைவார்த்து
மேவிநீ யரைத்துவிட்டாய் விளம்புநாற் பதுநாட்சென்றால்

*கூவுவெண் சாவலென்பு கோரோசனை கோட்டமிந்து*
*தாவுபொன் வெள்ளிகஞ்சங் சங்கோடு துருசுதுத்தம்.* (37)

*சொல்லிய சீனக்காரத் துலங்குமோ ரிதழின்மூலம்*
*நல்லசா றணைவேர்சந்தம் நவில்திரி பலையின்வித்து*
*அல்லியங் கோதா! யோரொன்றோரள வாகக்கூட்டிப்*
*புல்லுஞ்சம் பீரச்சாற்றில் அரைத்தெழு*
*பொழுதுமின்னே.* (38)

*★மின்னேபனிநீர் தனைவிடுத்து மிருதுவாக வரைத்துருட்டி*
*கன்னேரளைய செங்குமுதங் கருதும்பூப்பட லங்காசம்*
*பன்னோய் நயனத் திமிர்முலைப்பால்*
*விட்டுரைத்துக்கண்ணிலிடச்*
*சொன்னேன் சொன்னேன் தீரும்விழி*
*சோதியாகத்துலங்கிடுமே.* (39)

(இ-ள்.) பசுவின் பற்களை நொறுக்கி ஆம்பல் பூச்சாற்றை விட்டு நன்றாகவரைத்து ஒரு தட்டில் அடையாகத் தட்டி 40 நாட்கள் வைத்திருக்கவும். பின்னர் அதனுடன்

| | |
|---|---|
| வெள்ளைச்சேவலின் எலும்பு | கோரோசனை |
| கோஷ்டம் | இந்துப்பு |
| ராவிய தங்கம் | ராவிய வெள்ளி |
| தவளநிறச் சங்குகள் | பொரித்த துரிசு |
| பொரித்த துத்தம் | பொரித்த சீனாக்காரம் |
| ஓரிலைத்தாமரைவேர் | சாறணைவேர் |
| சந்தனத்தூள் | கடுக்காய்கொட்டைப்பருப்பு |
| தான்றிப்பருப்பு | நெல்லிப்பருப்பு |

இவைகளை சரியெடுத்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு 7 நாட்கள் அரைக்கவும். பின்னர் பனிநீர் அல்லது பன்னீரை

*பாடபேதச் செய்யுள்

மின்னே பன்னீர்தன்னாலே மிருதுவாக வரைத்துருட்டிக்
கண்ணே செங்குமுதந்தானே கருதுப்பூப் படலங்காசம்
பன்னோயோடு திமிரமெல்லாம் பாறவே முலைப்பால்விட்டு
சொன்னே னீயரைத்துப் போடச்சோதியாய் விளங்குங்கண்ணே

விட்டு நன்றாக அரைத்து நீண்ட மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலரவைக்கவும். இம்மருந்தைத் தாய்ப்பாலில் இழைத்துக் கண்களில் போடச் செங்குமுதம், பூ, படலநோய், காசநோய், திமிரம் முதலானவைகள் நீங்கும்.

## குமுதத்திற்குப் பொடி

துருசெலி மருந்துசீனக் காரஞ்சொல் மருந்துமூன்றும்
உருகவைத் தோட்டின்மீதே வெந்தயத் துடனெடுத்து
மிருதுவாய் நுணிக்கிக்கொண்டு விளம்பிய குமுதயத்தி
★லொருதினை யளவுபார்த்துப் போடிட வோடிப்போமே.

(இ-ள்.) துருசு, எலிமருந்து (வெள்ளைப்பாஷாணம்) சீனாக்காரம் இம்மூன்றையும் ஒரு பானையோட்டில் வைத்து உருக்கி, நன்றாக ஆறவைக்கவும். பின்னர் இதனைத் தூள்செய்து வைத்துக்கொண்டு குமுத நோய்க்குத் தினையளவு கண்களில் போடவும். பத்துதடவை போடுவதற்குள் குணமுண்டாகும்.

## குமுதத்திற்குக் குழம்பு

கடல்நுரை துருசுசங்கு கருதிந்து மரிசந்தேனு
மடலூறுதுத்தமேழு மருவும் ஆ வெண்ணெய் கூட்டி
யடர்குழி யம்மியிட்டு அரையொரு சாமஞ்சென்றால்
இடர்செய்யுங் குமுதயத்தி லெழுதிடத் தீருமென்னே. (41)

(இ-ள்.) கடல்நுரை — துருசு
சங்குத்தூள் — இந்துப்பு
மிளகு — சுக்குத்தேறு
மடல்துத்தம்

இவைகளைத் தூள்செய்து கல்வத்தில் வைத்துப் பசுவன் வெண்ணெய் சேர்த்து நன்றாக ஒரு சாமம் அரைக்கவும். இக்களிம்பைக் குமுதநோய் உள்ளவர்களுக்குப் போட்டு வரவும். குணமுண்டாகும்.

★ ஒருதினை யளவுபத்துப் பொழுதிட வோடிப்போமே.

## விழியுந்தலுக்கு

★தானமா வத்திப்பூசச் சங்கொடு கரியின்றந்த
மானதோர் தாரஞ்செஞ்சந் தனமொடு கடுக்காயஞ்சு
ஊனமில் முலைப்பால்விட்டு உரைத்தவின் கலந்துகாய்ச்சி
கானவிழ் குழலாய்நெற்றிப் பிடர்சுற்றிக் கனக்கப்பூசே. (42)

(இ-ள்.) சங்குத்தூள் யானைத்தந்தம்
தேவதாரம் செஞ்சந்தனம்
கடுக்காய்

இவைகளை இடித்துக் கல்வத்திலிட்டு, முலைப்பால் விட்டு நன்றாகவரைத்து விழுதாக்கி அபின் சேர்த்துக் கொதிக்கவைத்து நெற்றி, பிடரி முதலான இடங்களில் கனமாகப் பற்றாகப்போடவும். உந்தல்பூ தீரும்.

## நெரிசலுக்கு மருந்து

குருதியி னெரிசல்தானே யசாத்தியமென்று கூறுந்
தெரியிரு நெரிசலுக்குச் செய்மருந் ததனைக்கேளா
யுருகிய நறுநெய்தன்னி லூறுநீர் முருங்கைப்பூவு
மருவுநற் சீரஞ்சீனக் காரமும் அவினுங்கூட்டே. (43)

கூட்டிநீ கொதிக்கவைத்துக் குறித்திரு பொழுதுந்தாரை
நாட்டமாய் விட்டவாறே நவின்றிடும் நெரிசல்நோவு
மீட்டுமோர் குத்துச்சூடு மிகுமிடிப் போமேயென்று
கேட்டிது முன்னோர்கூறுங் கிரிகையை யறிந்துகொள்ளே.

(இ-ள்.) இரத்த நெரிசல் ரோகம் அசாத்தியம் என்று கூறப்படினும் அதற்கான மருந்தாவது. காய்ச்சிய நெய்யுடன் சரியளவு முருங்கைப்பூச்சாறு சேர்த்துக் கொதிக்கவைத்து விழியில் தாரையாக விடவும். நெரிசல்நோய் விழிக்குத்து, சூடு முதலானவை நீங்கும்.

---

★பாடபேதச்செய்யுள்

தானமாய் வைத்தழுத்திச் சங்கொடு கரியின் றந்தம்
தேனமர் தேவ்தாரஞ் செஞ்சந்தங் கடுக்காயைந்தும்
ஊனமில் தனப்பால்விட்டு உரைத்தபின் கூட்டிக்காய்ச்சி
கானவிற் குழலாய்நெற்றிப் படர்சுற்றுங் கனக்கப்பூசே.

## வரிக்கு ஏகதுத்தாதி அஞ்சனம்

விளம்பும்நற் றுத்தந்தன்னை நுணுக்கிவெள் ளாட்டுப்பாலை
வளம்பெற நாழிவிட்டு வற்றவே காய்ச்சிக்கொண்டு
துளங்குசம் பீரச்சாற்றி லரைத்தடி பிடித்துலர்த்தி
விளங்கிழை மயிலே! சட்டி மீதுவைத்
தெரித்துக்கொள்ளே. *(45)*

கொண்ணிறம் வெண்மையானால் கூறும்வெங் கலத்திலிட்டுத்
தண்ணுறு சங்கினாலே சாரமந் தித்துக்கொண்டு
திண்ணமா யெழுதும்போது சேர்ந்திடும் வரிசிகப்புக்
கண்ணிடை தில்லாதோடுக்ஷங் கருதிநீ யறிந்துகொள்ளே.

*(இ-ள்.)* துத்தத்தை நுணுக்கி வெள்ளாட்டுப் பாலுடன் *(1நாழி)* கலந்து வற்றக்காய்ச்சி எலுமிச்சம்பழச்சாறு விட்டு இறுக வைத்துக்கொள்ளவும். வெள்ளை நிறமாக ஆனபின் இதனை ஒரு வெங்கலத் தாம்பாளத்திலிட்டு ஒரு வெள்ளைச் சங்கினால் குழைக்கவும். இந்தக் குழம்பை அரிசிகப்பு (செவ்வரிசி) நோய்க்குப் போடவும். குணமாகும்.

## சுக்கிரனுக்கு நெய்

★நறுநெய் யதனிலதிமதுரம் நல்லசந்தந் தாரமுட
னுறுவேர்ப் பூலாவேருடனே யோது திரிபலையிந்துப்பு
உறுவெள்ளாட்டின் செவியிரத்தம் மூச்சிநத்தைச் சிப்பியிநீர்
பெறுநற்சீர மபின்கூட்டிப் பேணிவெந்து
தானொழுக்கே. *(47)*

*(இ-ள்.)* பசுவின்நெய் (ஒரு உழக்கு)யுடன் அதிமதுரம், சந்தனத்தூள், தேவதாரு, வேர்ப்பூலாவேர், கடுக்காய்,

---

★பாடபேதச் செய்யுள்
நறுநெய்யுழக்கு அதிமதுரம் நல்லசந்தந் தாரமுடன்
உறுவெட்பூலா வேருடனே ஓதுந்திரிபலை யிந்துப்பு
நறுவெள்ளாட்டின் செவியிரத்தம் நத்ததைப்பூச்சி சிப்பிவெள்ளம்
பெறுநற்சீரம பின்கூட்டிப் பேணிவெந்து தானொழுக்கே.

நெல்லிக்காய், தான்றிக்காய், இந்துப்பு, வெள்ளாட்டின் காதை அறுத்து அதிலிருந்து ஒழுகும் இரத்தம், நத்தைச்சிப்பி நீர், சீரகம், அபின் இவைகளைச் சேர்த்துப் பதமாகக் காய்ச்சி வடிக்கட்டிக்கொண்டு சுக்ரரோகத்திற்குத் தாரையாகக் கண்களில் விடவும்.

### புறவளையம்

இரும்பது சிவக்கக்காய்ச்சி யெலுமிச்சம்பழ நீர்விட்டு
★உரம்பெறு கடுக்காய்சுக்கு உரைத்ததை வழித்துக்கொண்டு
நிறம்பவே நெற்றிக்கண்ணில் நிச்சயமாகப் பூசி
வரம்படு மருவிநீரு மணலுரு சிவப்பும்போமே. (48)

(இ-ள்.) இரும்பைச் சிவக்கக்காய்ச்சி அதில் எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு அந்தச்சாற்றை சேகரிக்கவும். அதனுடன் கடுக்காய், சுக்கு இவ்விரண்டையும் விழுதாகும்வரை அரைத்து வழித்துக்கொண்டு, கண்களைச் சுற்றிலும், நெற்றியிலும் பூசவும். கண்ணிலிருந்து நீர்வடிதல், சிவப்பு, எரிச்சல் முதலானவை நீங்கும்.

### சுக்கிரனுக்குப் பொடி

சீனாக்கார மதைநன்றாய் திரளப்பொரித்து முக்கூறு
மானே நற்சீரகமபினும் அதற்குப்பாதி வடிகாவி
தானேயளவிட் டொன்றாக நுணிக்கித்தையல்
முலைப்பாலிற்
றானே யனத்தி யொழுக்கிவிடிற் சாறுமிடி நோய்
மாற்றிடுமே. (49)

(இ-ள்.) சீனாக்காரத்தை ஓட்டில்வைத்துப் பொரித்துக் கொள்ளவும். அதில் பாதி சீரகமும் அபினும் கூட்டவும். பின்னர் அதற்குப் பாதி பூங்காவியும் சேர்த்துக்கொண்டு தாய்ப்பாலில் குழப்பிக் கண்களில் விடவும்.

---

★உரம்பெறு கடுக்காய் சுக்கு மிவையந்நீ ராலுரைத்து - பாடபேதம்

## கனகாதி உருண்டை

*கனகங்கழஞ்சு வங்கமிரு கழஞ்சுபீத ரோகிணியு*
*மினமுக்கழஞ்சு துத்தமுநா லிலங்குதுரிசு மைங்கழஞ்சு*
*முனியுஞ்சீனக் காரமறு கழஞ்சோரிதழின் மூலமுமேழ்*
*நனியும்பன்றிக் கோடெட்டுக் கழஞ்சுகரிப்பல்*
*நாலைந்தே. (50)*

*கலையின் கொம்பு பதின்கழஞ்சு ★காராமைக்கோ*
*டையஞ்சு*
*நலமாமதுரம் பன்னிரண்டு நவிலுந்தாரம் பதின்மூன்று*
*குலவுஞ்சாவல் நெஞ்செலும்பு கூட்டேழிரண்டு*
*முதலைப்பல்*
*சொலவேநீகேள் பதினைந்து சோகிபதினா*
*றிவைகூட்டே. (51)*

*கூட்டியரைப்பீர் சம்பீரப் பழநீரெழுநாள் வளர்கொடுப்பை*
*யீட்டுஞ்சாற்றி லேழரைப்பு இளநீர்த்தண்ணீ ரேழரைப்பு*
*நாட்டமுடனே யரைத்துருட்டி நாரிமுலைப்பா லாலெழுத*
*வாட்டமுறுசுக் கிரன்படல மந்தகாச மாறிடுமே. (52)*

*(இ-ள்.)*

| | |
|---|---|
| *ராவிய தங்கத்தூள் 1 கழஞ்சு* | *ராவிய காரீயத்தூள் 2 கழஞ்சு* |
| *பீதரோகிணி 3 கழஞ்சு* | *துத்தம் 4 கழஞ்சு* |
| *துரிசு 5 கழஞ்சு* | *சீனாக்காரம் 6 கழஞ்சு* |
| *ஓரிதழ்தாமரைச் சமூலம் 7 கழஞ்சு* | *பன்றிப்பல் 8 கழஞ்சு* |
| *யானைப்பல் 9 கழஞ்சு* | *மான்கொம்பு 10 கழஞ்சு* |
| *ஆமையோடு 10 கழஞ்சு* | *அதிமதுரம் 12 கழஞ்சு* |
| *ராவிய வெள்ளித்தூள் 13 கழஞ்சு* | *சோழி 16 கழஞ்சு* |
| *சேவல் நெஞ்செலும்பு 14 கழஞ்சு* | *முதலைப்பல் 16கழஞ்சு* |

*இவைகளைத் தூள்செய்து, ஒரு கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு 7 நாட்களும், பொன்னாங்காணிச் சாறுவிட்டு 7 நாட்களும், இளநீர்விட்டு 7 நாட்கள் அரைத்து*

★காரமைந்தோடேயாறு என்றும் கூறப்பட்டுள்ளதால் வெங்காரம் 11 கழஞ்சு எடுத்துக்கொண்டும் அரைக்கலாம் என்று தோன்றுகிறது.

நீண்ட மாத்திரைகளாக உருட்டிவைத்துக் காயவைக்கவும். இதனை வேண்டும்போது முலைப்பாலில் உரைத்து கண்களுக்குப் பயறளவு இடவும். சுக்கிரன், படலம், மந்தகாசம் முதலான நோய்கள் நீங்கும்.

## கர்ப்பூராதிப் பொடி

பச்சைக்கற் பூரம்பீதரோகிணி பகருந்துத்த
நச்சிடுந் துருசிந்துப்பு நாகொடு சோகிபீங்கான்
துச்சிடு கோழிமுட்டைத் தோடுதிப் பிலியின்மூலம்
வைச்சவோ ரிதழின்மூலம் வளர்வெண்சா
றணைவேர்சீதை. (53)

சிறுகீரை வேரொவ்வொன்று சேரமுக் கழஞ்சுகூட்டி
யுறுநீராந் தேசிச்சாற்றி லரைத்தடையோட்டின்மீது
பெறவேவைத் தெரித்தெடுத்துப் பேணியே
பொடித்துக்கொண்டு
மறவாதே யெழுதரோகம் மாறிடும் போடுவீரே. (54)

(இ-ள்.) பச்சைக்கற்பூரம் பீதரோகிணி
துத்தம் துரிசு
இந்துப்பு சுக்கு
சோழி பீங்கான்
கோழிமுட்டையோடு திப்பிலிமூலம்
ஓரிதழ்த்தாமரைவேர் வெள்ளைச்சாறணைவேர்
சிறுகீரைவேர் பொன்னாங்காணிவேர்

இவைகள் வகைக்கு 3 கழஞ்சு வீதம் எடுத்து இடித்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்றாக அரைத்து ஒரு ஓட்டில் அடையாகத்தட்டவும். இதனை அடுப்பின் மேலேற்றி எரித்துச் சிவந்தபின் பொடியாகச்செய்து வைத்துக்கொள்ளவும். இத்தூளைக் கண்களில் எள்ளளவு போடவும். சுக்ரன் தீரும்.

**குறிப்பு:-** நாகமுனி நயனவிதி இருநூறில் மனோசிலையும், திப்பிலி மூலத்திற்குப் பதில் காக்கணம் வேரும் காணப்படுகிறது.

### சுக்கிரனுக்கு ரெட்சை

*விரணமே தீராதாகில் மெய்யிது வறியச்சொன்னோ*
*மறிவுசேர் ★பொய்க்கண்மீது மணிநுதல் நரம்பின்மீதுங்*
*குறிபெற ரெட்சைகொண்டு குறித்தபின் சொல்மருந்து*
*நெறியுடன் செய்யும்போது சுக்கிரன் நீங்கிப்போமே. (55)*

*(இ-ள்.)* விரணம் தீராவிட்டால் கண்ணிமையின்மீதும், நெற்றி நரம்பிலும், ரெட்சை செய்யவும். அதாவது கீறவும். சுக்கிரரோகம் நீங்கும்.

### திமிரத்திற்குச் சீராதிக்குழம்பு

*ஆவின்பா லுரியிலிருந்து மரைப்பல மதனில்விட்டு*
*மேவியே சுவறக்காய்ச்சி மேலிடு மருந்துகேளாய்*
*தாவுவெண் கலத்தின்சார்வு தலையோடு துரிசுசங்கு*
*நீவிரைந் தொருகழஞ்சு நிகழ்ததுமா*
*வெண்ணெய்கூட்டே.(56)*

*கூட்டியரைத்துப் பணவெடை நீ குறித்துப்பத்து நாளெழுத*
*வீட்டுந்திமிரம் படலமுட னியம்பும்வியாதி தீருமெனக்*
*கேட்டேபொதிகை முனியுரைத்த கிரிகைப்படியே*
*செய்வீரேல்*
*நாட்டந்துலங்கு மெனவாயுள் நவிலுமுறையை*
*யறிவீரே.(57)*

*(இ-ள்.)* பசுவின்பால் ½ படி, இந்துப்பு ½ பலம் இவ்விரண்டையும் காய்ச்சிச் சுவறியபின் ஒரு வெங்கலப் பாத்திரத்திலிட்டு மண்டையோட்டுத்தூள், துரிசு, சங்கு இவைகளையும் ஒருகழஞ்சளவெடுத்து நுணுக்கிப் பசுவெண்ணெய் வேண்டிய அளவு சேர்த்துக் குழைத்து வைத்துக்கொள்ளவும். இதில் 3 குன்றியளவெடுத்து 10 நாட்களுக்குக் கண்களில் போடவும். திமிரம், படலம் முதலான நோய்கள் தீரும்.

---

★ பெருங்கண்மீது என்றும் பாடபேதம்.

## தாமிராதி உருண்டை

படிகம்பணிலம் மடல்துத்தம் பஞ்சலோகச் சார்வுடனே
கடியகரியின் பல்லேனங் கடலில்சோகி நீற்றுக்கல்
லுடலைமூடு மாமையின்மே லோடோரிதழின் வேரதுவுந்
திடனாமுதலைப்பல் தேற்றான் சிறுகீரையின்வேர்
காக்கணம்வேர். (58)

மேவுஞ்சீனாக் காரமுடன் மிக்கப்பீத ரோகிணியும்
கூவுஞ்சாவல் நெஞ்செலும்புங் குலவும்பீங்கான்
கடல்நுரையும்
ஆவின்பல்லுங் கலைக்கொம்பு மாகவோரொன்
றரைக்கழஞ்சு
பாவுந்துருசு பதின்கழஞ்சு பரிந்தெலுமிச்சம் பழச்சாறே. (59)
சாற்றிலேழு நாளரைத்துத் தளருங்கோழி முட்டைவெண்ணீ
ரூற்றியரைத்துக் குளிகையதா யுருட்டிக்குறுகா நீளாதே
மூற்றதலையிற் சுழியுறவே முனியாதொடுத்த
வுண்டைதனை
நீற்றமுலைப்பா லதேநெய்யி லெழுதத்திமிரம் நீங்கிடுமே.

(இ-ள்.) படிகக்கல் தவளச்சங்கு
மடல்துத்தம் ராவியதங்கத்தூள்
ராவியவெள்ளித்தூள் ராவிய இரும்புத்தூள்
ராவிய செம்புத்தூள் ராவிய நாகத்தூள்
யானைப்பல் பன்றிப்பல்
கடல்சோழி சுக்கான் கல்
ஆமையோடு ஓரிதழ்த் தாமரைவேர்
முதலைப்பல் தேத்தாங்கொட்டை
சிறுகீரைவேர் காக்கணவேர்
சீனாக்காரம் பீதரோகிணி
சேவல் நெஞ்செலும்பு பீங்கான்
கடல்நுரை மாட்டுப்பல்
மான்கொம்பு

இவைகள் வகைக்கு ½ கழஞ்சு (20 குன்றி நிறை)

துரிசு 10 கழஞ்சு (40 குன்றி நிறை) இவைகளை இடித்து ஒரு கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாறு விட்டு 7 நாட்கள் அரைக்கவும். கோழிமுட்டையின் வெள்ளைக்கரு விட்டு 7 நாட்கள் அரைக்கவும். அதிக நீளமும் குட்டையும் இல்லாத சுமாரான மாத்திரைகளாகத் திரட்டி ஒரு சீராகச் செய்துக் காயவைக்கவும். முலைப்பால், தேன், நெய் இவைகள் ஏதேனுமொன்றில் இழைத்துக் கண்களுக்கிடத் திமிரம் நீங்கும்.

***குறிப்பு:-*** நகாமுனி நயனவிதி 200ல், நிமிளை, சீரகம் இவ்விரண்டும் அதிகப்படியாக உள்ளன.

### பூவிற்குக் குளிகை

தந்தியெயிறு தன்னதனைச் சாரயிடித்துத் தூளாக்கி
யந்தச்செரிந்த புளியாரை யதனைக்கூட்டி
யரைத்துவட்டமாய்
முந்தமறையோர் மொழிந்தபடி முழுமண்டலமு
மதிற்கிடந்தார்
கந்தஞ்செறிந்த குழல்மானே! கருதியரைக்கும் படிகாணீர்.

காணீர்துத்தங் கழஞ்சுடனே கனகச்செம்பின் பொடிகழஞ்சு
ஆணியரைத்துக் குளிகைசெய்து வொளிசம் பீரப்
பழச்சாற்றில்
பேணியுரைத்து விழிக்கெழுத பெயரும்விரண சுக்கிரமு
மாணிப்பூவு மதிலுண்டா மரியநோவு மடராதே. (62)

(இ-ள்.) யானைப்பல்லை இடித்துத் தூளாக்கிப் புளியாரைச் சாறுவிட்டு நன்றாகவரைத்து அடையாகத் தட்டி 45 நாட்கள் வைக்கவும். பின்னர் துத்தம் 40 குன்றியெடை, செம்புத்தூள் 40 குன்றியும் சேர்த்து முன்போல் புளியாரைச் சாறுவிட்டு நன்றாகவரைத்து நீண்ட குளிகைகளாகச் செய்துகொள்ளவும். இதனை வேண்டும்போது எலுமிச்சம்பழச்சாற்றிலுரைத்துக் கண்களிலிடவும். விரண சுக்ரன், ஆணிப்பூ முதலானவை நீங்கும்.

### பச்சை உருண்டை

சங்குதலையோ டோரிதழின் றாமரைமூலம் வான்மேவு
திங்கள்போன்ற நீற்றுக்கல் சிறந்தசோகி கமடென்பு
பொங்குந்துத்தங் கழஞ்சுடனே பொரியுந்துரிசோ
டறுகழஞ்சு
தங்கநிறச்சம் பீரத்தின் சாற்றிலரைத்துக் குளிகைசெய்யே. (63)

குளிகைதிரட்டும் வகையேதன் ணிற்குக்கிடாண்டச்
சலம்வாங்கி
நெளியவரைத்து வுண்டைதனை நீளாதளவுங் குறுகாமல்
சுழியாயிருக்க யிருபுறமுந் தோகையனையார்
முலைப்பாலிற்
பிழியவெழுத நயனமதிற் பெருகுந்திமிரம் போய்விடுமே.

(இ-ள்.) சுட்ட சங்கு — வெந்த தலையோடு
ஓரிலைத்தாமரைவேர் — சுண்ணாம்புக்கல்
சோழி — ஆமையோடு
துத்தம்
இவைகள் வகைக்கு ஒரு கழஞ்சு

பொரித்த துரிசு 6 கழஞ்சு இவைகளைக் கல்வத்திலிட்டு சுத்தமான எலுமிச்சம்பழச்சாறுவிட்டு நன்றாகவரைக்கவும். பின்னர் கோழிமுட்டையின் வெள்ளைக்கருவை விட்டு நன்றாகவரைத்து அதிக நீளமும் குட்டையும் இல்லாமல் சுமாரான அளவுள்ள மாத்திரைகளாகத் திரட்டவும். மாத்திரையின் நுனியில் குழிவிழக்கூடாது. வேண்டும்போது தாய்ப்பாலில் இழைத்துப் பயறளவு கண்களுக்குள்ளிடவும். திமிரம் தீரும்.

### திமிரத்திற்குச் சந்தனாதி உருண்டை

நற்சந்த மகிற்செஞ்சந்தம் நவிலதிமதுரந் தாரம்
வச்சவோ ரிதழின்மூலம் வளர்பிச்சி யரும்புகோட்டம்
பச்சிலை பீதரோணி பகர்சீனக் காரந்துத்தங்
கச்சிடும் புனுகுகோரோ சனைமுத்தக் காசுதேற்றான். (65)

தாவுகோ லரக்குவங்கஞ் சாத்திரவேதி பச்சை
மேவிருபது மருந்தும் விளம்புமொவ் வோர்கழஞ்சு
பூவையர்முலைப்பால் செந்தெங் கிளநீர்நீர் புகலும்பன்னீர்
நீவிரைந் தரைத்தவுண்டைத் தேய்த்திடத் திமிரம்நீங்கும். (66)

| (இ-ன்.) முற்றிய சந்தனம் | அகில்கட்டை |
|---|---|
| செஞ்சந்தனம் | அதிமதுரம் |
| தேவதாரம் | ஓரிதழ்த் தாமரைவேர் |
| பிச்சியரும்பு | கோஷ்டம் |
| பச்சிலை | பீதரோகிணி |
| சீனக்காரம் | துத்தம் |
| புனுகு | கோரோசனை |
| கோரைக்கிழங்கு | தேற்றாங்கொட்டை |
| அரக்கு | ராவிய காரீயத்தூள் |
| சாத்திரவேதி | பச்சைக்கல் |

இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்துத் தூள்செய்து, தாய்ப்பால், செவ்விளநீர், பன்னீர் இவைகளைத் தனியாக விட்டு ஒவ்வொருநாள் அரைக்கவும். பின்னர் மாத்திரையாகத் திரட்டி வைத்துக்கொள்ளவும். இதனைத் தாய்ப்பாலில் இழைத்துக் கண்களில் இடத் திமிரம் போம்.

**குறிப்பு:-** நாகமுனி நயனவிதி 200ல் அரக்குக்குபதில் சங்கும், காரீயத்திற்குபதில் லிங்கமும், கடைசியாக இந்துப்புடன் 21 சரக்குகளாகக் கணக்கிட்டு வகைக்கு இரு கழஞ்சு எடுக்கும்படியாகவும் கூறப்பட்டுள்ளது. அதாவது,

"தாவுகோல் சங்குலிங்கஞ் சாத்திர பேதிப்பச்சை
மேவிந்து இருபத்தொன்றும் விளம்போரொன் றிருகழஞ்சு"

என்று காணப்படுகிறது.

## குந்தத்திற்குப் பொடி

ஒள்ளழல் போலெழுந்த வுதரத்தின் குந்தந்தன்னை
தள்ளிடும் சாத்தியமென்று உலகில்மற் றவைதான் தீரு
மள்ளிலை கெடுவேற்கண்ணாய்! மனைபீத ரோணிதுத்தந்
துள்ளெலி மருந்தினோடு துரிசுநற் சீனாக்காரம். (67)

கடல்நுரை சேர்இசங்கு கருதுமென் மருந்துசேர
அடவிலே நந்திப்பூவி னீரினாலரைத் துலர்த்தித்
திடமுற வெழுக்கச்சுட்டுச் சேரமத் தித்துக்கொண்டு
உடனெழு குந்தந்தன்னி லெழுதிட வோடிப்போமே. (68)

(இ-ள்.) பீதரோகிணி — துத்தம்
வெள்ளைப்பாஷாணம் — துரிசு
சீனாக்காரம் — கடல்நுரை
சங்கு

இவைகளை நன்றாக நுணிக்கு நந்தியாவட்டைப் பூச்சாறு விட்டு நன்றாக அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துப் புடமிட்டெடுக்கவும். துல்யமான பற்பம் கிடைக்கும். இந்தப் பொடியைக் குந்த நோய்க்கு மேலே போடவும்.

**குறிப்பு:-** நாகமுனிவர் நயனவிதியில் இம்மருந்துடன் சோழியும் சேர்க்கப்பட்டுள்ளது.

## எழுச்சிக்கு மருந்து

திரிகடு தேற்றாங்கொட்டை தெளிசீனக் காரந்துத்தம்
மருந்தாறு மொக்கவொன்று நீசமனுணுக்கிக் கொண்டு
கருவெட்பூ லாவின்சாற்றில் கரைத்துநீ தெளித்துக்காய்ச்சி
மறுபடி விழிக்கொழுக்க யெழுச்சிநோய் மாய்ந்துபோமே.

(இ-ள்.) சுக்கு — திப்பிலி
மிளகு — தேற்றாங்கொட்டை
சீனாக்காரம் — துத்தம்

இவைகளைச் சமனாக எடுத்து நுணுக்கிக்கொள்ளவும். கறுப்பு வெட்பூலாச்சாற்றில் இத்தூளில் ஒரு சிட்டிகை போட்டு அடுப்பில் சுடவைத்துக் கண்களில் விடவும். எழுச்சிகள் தீரும்.

## எழுச்சிக்கு வேறு

வெண்ணெயிற் கடுக்காயிந்து மேவுநற் சீரமூன்றும்
நண்ணுறக் கூட்டிக்கொண்டு நற்கொதிச் சோற்றில்வைத்து

*ஒண்ணிறத் துணியிலிட்டு ஒழுக்கிடாய் தாரையாகக்*
*கண்ணிடை யெழுச்சிரோகங் கடுகியே போகுங்காணே.(70)*

(இ-ள்.) வெண்ணெயுடன் கடுக்காய்த்தூள், இந்துப்பு, சீரகம் இம்மூன்றை குழப்பி ஒரு சிறு பாத்திரத்திலிட்டு கொதிக்கும் சாதத்தின் நடுவில் வைத்து உருகவைக்கவும். பின்னர் இதனையொரு வெள்ளைத்துணியில் தோய்த்துப் பொறுக்கும் சூட்டில் கண்களில் தாரையாக விடவும். கண்களில் உண்டாகும். எழுச்சிகள் நீங்கும்.

**பாடபேதச்செய்யுள்:**

*வெண்ணெயி லபினிந்துப்பு மேவுநற் சீரமூன்று*
*நண்ணுறக் கூட்டிக்கொண்டு நற்கொதி கொதிக்கவைத்து*
*ஒண்ணிறத் துணியிலிட்டு ஒழுக்கிடத் தாரையாகக்*
*கண்ணிடை யெழுச்சிரோகங் கடுகவே யோடுங்காணே.*

என்பது.

### புறவளையம்

*பழகிய காடிநீரிற் பழம்புளியதைக் கரைத்து*
*இளகிய அபினிந்துப்பு விட்டதை யிழயக்காய்ச்சி*
*மழையெழநீர் ததும்புங் கண்ணிடை வளையப்பூசி*
*லழலெழும் விழியெழுச்சி யடிவலி யாறிப்போமே. (71)*

(இ-ள்.) நாட்பட்ட காடியில் பழம்புளியைக் கரைத்து அதனுடன் அபின், இந்துப்பு இரண்டையும் சேர்த்துக் கொதிக்கவைக்கவும். நீர் ததும்பும் கண்களைச் சுற்றிலும் பூசவும், விழியெழுச்சி , வலி முதலானவை தீரும்.

### எழுச்சிக்கு ரட்சை

*புள்ளடிக் கருவிதன்னை யணைத்துநீ புருவத்தின்கண்*
*சுள்ளடி வைத்தனத்தித் தோய்ந்திட யேழுநாட்சென்*
*றுள்ளது களைந்தவாறே யெண்ணையா லுன்புண்ணாத்திக்*
*கொள்ளவே விழியெழுச்சிக் குலைந்திடுங் கண்டிடாயே.*

(இ-ள்.) புள்ளடிக் கருவியினால் புருவத்தின்மேல் குறிவைத்துச் சுடவும். 7 நாட்கள் புண்ணை ஆறவிடாமல் வைத்து நீர் வடிந்தபின் 8வது நாளன்று புண்ணை ஆற்றிவிடவும். விழியெழுச்சிகள் குணமாகும்.

**குறிப்பு:-** புண்ணாறாமலிருக்க மிந்திரி எண்ணெயைப் போட்டுவருவது வழக்கமாகும்.

### படர்த்திக்கு அமிர்தாஞ்சனப் பொடி

*சீந்தித்தண்டு நற்கடுக்காய் தேற்றாங்கொட்டைக்*
*காக்கணம்வேர்*
*போந்தகொடுப்பைச் சிறுகீரைப் புகலோரிதழின் மூலமுட*
*னாய்ந்தோரொன்று சமன்கூட்டி யரைப்பீர்பழைய*
*காடிதன்னி*
*லேந்துதனத்தாய்! துரிசுதுத்த மினியசீனக் காரமுமே. (73)*

*மேவுமபின்சுண் ணாம்புக்கல் மிக்கஅமளை சோகிசங்கு*
*பாவுமருந்து முக்கழஞ்சு பகர்சம்பீரப் பழச்சாற்றிற்*
*றாலுவரைத்து அடையாக்கித் தழலிலெரித்து நுணுக்கியதை*
*கோவித்தெழுந்த படர்த்திதன்னி லிடவேகுணமாம்*
*குணமாமே. (74)*

*(இ-ள்.) சீந்தில்கொடி* — *கடுக்காய்த்தோல்*
*காக்கணம்வேர்* — *பொன்னாங்காணிவேர்*
*சிறுகீரைவேர்* — *ஓரிதழ்த்தாமரைவேர்*

இவைகளைச் சமனெடுத்துப் பழைய அதாவது புளித்த காடிவிட்டு நன்றாகவரைத்து அதனுடன்

*துரிசு* — *துத்தம்*
*சீனாக்காரம்* — *அபினி*
*சுண்ணாம்புக்கல்* — *சோழி*
*சங்கு*

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு வீதமெடுத்துத் தூள்செய்து சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு எல்லாவற்றையும்

நன்றாக அரைத்து அடையாகத் தட்டிக்காய்ந்தபின் ஓட்டிலிட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பற்பமாக்கி நுணிக்கிப் பத்திரப்படுத்தவும். படர்த்தி (நாக படல) ரோகத்திற்குப் போடவும்.

**புற்றுக்குச் சாராஞ்சனப் பொடி**

உமிரிச்சாரம் நமச்சாரம் வோதுந்துரிசு யவச்சாரம்
அமையுஞ் சத்தியட்சாரம் அடுத்தோரொன்று
கழஞ்சுகொண்டு
குமையச்செம்பீ ரச்சாற்றிற் கூட்டியரைத்து அடையாக்கி
அமுதமொழியா யோட்டினிலிட் டனலாய்
வெளுக்கப்புடம்வையே.(75)

வையேயெடுத்து வெண்கலத்தில் வைத்துவளையால்
மத்தித்து
மெய்யேசொன்னே னெள்ளளவு விழியிலெழுந்தப்
புற்றிலிட
தொய்யும்படலம் வரிச்சிவப்பு தோற்றுமெழுச்சிப்
புற்றிவைகள்
தொய்யில் தனத்தாய்! தீருமெனச் சொன்னார்முனிவர்
சொன்னாரே.(76)

(இ-ள்.) உமிரிச்சாரம் நவச்சாரம்
துரிசு யவச்சாரம்
சத்திச்சாரம்

இவைகளை வகைக்கு ஒருகழஞ்சு வீதம் எடுத்துக் கொள்ளவும். இவற்றை எலுமிச்சம்பழச்சாறுவிட்டு நன்றாக அரைத்து அடையாகத் தட்டிக் காயவைத்து ஓட்டில் வைத்துக் கவசித்துப் புடம் போடவும். புடமாறியபின் வில்லைகளை ஒரு வெங்கலத் தாம்பாளத்தில் வைத்து வளையினால் மத்திக்கவும். பின்னர் இதனை ஒரு சீசாவில் பத்திரப்படுத்தி விழியில் உண்டாகும் புற்றின்மேல் எள்ளளவு இடவும். மேலும் படலம், வரிச்சிகப்பு, எழுச்சி முதலானவைகளும் தீரும்.

***குறிப்பு:-*** உமிரிச்சாரம்-உமிரிப்பூண்டைக் கொளுத்தி அதிலிருந்து எடுத்த சாரம்.

**நயனப்புற்றுக்கு அறுவையும் மருந்தும்**

*[1]இவையெனில் மாறாதாகி லியல்பிது அறியச்சொன்னோம்*
*நவையிலா மத்தம்பூவி னடுவல்லி [2]யளவுசெய்யும்*
*அவைமுனை யதிலுளுந்தி னளவொருப் பொட்டதாக்கிக்*
*குவைவிழி யெழுந்தபுற்றிற் குறித்தெள்ளுப்*
*புதையவையே.(77)*

*ஏந்திழை மின்னேகேளா யேழுநா ளளவுஞ்செய்யச்*
*சாந்தமா மருந்துகேளாய்ச் சாறணைக் கிழங்கிந்துப்பு*
*தோய்ந்திடு மஞ்சள்துத்தந் துரிசெலி மருந்தோ டைந்து*
*காந்திடா தழலில்வெந்து கபிலையின் வெண்ணெய்*
*கூட்டே.(78)*

*கூட்டியே யரைத்துக்கொண்டு கூறிலோர் தினையின்தண்டி*
*வாட்டடங் கண்ணினாளே! வளர்ந்தெழு புற்றில்வைக்கக்*
*கேட்டபோ தோடுமென்று கிளிமொழி யுமையாட்கீசன்*
*நாட்டமா யுரைத்தவுண்மை நவின்றனர் முனிவர்தாமே. (79)*

*(இ-ள்.) மேல்கூறிய முறைப்படி புற்று தீராமலிருந்தால், அப்போது ஒரு ஊமத்தம்பூவின் நடுவில் காணும் பூநரம்பின் கனமுள்ள ஒரு செப்புக் கம்பியை எடுத்து அதன் முனையில் ஒரு உளுந்து நிற்கும் வண்ணம் குழிக்கரண்டியாகச் செய்துகொண்டு நயனப் புற்றின்மேல் ஒரு எள் பிரமாணம் சுரண்டவும். இவ்வாறு 7 நாட்கள் செய்யவும். பின்னர்,*

| | |
|---|---|
| *சாரடைக்கிழங்கு* | *இந்துப்பு* |
| *துத்தம்* | *துருசு* |
| *எலிப்பாஷாணம்* | |

1. இவையிலஃ தொழியா தாகி - என்றும் வேறுபாடம்.
2. செம்பு என்றும் வேறுபாடம்.

இவைகளை அனலில் வைத்துப் பொரித்துக் கபிலை நிறப் பசுவின் வெண்ணெய் கூட்டிக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்துக்கொண்டு ஒரு சிமிழில் பத்திரப்படுத்தி ஒரு தினையளவெடுத்து புற்றில் போட்டுவரவும். புற்றுகள் தீரும்.

## குமிளத்திற்கு லவணக்குழம்பு

*இந்துப்புத் துருசுதுத்த மெழுகடல் நுரையுரோணி*
*முந்துநற் சீனக்கார மொழியுமா வெண்ணெய்கூட்டி*
*நந்தினாற் கஞ்சத்திட்டு நையமத் தித்துக்கொண்டு*
*முந்துறு குமிளத்திட்டாற் றீர்ந்திடு மென்பர்முன்னோர். (80)*

(இ-ள்.) இந்துப்பு     துருசு
துத்தம்     கடல்நுரை
பீதரோகிணி     சீனாக்காரம்
இவைகளைச் சரியெடுத்து அரைத்துப் பசுவின் வெண்ணெய் சேர்த்து நன்றாக ஒரு வெங்கலப் பாத்திரத்திலிட்டு, மத்தித்துக்கொண்டு, குமிழ நோய்க்கு ஒரு பயறளவெடுத்து இட்டுவரவும். குமிழ நோய்கள் தீரும்.

## நீர்ப்பில்லத்திற்குப் பொன்னாங்காணிப் பற்பம்

*இவையுள்நீர்ப் பில்லந்தானே அசாத்திய மென்னலாகும்*
*நவையறும் பில்லத்திற்கு நவில்மருந் ததனைக்கேளாய்*
*சுவையுறு சீதைவேரும் சாறடை வேருமொக்கக்*
*கவைசிறு கீரைவேரும் காக்கண வேருமாமே. (81)*

*ஆகுமோ ரிதழின்மூல மவையொன்றோர் பலமுங்கூட்டி*
*நீவிரைந் தாறுதிங்கள் காடிநீர் தன்னிலிட்டுப்*
*பூவையே கழுவிப்போட்டுப் புகலுச்சம் பிரச்சாற்றால்*
*மேவிநல் மடலின் துத்தம் வேருக்குச் சமன்தான்கூட்டே. (82)*

*கூட்டிநீ யரைத்துவட்டாய்க் குலவுமோர் பாண்டத்திட்டு*
*நாட்டமா யெரித்தெடுத்து நந்தினாற் றேய்த்துக்கொண்டு*
*ஈட்டுநீர்ப் பில்லத்திற்கு யிவைபத்துப் போதிலிட்டால்*
*வாட்டடங் கண்ணினாளே! நீர்ப்பில்லம் மாய்ந்துபோமே.*

(இ-ள்.) நீர்ப்பில்லம் அசாத்யம் எனினும் கீழ்க்கண்டமுறை குணம் கொடுக்கக்கூடியது.

பொன்னாங்காணிவேர் சாறடைவேர்
சிறுகீரைவேர் காக்கணவேர்
ஓரிதழ்த்தாமரைவேர்

இவைகளை வகைக்கு ஒருபலம் வீதமெடுத்து இடித்து ஒருபாத்திரத்தில் போட்டு காடி சேர்த்து மூடிவிடவும். காடி சுவறியபின் மறுபடியும் காடிவிடவும். இவ்வாறு 6 மாதங்கள் வைத்திருக்கவும். கடைசியில் இவ்வேர் வகைகளைக் கழுவிக் கல்வத்தில் வைத்து எலுமிச்சம்பழச்சாறுவிட்டு வேர்களுக்குச் சரியளவு மடல் துத்தமும் சேர்த்து நன்றாக அரைத்துக் காலணா அளவுள்ள அடைகளாகத் தட்டிக் காயவைத்து ஒருசட்டியில் வைத்து எரித்துப் பற்பமாக்கவும். பின்னர் இதனை வெண்சங்கினால் நுணுக்கி வஸ்திரகாயஞ் செய்துகொண்டு, நீர்ப்பில்லத்திற்குக் கண்களில் ½ பயறளவு வீதம், இப்பற்பத்தை 5 நாட்கள் தினம் 2 போது இடவும். நீர்ப்பில்லம் குணமாகும்.

### அமரபில்லத்திற்கு

உள்ளிமைச் சதைவளர்ந்து தடித்தொடுப் பாயுமானா
லொள்ளிய கருவியாலே உந்திய தசையைநீவித்
தள்ளிடுங் கருவிநீக்கித் திரிகடுப் பொடியைத்தூவி
மெள்ளவே தேய்த்துநாள்மூன் றதற்குமேல் மருந்துகேளே.

வெள்ளைக்கடுக்காய் விதைபோக்கி வறுத்துநுணுக்கி மேலபினுந்
துள்ளுந்துத்த மிந்துப்புந்துருசும்வெதும்பிப் பொடியாக்கி
உள்ளகடுக்காய்ப் பொடிநேராய்க் கூட்டியிரத்தப் பில்லமதி
லள்ளியிடவே குணமாமென் றாயுள்வேத முரைப்பதுவே.

(இ-ள்.) இமையின் அடிப்புறத்திலுள்ள சதை வளர்ந்து தடித்து உறுத்திக் கண்களிலிருந்து நீர் வெளிவரும். இதனை சுத்தமான கத்தி (கருவி) யினால் நீவிவிட்டு அந்த இடத்தில்

திரிகடுப்பொடியை (சுமார் 1½ பயறளவிற்கு மேற்படாமல்) (சுக்கு, திப்பிலி, மிளகு)த்தூவி மெள்ளத் தேய்த்துவிடவும். 3 நாட்களுக்குப் பிறகு வெள்ளைக் கடுக்காயின் விதையை நீக்கி வறுத்து அதற்குச் சரியளவு அபின் துத்தம், இந்துப்பு, துருசு இவைகளையும் கூட்டிப் பொடித்து வைத்துக்கொள்ளவும். இரத்த பில்லத்திற்கு இச்சூரணத்தில் ½ பயறளவெடுத்துக் கண்களில் இடவும்.

**பில்லத்திற்குத் துத்தாதிப்பொடி (வேறு)**

*சொல்லுமிதற்கு மாறாதால் துத்தம்பலமொன் றதைநுணுக்கி*
*முல்லைநகையீ ராவின்பால் முழங்கநாழி யதில்விட்டு*
*மெல்லவெரித்துச் சுவறினக்கால் மிகுசம்பீரச் சாற்றரைத்துப்*
*1புல்லுமடைச்சட் டியில்வறுத்து அனலாய்வெளுக்கிற்*
*பொடிசெய்யே.(86)*

*செய்தேயெடுத்துப் பில்லமதிற் சேரவரைமண் டலமிடவே*
*தொய்யுஞ்சதையுட் நீர்படலந் தோன்றாதோடிப்*
*போமென்று*
*அய்யனுமையாட் குரைக்கவதை அறியதேவ ரதைக்கேட்டுச்*
*செய்யக்கமலக் கும்பமுனிக் குரைத்துச்*
*செப்புஞ்செய்கையிதே. (87)*

(இ-ள்.) துத்தம் ஒருபலம் எடுத்து நுணுக்கிப் பசுவின்பால் சின்னப்படி ½ விட்டு அடுப்பின் மேலேற்றிப் பால் வற்றும் வரைக்கொதியிடவும். பின்னர் இதனை எடுத்து எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்றாகவரைத்து, வில்லை தட்டிக் காய்ந்தபின் புதுச்சட்டியிலிட்டு, வெண்மையாக வறுத்துக்கொள்ளவும்.

இந்தப் பற்பத்தில் ½பயறளவெடுத்து 22 நாட்கள் பில்லநோய்க்குக் கண்களிலிடவும். சதைப்படலம், நீர்ப்படலம் இவை தீரும்.

1. அல்லுமடையச் சட்டிவைத்து அனலால் வெதுப்பிப் பொடிசெய்யே என்றும் பாடம்.

**குடற்பில்லக் குறிகள்**

இயம்பிக் குடறின்பில்லச் செய்கைதானேதோவென்னிற்
தயங்கிய முடியினுள்ளே தயங்கிடும் நாங்குள்போல
வயங்கிமை தடித்துவிம்மி வடியும்நீ ரதுவுமாறித்
தியங்கிடத் தடித்துமுட்டித் திமிர்ந்திடுங் குணத்தைத்தேறே.

(இ-ள்.) கண்களின் இமை நாக்குப்பூச்சிபோல் தடித்து விம்மும். கண்களிலிருந்து கண்ணீர்வடியும். அதுவும் தடிப்பாக வீழும்.

**குடற்பில்லத்திற்குச் சிகிச்சை**

இருவிரல் தன்னைக்கொண்டு இமையடி விம்மச்சேர்த்து
உருகவே பிடித்துப்பார்த்தங் குயர்ந்ததிற் கீறிக்கொண்டு
விரவிய நெட்டிபோல விரைந்தெழு மதனைவாங்கிப்
பரவிய வெண்ணெய் நெய்யால்பதம்பட
வொற்றுமென்றே. (89)

பதம்பட வொற்றிப்பின்னைப் பச்சைக்கற் பூரமிட்டே
விதம்பெற நெய்யிற்சீலை விம்மாமற் கட்டினாக்கால்
சுதம்பெற நீயுமங்கே சூழநெய் பூசுவீரே
விதம்பட வெட்டுநாளு மிப்படிச் செய்வதென்றே. (90)

செய்ததின் பின்புநீயுந் திரிகடுப் பொடியதன்னால்
மையது தேய்த்தாப்போலே மகிழ்ந்ததிற்
றோய்த்துக்கொண்டு
கைபழம் புளியைக்காய்ச்சிக் கண்ணிமை வளையப்பூசி
மெய்யிது வறியச்சொன்னேன் பில்லநோய்
விரைந்துபோமே. (91)

(இ-ள்.) இருவிரல்களினால் இமையைச் சேர்த்துப் பிதுக்கி, எங்கு உயர்ந்திருக்கிறதோ (அதாவது கட்டியான பாகத்தில்) சத்திரத்தினால் கீறி இரத்தத்தை வடிக்கவும். நெட்டிபோல் மிருதுவாக ஆனபின் அந்த இடத்தில்

வெண்ணெய், நெய் இவைகளில் ஒரு துணியைத் தோய்த்துச் சூடாக்கிப் பதமாக ஒத்தடம் கொடுக்கவும். பின்னர் பச்சைக் கற்பூரம் இட்டு, நெய்ச்சீலையினால் உறுத்தாமற் கட்டவும். இவ்வாறு 8 நாட்கள் செய்யவும். பின்னர் திரிகடு (சுக்கு, திப்பிலி, மிளகு)ச்சூரணத்தைத் தேய்க்கவும். ( ½பயறளவு) பழம்புளியைக் கரைத்துக் குழம்பாக்கிக் கொதிக்கவைத்துக் கண்களைச் சுற்றிலும் பிரவளையம் இடவும். பில்ல நோய்கள் நீங்கும்.

**மரிசாதித் தைலம்**

*செய்யமிளகு படிரெண்டு யிடித்துச்சீலை தனிற்கட்டித்*
*தொய்யுந்தண்ணீர் நற்குறுணி துலங்கவிட்டு நாலுபடி*
*பய்யக்காய்ச்சி வடித்ததிலே பகருங்கையான் பாலினநீ*
*ருய்யுமெண்ணே யவைநாழி யுடனேவிட்டுக் குறுந்தோட்டி*

*★மேவுமொன்ப துபலமுமிடித்துப் பதக்கு வெள்ளமிட்டுத்*
*தாவுமிரண்டு படியானாற் றானேயெண்ணெ யுடன்விட்டுப்*
*பாவுதேவ தாரமொரு பலமுமிடித்துப் பொடியதனைத்*
*தூவிப்பதத்தில் வடித்துமுழு கிடவேபில்லந் தோன்றாதே.*

*குறித்திடு புருவமையங் குவைபிட ரிவையில்மின்னே*
*நெறிபடு பொடியினாலே நீரகம் பறிந்துகொண்டு*
*உறுத்திட ரட்சைசெய்து உருகவே புண்ணதாக்கிச்*
*செறித்திடும் விழியினாளே! பில்லநோய் தீருந்திண்ணம்.*

*(இ-ள்.)* மிளகு 2 படி எடுத்து இடித்து ஒரு துணியில் முடிந்து ஒரு பாத்திரத்திலிட்டுச் சுத்தஜலம் 4 மரக்கால்விட்டு, அடுப்பின் மேலேற்றி 4 படியாகச் சுண்டக்காய்ச்சவும். அக்கஷாயத்துடன்,

| | |
|---|---|
| கையாந்தகரைச்சாறு | 1 படி |
| பசுவின்பால் | 1 படி |
| இளநீர் | 1 படி |

★"மேவுவேரின் பதின்பலமு மிடித்துப்பதக்கு நீரையிட்டுத்" என்றும் பாடம்.

இதனுடன் குறுந்தோட்டிவேர் 3 பலம் எடுத்து இடித்து 2 மரக்கால் ஜலத்திலிட்டு 2 படியாகக் காய்ச்சிய கஷாயத்தைச் சேர்த்துக்கொள்ளவும். இதனுடன் சுத்தமான நல்லெண்ணெய் 2 படியுஞ் சேர்த்துத் தேவதாரு சூரணம் 1 பலமும் போட்டு அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் வடிக்கட்டி வைத்துக்கொள்ளவும். இதனால் தலைமுழுகிவரப் பில்ல நோய்கள் தீரும்.

### பில்லரோகத்திற்குச் சஸ்திர சிகிச்சை

புருவமையம், பிடரி, நெற்றிப்பொட்டு முதலான இடங்களில் காணும் நரம்புகளை (அதாவது இங்கு Veins ஆகும்) அறிந்து தீயினால் சுட்டுப் புண்ணாகும்படி செய்து ஆற்றவும். இதனாலும் பில்லநோய் நீங்கும்.

### இமைத்தடிப்பிற்குத் திரிபலாதித் தைலம்

*திரிபலை வேங்கைக்காதல் செய்யகூவிளைவேர் சீந்தில்*
*நறுவிய சித்தாமுட்டி நன்னாரி வேரிலாமிச்*
*சுருவெட்டி மிளகு தான்றி போடமுக் கிராவேர் மின்னே*
*நறுவிய பன்னிரண்டு மருந்தொன்று பலமோநாலே. (95)*

*ஒக்கவே தரித்திடித்து வொன்றுநாற் குறுணிநீரிற்*
*புக்கியெட் டொன்றதாக்கி வடித்தெண்ணெய்*
*பொருத்தநாழி*
*தக்கபா லிளநீர்கையான் சதாவரிக் கொடுப்பைச்சங்கு*
*மிக்கசம் பீரமற்ற வெற்றிலை கொற்றான்நெல்லி. (96)*

*இவையொன்று சாறுநாழி யெண்ணெயி னோடுவிட்டுச்*
*சுவையுறு மதுரங்கோட்டஞ் சுக்கொடு தேவதாரம்*
*நவையறு நாகப்பூவும் நாரணமேல மாஞ்சி*
*சவையுறு சாதிப்பத்திரி சந்தனங் கிராம்புசாதி. (97)*

*கச்சோலங் கார்கோலோடு கருதுவெட் பாலைவங்கம்*
*வச்சவே றொன்றுமூன்று கழஞ்சுகொள் மானேநீயும்*

வெச்சென விடித்துத் தூவிப் பதத்தினால்வெந்த
வெண்ணெய்
இச்சையாய் முழுகுவோர்க்கு இமையினிற் றடிப்போமே.

(இ-ள்.) கடுக்காய்த்தோல் நெல்லிவற்றல்
தான்றித்தோல் வேங்கைப்பட்டை
வில்வவேர் சீந்தில்கொடி
சித்தாமுட்டிவேர் நன்னாரிவேர்
இலாமிச்சம்வேர் வெட்டிவேர்
மிளகு தான்றிவேர்
அமுக்கிராக்கிழங்கு

முதலான சரக்குகள் வகைக்கு 4 பலம் வீதமெடுத்துச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு பாத்திரத்திலிட்டு 4 மரக்கால் சுத்த ஜலம் விட்டு அடுப்பின் மேலேற்றி எட்டிலொன்றாக வற்ற வைக்கவும். இதனுடன்,

| | |
|---|---|
| சுத்தமான நல்லெண்ணெய் | 1 படி |
| பசுவின்பால் | ,, |
| இளநீர் | ,, |
| கையாந்தகரைச்சாறு | ,, |
| தண்ணீர்விட்டான்கிழங்குச்சாறு | ,, |
| பொன்னாங்காணிச்சாறு | ,, |
| சங்கங்குப்பியிலைச்சாறு | ,, |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, |
| வெற்றிலைச்சாறு | ,, |
| கொற்றான்சாறு | ,, |
| நெல்லிக்காய்ச்சாறு | ,, |

இவைகளை ஒன்று கலந்து,

அதிமதுரம் கோஷ்டம்
சுக்கு தேவதாரம்
சிறுநாகப்பூ நாகணம்
ஏலக்காய் சடாமாஞ்சில்
சாதிப்பத்திரி சந்தனத்தூள்
பூலாங்கிழங்கு காகோலிவேர்
வெட்பாலை கிராம்பு

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு (120 குன்றி நிறை) எடுத்து, இடித்து முன் எண்ணெயுடன் சேர்த்து அடுப்பின் மேலேற்றி எரித்துப் பதத்தில் இறக்கிப் பத்திரப்படுத்தவும். இத்தைலத்தினால் தலைமுழுகி வரவும். இமைத்துடிப்புகள் நீங்கும்.

## பஞ்ச துத்தானஞ்சப்பொடி

சீனாக்காரந் துரிசுதுத்தஞ் செய்யநிமிளை மனோசிலையுந்
தானத்தெடுத்துச் சம்பீரச் சாற்றிலரைத்து வட்டாக்கிக்
கானக்குழலாய்! சட்டிவைத்துக் கனலா லெரித்து
வெளுத்ததென்றா
லூனற் றிகழும் விழிக்கெழுத இமையின் றடிப்பு
வோடிடுமே. *(99)*

(இ-ள்.) சீனக்காரம் துரிசு
துத்தம் நிமிளை
மனோசிலை

இவைகளைச் சமனெடுத்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு நன்றாக அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துச் சட்டியில் வைத்து அடுப்பின்மேல் வைத்து வெண்ணிறமாகும்வரை வறுக்கவும். இம்மருந்தில் பயற்றம்பருப்பளவு எடுத்துக் கண்களில் போட்டுவர இமைத் தடிப்புகள் மாறும்.

## இழி கண்ணிற்கு நவச்சாரக் குழம்பு

நவச்சாரந் துரிசிந்துப்பு நவிலிது ★மூன்று மூன்றாய்
சுவப்பெறு வெண்ணெய் கூட்டிச் சுணங்கவெங்
கலத்திலிட்டு
அவையினிற் சங்கினாலே யரைத்துமத் தித்துக்கொண்டு
இவையினை யிழிச்சக்கண்ணி லெழுதிட வேகு
மென்றார். *(100)*

★"கழஞ்சு மூன்றாய்" எனப்பாடபேதம்.

(இ-ள்.) நவச்சாரம், இந்துப்பு, துரிசு இவைகளை வகைக்கு 40 குன்றிநிறை எடுத்து ஒரு வெங்கலக் கல்வத்திலிட்டுப் பசுவெண்ணெய் கூட்டி ஒரு சங்கினால் அரைக்கவும். இம்மருந்தைப் பத்திரப்படுத்தி இழி கண்களுக்கு இட்டு வரவும். இழிகண்கள் தீரும்.

## முடமயிருக்கு இங்வாதிக் குழம்பு

சோமனாதி முக்கழஞ்சு துரிசு கழஞ்சு மிவை ரண்டும்
நாமே சொன்னோம் வெதுப்பியதை நவிலும் வெண்ணெய்
தனிலிட்டுச்
சாமமரைத்து முடரோமஞ் சாறு மிமையி லெள்ளளவு
வாம தனத்தாய்! எழுதினாக்கால் வளரும்
ரோமமுறிந்திடுமே. (101)

(இ-ள்.) சோமனாதி காயம்(வெள்ளைப்பூண்டு) 120குன்றி, துருசு 40 குன்றி இவைகளை அனலில் பொரித்து, வெண்ணெயுடன் குழைத்து ஒரு சாமம் நன்றாக அரைத்து,முடரோமம் இருக்கும் இமையில் ஒரு எள்ளளவு தடவி வரவும். முடமயிர் முறிந்துபோம்.

## பற்பரோகத்திற்குத் திரிபலாதி அஞ்சனப்பொடி

திருபலை கடிய காணந் தேறுமோ ரிதழின் மூலம்
நறுவிய அண்டத்தோடு நந்துசா றடையின் மூலம்
மறுபடி மடலின் துத்தம் வருசிறு கீரை சீதை
யுறுவது சீனாக்கார மொன்றுமுக் கழஞ்சுதானே. (102)

இவை யெலுமிச்சஞ் சாற்றி லியல்புற வரைத்துலர்த்தி
அவையிதைச் சட்டியிலிட் டனலெரி வெளுத்துதானால்
நவையற வெடுத்துக் கொண்டு நவில்பற்ப ரோகத்திட்டால்
இவையுறு பற்பரோக மேகுமென் றியம்பினாரே. (103)

(இ-ள்.) கடுக்காய்த்தோல் நெல்லிவற்றல்
தான்றித்தோல் கொள்ளு
ஓரிதழ்த்தாமரைவேர் முட்டையின் ஓடு
சாறடைவேர் மடல்துத்தம்
சிறுகீரைவேர் பொன்னாங்காணிவேர்
சீனாக்காரம்

இவைகளை வகைக்கு 120 குன்றி நிறை எடுத்து இடித்து, ஒரு கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச்சாறு விட்டு நன்றாக அரைத்து, வில்லைகளாகத்தட்டி உலர்த்தி ஒரு புதுச்சட்டியில் வைத்து வெண்ணிறமாகும்வரை வறுக்கவும். இந்த பற்பத்தில் பயற்றம்பருப்பளவெடுத்துக் கண்களில் போட்டுவரப் பற்பரோகந் தீரும்.

### கழலைக்குணம்

உருண்டடெழு வியாதிதன்னை நேர்பிளந் துள்ளே
தோன்றும்
மருண்டிடு முளையை நீக்கி வழுத்திய உருவை விட்டுப்
பொருந்திய குருதியுண்டாற் பூவையே யெண்ணெய்
நெய்யாற்
றிருந்தவே தாரை குத்தி வேதனை தீர்த்திடாயே. (104)

(இ-ள்.) கண்களிலுண்டாகும் கழலைக்கட்டியைப் பிளந்து உள்ளே தோன்றும் முளையை நீக்கவும். அதிகமாக இரத்தம் வடிந்தால், எண்ணெய், நெய் இவைகளால் தாரை செய்து வேதனையையும் தீர்க்கவும்.

### இமைநீர்ப்பாய்ச்சலுக்கு

அலசன வில்வாதித் தைலம் யோகமாய் வடிக்கும்போது நாழி எண்ணெய்க்கு 1/8 படி மிளகும், அரைக்கழஞ்சு அபினும் பொடித்துப் போட்டுக்கொள்ளவும்.

### சுற்றுக் குலைவிற்குப் பஞ்ச லவணக் குழம்பு

*பஞ்சலவணம் பொரிக்காரம் ★பகருந்துரிசு யிவையேழு*
*மிஞ்சா தொன்று கழஞ்சுகொண்டு மின்னே*
*வெண்ணெயதிலிட்டு*
*ஒஞ்சாதரைத்து விழிக்கெழுக ஓடுவு மயக்க முடரோமந்*
*துஞ்சுச் சுற்றுக் குலையிவைகள் தோன்றாதோடிப்*
*போமென்றே. (105)*

(இ-ள்.) பஞ்சலவணம், பொரிக்காரம், துரிசு இவைகளை வகைக்கு 40 குன்றி நிறையெடுத்துக் கல்வத்திலிட்டுப் பசுவெண்ணெய் சேர்த்து நன்றாக அரைக்கவும். இதில் ஒரு பயறளவெடுத்துக் கண்களிலிட்டுவர ஒடுவு, மயக்கம், முடமயிர், சுற்றுக்குலைவு முதலானவைகள் தீரும்.

**பஞ்சலவணங்களாவன:-** இந்துப்பு, அட்டுப்பு, கறியுப்பு, கடலுப்பு, வளையலுப்பு என்பன.

### நேத்திரத்திலுள்ள கிருமி தோஷத்திற்கு "கள்ளிவேர் மை"

*நானாங் கள்ளி வடக்காக நாடும் வேரைப் பறித்துலர்த்தித்*
*தேனேசீலைதனிற்சுருட்டிச் சிற்றாமணக்கி*
*னெண்ணெயினால்*
*மானே யெரித்து வெங்கலத்தில் மையே பற்ற வைத்ததனைக்*
*கானார் குழலால் எழுதினாக்கால் கருதுங்கிருமி*
*மாய்ந்திடுமே. (106)*

(இ-ள்.) கள்ளிச்செடியின் வடக்கை போகும் வேரைப்பறித்து உலரவைத்துச் சீலையில் சுருட்டி, ஆமணக்கெண்ணெயில் தோய்த்துத் திரியாக்கிக் கொளுத்தி, அதிலிருந்து எழும்பும் புகையை ஒரு வெங்கலப் பாத்திரத்தில் பிடிக்கும்படி கவிழ்த்து மைப்பறவைக்கவும். இதனை ஆமணக்கெண்ணெயிலேயே குழைத்துப் புழுவெட்டுக்கு இடவும்.

---

★ "பகருந்துரிசு யிவையிரண்டும்" என்றும் பாடம்.

## நேத்திர வாயுவிற்கு

நடுநரம் பதிற்குடோரி செய்திடு நயந்த ரத்தங்
கடுகவே பாய்ந்து போனால் கருதும்வேப் பெண்ணெய் நாழி
உடன் வசம் புள்ளி சந்நி நாயகம் மூசுறு முட்டை
யடவிலே நாங்குள் கோழிக்காரமும் வடமுகமாமே. *(107)*

ஆந்திரி கடுகு வெட்பா லரிசியோ ரொன்று தானே
ஏந்திழை நீவிரைந்தோர் கழஞ்சிட்டு வெந்தெண்ணெய்
சேர்ந்த நேத் திரத்தின் வாயுத் தீர்த்திடச் சிரத்தி லப்பிக்
காய்ந்தநீ ரதனினாலே கழுவிடக் கடுப்புப்போமே. *(108)*

(இ-ள்.) புருவத்தின் நடுநரம்பில் குடோரி செய்து (சிறிது கீறி) இரத்தத்தை வெளியாக்கவும். பின்னர்

| | |
|---|---|
| வேப்பெண்ணெய் | ஒருபடியுடன் |
| வசம்பு | பூண்டு |
| சந்நிநாயகம் | முசுறுமுட்டை |
| நாங்கூழ் (மண்புழு) | கோழிக்காரம் |
| கடுகு | வெட்பாலையரிசி |

இவைகளை வகைக்கு ஒரு கழஞ்சு (40 குன்றி நிறை) எடுத்து நசுக்கி ஒன்று கலந்து அடுப்பின் மேல் வைத்து எரித்துப் பதத்தில் இறக்கவும். இத்தைலத்ததைத் தலையில் தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ்செய்துவரவும். கடுப்புகள் தீரும்.

## கண்ணோவிற்கு

கண்ணது ★ கடுத் தழன்று கலங்கியே வருகுதென்றால்
நண்ணிய உள்ளங்கைகாலில் நறுநெய்யை மிகவுமூட்டித்
திண்ணிய தவிடுமாவால் தேய்த்ததினழுக்கைப் போக்கித்
தண்ணிய காடியாலே கழுவிச் சந்தனத்தைத்தப்பே. *(109)*

---

★ கண்ணது பலகால் நொந்து கடுகியே வழன்று வந்தால்
நண்ணிய உள்ளங்காலில் நறு நெய்யை மிகவுந்தேய்த்து
திண்ணிய தவிடு மாவால் சிறக்கவே தூவிவைத்து
தண்ணெனக் கழுவி நல்ல சந்தனம் பூசத்தீரும். (அ.ந.வி.500)
(குணவாகடம்-செய்யுள். 35)

(இ-ள்.) கண்கள் கடுத்து, அழன்றுக் கலங்கினால் இரவு படுக்கைக்குப் போகுமுன் உள்ளங்காலில் பசுவின் நெய்யைச் சூடு பறக்கத் தேய்த்து, தவிட்டில் காலையூன்றி அப்படியே படுத்துக்கொள்ளவும். மறுநாள் காலையில் அதனைக் காடிவிட்டுக் கழுவி விட்டுச் சந்தனம் பூசவும்.

**கண்ணோவுக்கு வரைவு**

★பங்கயக்கண் ணதுநோகில் பருக்கையுறுத்தவும் நடவார்
செங்கையைக் கண்களிலொத்தார் தின்னாரிலைக் கறி
மாங்காய்
அங்கையில் வெற்றிலை யேந்தார் அருகிலிருந்தாரோடும்
பேசார்
மங்கை யுவப்ப தப்பாலே மருத்துவன் சொன்ன
துன்பாலே.(111)

(இ-ள்.) சிறு சிறு கற்கள் உள்ள இடங்களில் நடக்கக்கூடாது. அடிக்கடி கையினால் கண்களைக் கசக்கக் கூடாது. இலைக்கறி, மாங்காய் இவைகளை உட்கொள்ளக் கூடாது. வெற்றிலைப்பாக்கும் போடக்கூடாது. ஸ்திரீகளுடன் பேசுவதோ அல்லது சேரவோ கூடாது.

**கண்ணோவிற்கு பிரவளையம்**

நேற்றைக்கு... கண்ணொந்து நெடுமூச்செறிந்து கிடவாதே
சோற்றுப் பத்துந் திருநீறுந் தோகையணையார்
முலைப்பாலுங்

---

செங்கயற்கண் மிகநொந்தால் சேர்க்கே னிலைக்கறி நீர் மோர்
பங்கையச்சீரடிநோகப் பருக்கையு முறுத்திட நடவேன்
அங்கையற் கண் ணியினைச் சேரே னருகிருந்தாலும் பேசேன்
மங்கையை யுகப்பது மப்பாலே மருத்துவன் சொல்வதுபோலே.
(அகஸ்தியர் குணவாகடம் - செய். 33)

கோற்றுப்படாமற் கலந்தேய்த்துக் கண்ணைச் சூழ
வலைவீரராய்த்
தோற்றுப்போமே கண்ணோவுஞ் சொன்னார் முனிவர்
சொன்னாரே. (112)

*பாடபேதச்செய்யுட்கள்:*

சோற்றுப் பற்றுந் திருநீறுந் தோகையனையாள்
முலைப்பாலும்
போற்றுஞ் செப்புக் கல்வத்திற் பொருந்து குழவி
யாலரைத்துக்
காற்றுப்படாமல் காத்திருந்து கண்ணைச் சூழ
வரைந்தாக்கால்
தேற்றுப்போமே கண்ணோவுஞ் சொன்னார் முனிவர்
சொன்னாரே. (அ.ந.வி.417)

(இ-ள்.) சோற்றுப்பருக்கை, விபூதி இவ்விரண்டையும் தாய்ப்பால்விட்டு நன்றாக அரைத்துக் கண்களைச் சுற்றிலும் பிரவளையமிடவும். கண்ணோய்கள் தீரும்.

**கண்ணோவுக்கு ஒத்தடம்**

ஆவின்[1] பாலிரு நாழி தன்னி லாம்புளியிலை யிரு
பிடியிட்டுக்
காவி யம்புனைக் கண்மடவீர்! கடுக்காய்த்
திரளக்காய்ச்சியதைச்
சீவிச் சீலை தனிலிட்டுத் திறமாய்ப் பொட்டணந்
தானொத்தக்
கூவி வலிக்குங் கண்வலிதான் குணமாங் கண்மடர்
கோதையரே! (113)

(இ-ள்.) பசுவின்பால் 2 படி எடுத்து புளியிலை 2 பிடி எடுத்து மூட்டையாகக் கட்டி அதிலிட்டுத் திரளக் காய்ச்சி

1. "ஆவின்பாலுமிரண்டுபடி அதனிற்புளியிலையிரண்டுபடி" என்று பேதம்.

அப்பொட்டணத்தை எடுத்துப் பொருக்குஞ் சூட்டில் கண்களைச் சுற்றிலும் ஒத்தணம் இடவும். கண்வலி தீரும்.

## கண்நோய்க்கு மாத்திரை

ஆறுகூறு கறுப்புப்பு ஐந்து கூறு கனமிளகு
தேறுந் திப்பிலி முக்கூறு தேற்றான் விரையிந் துப்புடனே
ஏறிட்டேழு நாளரைத்து இந்தக் குளிகை வருகுதெனப்
பாறிக்கண்ணோ வுள்ள தெல்லாம் பன்னிருயோசனை
யோடிடுமே. (114

| (இ-ள்.) | கரியுப்பு | 6 கூறு |
|---|---|---|
| | மிளகு | 5 கூறு |
| | திப்பிலி | 3 கூறு |
| | தேற்றான்விதை | 1 கூறு |
| | இந்துப்பு | 1 கூறு |

இவைகளைக் கல்வத்திலிட்டுத் தண்ணீர்விட்டு ஏழுநாட்கள் அரைத்து நீண்ட மாத்திரையாக உருட்டி வைத்துக் கொள்ளவும். இதனை இழைத்துக் கண்களிலிடப் பற்பல கண்ணோய்களுந் தீரும்.

## கண்ணோவுக்குச் சீலைமருந்து

சம்பீரத்தின் சாறுழக்குச் சாருங்கரியி னுப்புழக்கு
வம்பார்முலையாய்! இந்துப்புத் துரிசுகழஞ்சு மத்தித்துச்
செம்பாகுதல்வெங் கலமாலுஞ் சாற்றை
வெண்சீலையிற்றுவைத்து
தம்பாரமதாய் தப்பினக்கால் சாறும்பச்சை நிறமாமே. (115)

சீலை பணத்தி னளவெடுத்துத் தேனார் முலைப்பா
லிற்கரைத்து
ஆலமெனவே யிருவிழி லனத்தி யொழுக்க வலியிடிகள்
மேலுஞ் சிவப்பு நீர்ப்படல மெல்லாந் தீரு மிதுவென்று
ஆலமுண்ட மிடறண்ண லுரைத்தாருரைதா
ரவனியிலே. (116)

(இ-ள்.) எலுமிச்சம்பழச்சாறு 1 உழக்கு

துரிசு 40 குன்றி

கரியுப்பு 1உழக்கு

இந்துப்பு 40 குன்றி

இவைகளை வெங்கல அல்லது செப்புக் கல்வத்திலிட்டு நன்றாகவரைத்து ஒரு வெள்ளைத் துணியிலூட்டவும். காய்ந்தபின் மறுபடியும் ஊட்டவும். இவ்வாறு பச்சை நிறமாகும்வரை ஊட்டிக்காயவைத்தெடுத்த சீலையில் ஒரு பணத்தினளவெடுத்து முலைப்பாலில் நனைத்து இரு விழிகளிலும் பிழியவும். கண்வலி, கண்சிவப்பு, நீர்ப்படலம் முதலானவை தீரும்.

### கருப்பிலமுகியின் குளிகை

சேங்கொட்டை ரோமமிந்து[1] திருகுகள் ளியின்வேர் நாலும்
பூங்கொடிக் கருக்கிக்கொண்டு புகலுஞ்சம் பீரச்சாற்றா
லாங்கதை[2] யரைத்துக்கொண்டு குளிகை செய்
முலைப்பால்விட்டுத்
நீங்குறு கிருமிச் சுற்று க்குலைவிற்குந்
தேய்த்துப்போடே.(117)

(இ-ள்.) சேங்கொட்டை பீதரோகிணி

இந்துப்பு திருகுக்கள்ளியின்வேர்

இவைகளை ஒரு சட்டியிலிட்டுக் கருகும்வரை வறுத்துக் கல்வத்திலிட்டு, எலுமிச்சம்பழச்சாறுவிட்டு நன்றாக அரைத்துக்கொண்டு மாத்திரையாகச் செய்துகொள்ளவும்.

1. " ரோணி " என்று பாடபேதம்.

2. "ஆங்கரைத் துருட்டிவைத்து அன்னையர் பாலிற்றேய்த்துத்
தீங்குறுங் கிருமிசுற்றுக் குலைவுக்குத் தீட்டப்போமே".
என்றும் பாடபேதம்.

இதனைத் தாய்ப்பாலில் இழைத்துக் கண்களிடப் புழுவெட்டு, சுற்றுக் குலைவு இவை தீரும்.

### அமிர்தயோகம்

*உண்டு கை விளக்கிய உதகங் கண்ணிலும்*
*மண்டல முகத்தினும் வயிற்றினும் மிடு*
*விண்டிடு முத்தெனப் பல் விளக்கிடு*
*மண்டர் சொற்கண்ணினுந் கமுதயோகமே. (118)*

(இ-ள்.) சாப்பிட்டபின் கைகழுவும்போது கண்களையும் சேர்த்துக்கழுவவும். அப்படியே முகம், வயிறு இவ்விடங்களையும் தேய்க்கவும். பற்களை முத்துப்போல் விளக்கிவரவும். இவைகள் கண்களுக்கான அமிர்த யோகங்களாம்.

### கண் துலங்க

*தின்னார் பண்ணைச் சிறுகீரை தின்னமறந்தார் சீர்கேடாய்*
*பொன்னாங்காணிக் கூறிகூட்டார் பூசார்பாதம்*
*நெய்யுண்ணார்*
*பண்ணார் மதியந்தனைப்பாரார் பால் வார்த்துண்ணார்*
*பல்தேயார்*
*கண்ணார் நோயால் கவல்வ ரதையாமும்*
*சொல்லக்கடவோமே. (119)*

(இ-ள்.) பண்ணைக்கீரை, சிறுகீரை, பொன்னாங் காணிக்கீரை இவைகளைச் சாப்பிடவும். பாதங்களில் இரவில் பசுநெய்யைப் பூசவும். நெய் சேர்க்கவும். சந்திர தர்சனம் செய்யவேண்டும். இரவில் சாப்பாட்டில் பால் வார்த்து உட்கொள்ளவேண்டும். தினந்தோறும் முறைப்படி பல் துலக்கவேண்டும். இவ்வாறு செய்யாதவர் கண்ணோயினால் பீடிக்கப்படுவார் என்பதை நாங்கள் கூறுவது எங்களது கடமையாகும்.

**கண்களுக்கு மருந்துகள் தீட்டும் முறை**

மருந்துதா னெழுதும்போது வாய்த்தவா சனத்திலிருந்து
கருங்குழல் மானேகேளாய் கவின்பெறக்[1] கிழக்குநோக்கி
இருந்தபின் னப்பால்நீயும் மியல்புற யிடத்திலிட்டு
வருந்திப்பின் வலத்திலிட்டால் மாசறத் தீருங்காணே. *(120)*

(இ-ள்.) கண்ணில் மருந்து தீட்டும்போது உனக்காக ஏற்படுத்தப்பட்ட ஆசனத்தில் அழகுபெறக் கிழக்குத் திக்கை நோக்கி உட்கார்ந்து முதலில் இடதுகண்ணில் மருந்தையிட்டுப் பிறகு வலது கண்ணில் மருந்தையிட்டால் வியாதியானது குற்றமற நீங்கும்.

**தன்வந்திரி வைத்தியம் இரண்டாம் பாகம் முற்றும்.**

---

1. "சுகவீனம்போல் கிழக்கு நோக்கி" அதாவது வெண்ணெயைப் போல் இளசக்கூடிய மனதுடன் கிழக்குநோக்கி இருந்து என்றும் பாடபேதம்